உ

கணபதி துணை

தொல்காப்பியச் சண்முகவிருத்தியின்

முதலாவது பகுதியாகிய

# பாயிரவிருத்தி.

இது

தஞ்சாவூர் ஜில்லா டாக்டர்

லெப்டினெண்ட் கர்னல் **H. M.** ஹக்கீம் I. M. S.

துரையவர்கள் தமக்குச்செய்த உயிருதவியின்

ஞாபகசின்னமாகச் சோழவந்தானூர்

அரசஞ் சண்முகனாரால்

சமர்ப்பித்து

ஸ்ரீலஸ்ரீ சுந்தரசுவாமிகள் அதிட்டானம்

ஸ்ரீலஸ்ரீ சிவானந்தசுவாமிகள் கட்டளையிட்டவண்ணம்

அரிமளநகரத்துப் பிரபுசிகாமணிகளாகிய

வணிகர்களது பொருளுதவிகொண்டு

அரித்துவாரமங்கலம்

மகா-௱-௱-ஸ்ரீ

வா. கோபாலசாமி ரகுநாத ராஜாளியாரவர்கள்ால்

தஞ்சை

“ஸ்ரீ வித்தியாவிநோதினி முத்திராசாலையில்”

பதிப்பிக்கப்பட்டது.

இதன் விலை ரூ. 2.

1905.

**To**

# eut: Colonel H. M. Hakim, I. M. S.

DISTRICT SURGEON, TANJORE,



This little volume forming the first part of Shanmu- firutti, a commentary on Tholkappiam, the earliest work Tamil Grammar, written some twelve thousand years ), by Thiranathumakkini Maharishi, the first disciple of jastya Maharishi, justly revered as the Lord of Rishis,

is,

by kind permission,

st respectfully dedicated in token of the gratitude, esteem, 1 admiration for the lease of life granted to his patient,

THE AUTHOR.

## இப்புத்தகத்தில் அடங்கியவை.



1. நன்றிகூறல்.
2. கடவுள்வாழ்த்து.
3. பாயிரவிருத்தி.
4. பொதுப்பாயிரச்சூத்திரமும் பிறவும்.
5. மேற்கோளாகக்கொண்ட நூலுரைகள்.
6. மறுக்கப்பட்ட நூலுரைகள்.
7. விஷயசூசிகை.
8. பிழையுந்திருத்தமும்.
9. பிரகடனபத்திரம்.

படிக்கத்தொடங்குமுன் பிழைகளைத் திருத்திக்கொள்ள
ண்டும.

உ

கணபதிதுணை.

# நன்றிகூறல்.



"வீங்குகட லுடுத்த வியன்கண் ஞாலத்துத்
தாங்கா நல்லிசைத் தமிழ்க்குவிளக் காகென
வானோ ரேத்தும் வாய்மொழிப் பல்புக
ழானாப் பெருமை யகத்திய னென்னு
மருந்தவ முனிவ னாக்கிய முதனூல்
பொருந்தக் கற்றுப் புரைதப வுணர்ந்து
நல்லிசை நிறுத்த தொல்காப்பிய" னரு
ளொருவ னாய பெருமா னகலி
னல்லலற் றுயரிய வன்னோ னடிமல
ரெல்லொளி பரப்புமா லெற்றும்
வல்லிரு ணீங்க மனத்துநின் றினிதே.

உலகத்துவழங்கு மொழிகள் பலவற்றினுஞ் சிறந்து பண்டைக்காலந்தொட்டே யுண்டருமுனிவருங்கொண்டாடப்பெற்று வழங்குவது நமது தண்டமிழ்மொழியே யென்பதூஉம், அம்மொழிக்கு முதனூலாவது வானோரேத்தும் வாய்மொழிப் பல்புகழானாப் பெருமை யருந்தவ முனிவரென்னு மாசிரிய ரகத்தியனாராக்கிய அகத்தியமா மென்பதூஉம், அந்நூலு மதன்வழித் தோன்றிய பிற பன்னூலு மிறப்ப இக்காலத்தும் வீழாஞாயி றென நின்று விளங்கி வாழ்வது அகத்தியத்தின்வழித் தோன்றிய மகத்துவமுடைய நூல்கள் பலவற்றினு முயர்ந்த வொல்காப் பெருமைத் தொல்காப்பியமொன்றே யென்பதூஉம், அத்தொல்காப்பியத்திற் கொருவர் பின் னொருவராகத் தம்மு ளொருவரை யொருவர்மறுத் துரையெழுதிய வித்தக ரிதுகாறு மைவரான ரென்பதூஉம், அவ்வுரைகளைத் தழுவிச் செய்த நன்னூன்முதலாய பின்னூல் பலவு முன்னூல்போலப் போக்கற்றனவல்ல வென்பதூஉங், கற்றறிந்த செப்பமுடையா ரெல்லாரு மொப்ப முடிந்தவே யாகலின், அவற்றைப்பற்றி யீண்டொன்றேனு முரையேன். அத்தொல்காப்பியத்திற்கு உத்தமவுணர் வொருசிறிது மில்லாத யானு முரைசெய்யத் துணிந் தெண்ணிய வகையும்,

உரைசெய்யத்தொடங்கியபின் இடையிடையே நண்ணியபகை
யும், அவ்வக்காலை யுடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே யிடுக்
கண் களைகவென்ற பெருநாவலர துறுதிமொழி கடைப்பிடித்துப்
பயன்றூக்கா துதவிசெய்து நகைசெயற்பொருட்டன்றி நட்ட
நயன்பெரிய புண்ணியசிலர் பண்ணியதகையும், அவருட் பல்லோ
ரளித்தபொருளின் றொகையுஞ், சில்லோர்செய்த அருளின்மிகையு
மென இவையே யுரைக்கப் புக்கேன்.

ஆசிரியர் அகத்தியனார் மாணாக்கர் பன்னிருவருள்ளுஞ்
சிறந்தாரும், சமதக்கினிமுனிவர்க்கு மகனாரும், திரணதூமாக்
கினியென்னு மியற்பெயருடையாரும், நோற்றலினாற்றலாற் கூற்
றங்குதித்தலும் ஒன்னார்த்தெறலும் உவந்தாரையாக்கலு மறு
வில்செய்தி மூவகைக்காலமு நெறியினாற்றிய வறிவுங் கைகூடிய
அருந்தவக்கொள்கைப் பெருந்தகையாரும், உருத்திரனமிசத்தா
லவதரித்தாரும், ஐந்திரநிறைந்தாருமாகிய ஆசிரியர் தொல்காப்
பியனார் பல்காப்பியப்பயனு மொருங்கே பெறுமாறு தொகுத்துக்
கூறிய தொல்காப்பியத்தின் பெருமையுஞ் சில்காப்பியமு முற்றத்
தேரா வென்னறிவின் சிறுமையுந் தம்மு ளொப்புநோக்கி யுரைப்
புழி யண்டமு மணுவுமா மெனினுஞ் சாலாமை கண்டேனாயினும்,
மவாவின்பெருக்கா லந்நூலும் அதனுரையும் பின்னூலுமாராய்
வான்புக்குச் சிற்சிலவிடத்து முன்னுரைக ளொன்றோடொன்
றொவ்வாமையிற் றொன்னூற்றுணி பிதுவோவதுவோவெனவும்
பிறிதொன்றோவெனவு மையுற்றும் பன்னூறு முறைப்பட்டப்
பல்லாற்றானாடி யென்னறிவிற் கெட்டிய வளவி னவற்றுட் சில
துணிந்தும் இற்றைக் கைந்தியாண்டின் முன்னர்த் தொல்காப்
பியத்துட் சிற்சில சூத்திரங்கட்கே யுரையெழுதக் கருதி, நுண்
பொருட்கோவையெனப் பெயரிய வொருநூ லெழுதினேன்.
பின்ன ராயுந்தோறு முன்னூலாகிய தொல்காப்பியக்கருத்துடன்
அந்நூலுரைகளு நன்னூன்முதலாய பின்னூல்களும் பெரும
பான்மை முரணாயினவெனத் தோன்றலின், முற்றுமெழுதத்
துணிந்து சுபகிருதுயாண்டு பங்குனித்திங்க ளுத்தரத்திற் றொட
ங்கி யெழுதிவருகின்றேன். இதுகாறு மெழுத்ததிகாரமேனு
முடிதல்வேண்டு மாயினும், இடையிடை யுற்றுக் கிடைகொளச்

செய்த பிணியினாலு மணியணியாக வந்து தடைபலசெய்த மிடி யெனும் படையினாலு மிடையீடு நேர்ந்தமையி, னிதுபொழுது முடிந்தன பாயிரமு நூன்மரபு மொழிமரபுமென மூன்றே. பிறப் பியல் எழுதப்படுகின்றது.

இங்ஙன மெழுதிவருகின்றகாலை நண்பர் சிலர் என்மருங் குற்று முன்னுரையிருப்பப் புதிதாகிய பின்னுரை யுலகங் கொள் ளாதாகலி னிம்முயற்சி கைவிடுகவெனக் கூறினாருமுளர். முன் னுரையாகிய இளம்பூரணமிருப்பப் பின்னரும் பலருரைசெயற்குக் காரண மென்னையெனவும், எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவெனப் பொதுமறை கூறிற் றன்றி, முன்னுளதாயிற் கொள்ளுக பின்னுளதாயிற் றள்ளுக வென்று கூறிற் றின்றேயெனவு, மதனா னுலக முன்னெனப் பின்னென வெண்ணாது முதனூற்கருத்தொடு முரணாகாவழிக் கொள்ளு முரணியவழித் தள்ளுமெனவு, மவர்க்கிறுத் தவருடன் பாடும் பெற்றேன்.

அவரு ளிலக்கணமென்று பெயருங் கேட்டறியாதார் சிலர் எமக்குக்காட்டி நன்றென யாங்கொண்டபின்னரே யெழுதல் வேண்டுமென யான் கண்ணீர்விட் டழுதல்செய்யுமாறு துன்பு றுத்தினாருமுளர். அந்தோ யான் அவர்கட்கெவ்வா றுணர்த்தல் கூடும்? உணர்ச்சிவாயி லுணர்வோர் வலித்தே யன்றே! அம்மட்டோ டொழியாமல் அவர் பின்னுஞ் செற்றங்கொண்டு நிந்தைபலகூறி யின்னுந் தீங்கிழைப்பா னெண்ணித் திரிகின்றனர். நன்றல்ல தன்றே மறப்பது நன்றாகலின் யானவர்பெயரை யாண்டு முரை யேன். அதுவுமொரு நன்மையென்று கண்டே அவரையு முதவி செய்தாராகவே மனத்துட் கொண்டேன். இதனை நண்பர் பல ரறிவர்.

இங்ஙனமாகச் சோபகிருதுவருடத் தொடக்கத்து முன்ன ரேயுள்ள நோய்முற்றி வயிற்றினுள் நாபியின்கீழ்க் கழலையொப் பத்திரண் டிருமலமும் வெளிப்படாவண்ணந் தடுத்து ஆவிபோக்க முயன்றது. அக்காலைப் பலசுதேச மருத்துவரிடத்தும் பல ஆங் கில மருத்துவரிடத்துஞ் சென்று பிணிதீர்த்துக் காத்தல் வேண்டு

மெனப்பெரிதும் வேண்டினேன். அவரெல்லாரு மந்நோய் கருத
கொண்டு சேதிக்கற் பாற்றென்று மதுவு முற்றியபடியா லினிச்
செய்யி னுயிர்க்கேடு செய்யுமென்றுஞ் சொல்லினர். பின்னர்ப்
பிறநாடு சென்றாயினும் பிணிதீர்ப்பான் கருதி, யானைக்காலை
சேதுபதி கலாசாலையிற் கற்பிக்குந் தொழில்பெற் றிருந்தமை
யால், மதுரைத் தமிழ்ச்சங்கத்து அக்கிராசனுதிபதியும் பாலவ
னத்தம் ஜமீந்தாரும் உத்தமகுணமேருவும வறியார்க்கொன்று
வதே யீகையெனக் கொண்ட பெருவள்ளலுமாகிய மகா-ா-ா-ஸ்ரீ
பாண்டித்துரைத் தேவரவர்களைக் கண்டு நடந்தன வுரைத்தேன்
உடனே யவர்கள் கலாசாலையில் யான்பெற்றுவந்த ஊதியத்தை
யோராண்டுவரை வேலையின்றிப் பெறுமாறுணைசெய் தளித்ததூஉ
மன்றி யிருநூறு வெண்பொற்காசும் பரிசிலாக வளித்தார்கள்.
அவர்கள்செய்த பேருதவியை யான் என்றுமறவேன்.

பின்னர்ப் புதுக்கோட்டைமருங்குள்ள ஆலங்குடி சென்று
சுதேசமருத்துவநண்ப ரொருவரிடத்து மருந்துண்டு வருகாலை
நோய்தணியாது பின்னும் பெருகி யாவி யகத்ததோ புறத்ததோ
வென் றையுறுமாறு கிடத்திபவளவில், அதன்முன்ன ரொருகா
லத்தும் யான் கண்டுங் கேட்டு மறியாதவரும் ஆங்கிலவைத்திய
கலாநிபுணரும் இன்று மாலங்குடியிற் புதுக்கோட்டைத் தமிழ்
நாட்டரசரது வைத்தியசாலையி லுத்திபோகம் பெற்றிருப்பவரும்
இரக்கமே போருருக் கொண்டா லனையாருமாகிய மகா-ா-ா-ஸ்ரீ
வேணுகோபாலநாயுடு அவர்கள் யான்படும்பாட்டைத் தாமே
கேள்வியுற்று யானமைபாதே யென்மருங்கெய்திப் பன்மருந்
துதவிச் சிற்சிலவுபாயத்தாற் சின்னாளி னடையுறச்செய்து நோய
ளவுதெரிந்து, இந்நோய் என்னாற் போக்கப்படுவதன்றாகலின்,
தஞ்சாவூர்ஜில்லா டாக்டர் லெப்டினென்ட்கர்னல் H. M. ஹக்கிம்
I. M. S. துரையவர்கள் சமுகத்திற்றெரிவித்து அவர்களாற்
குணமுறுகவென வற்புறுத்திச், செலவிற்காக ஐம்பது வெண்
பொற்காசும் பரிசிலளித்துத் தஞ்சையிலுய்த்தார்கள். அவர்கள்
செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும் வானகமு மாற்றலரி
தன்றோ!

## நன்றிகூறல்.

பின்னர்த் தஞ்சைசென்று ஆங்கிலவைத்திய கலாநிபுணர்க ளாகிய மகா-ா-ா-ஸ்ரீ J. மல்லன்ஸ் அவர்கள் மகா-ா-ா-ஸ்ரீ W. S. முத்துச்சாமி நாடாரவர்கள் இவ்விருவர் சகாயத்தால் அத்துரை யவர்களைக் கண்டென்பரிவுசொல்லி வேண்டக் கருணையங்கடலா கிய அத்துரையவர்கள் உடனே பிணிதீர்ப்பானுறுதிகூறி யவ் வாறே மும்மதிக்கொருகால் மூன்றுமுறை கருவிகொண்டு சேதித்து அந்நோய் முற்றத்தீர்த்து என்னுயிரை யெனக்கே பரிசிலாக வளித்துப் பேருதவிபுரிந்தார்கள். அவர்களாலன்றோ நீங்குநிலையிலிருந்த என்னுட லின்று முளதாயிற்று. இப்போ துள்ள வுடலை நோக்கிற் றந்தையுந் தாயுமாயினார் அத்துரை யவர்களே யாதலின், இப்பாயிரவிருத்தி யுரையை அந்நன்றியின் ஞாபகசின்னமாக அச்சிடுவித்தேன்.

யான் தஞ்சையிற் பிணிநிவிர்த்திகருதி ஒன்பதுதிங்கள்கா றும் வசித்துப் பொருண்முட்டுப்பாடு பெரிது முற்றேனாக அக்கா லை மதுரையில் வசிக்கும் உத்தமபாளையம் மகா-ா-ா-ஸ்ரீ சுப்பிரம ணியமுதலியார் அவர்கள் சகோதரர் ம-ா-ா-ஸ்ரீ சோமசுந்தர முத லியாரவர்கள் இருபத்தைந்து வெண்பொற்காசும் திருமங்கலம் ஓவர்சியர் உத்தியோகத்திலிருக்கும் ம-ா-ா-ஸ்ரீ கிருஷ்ணையரவர்கள் இருபத்தைந்து வெண்பொற்காசும் எனக்குப்பெரிய தந்தையார் குமாரர் சிரஞ்சீவி அலங்காரம்பிள்ளையவர்கள் இருபத்துநான்கு வெண்பொற்காசும் ம-ா-ா-ஸ்ரீ கந்தசாமிக்கவிராயரவர்கள் இரு பதுவெண்பொற்காசுமுய்த்துப் பேருதவி புரிந்தார்கள். காலத் தினாற் செய்த நன்றி ஞாலத்தின் மாணப்பெரிதாகலின் அவர்க ளையும் யானென்று மறவேன்.

அக்காலை மேனுரைத்த வருவாயுஞ் சாலாதாகவே அரிமள நகரத்தில் ஸ்ரீலஸ்ரீ சுந்தரசற்குருநாதசுவாமிகள் அதிட்டானத்தில் வடமொழிதென்மொழிக் கலைக்கடல்களை நிலைகண்டுணர்ந்துஞான மூர்த்தியாக நம்மனோருய்யுமா றெழுந்தருளி வீற்றிருக்கின்ற ஸ்ரீலஸ்ரீ சிவானந்தசற்குருநாதசுவாமிகள் இயல்பானே யமைந்த கருணையால் யான் விண்ணப்பஞ்செய்யாமலே மகா-ா-ா-ஸ்ரீ இலக் கணமுத்துக் கவிராயரவர்களா லென்னிடர் கேள்வியுற்று நூற் றுக்குமேலாய வெண்பொற்காசினை இருமுறையினுய்த்தார்கள்.

அச்சுவாமிகள் புறத்துநோய் நீங்கப் பொருளுதவி செய்ததூஉ
மன்றி, நோய்தீர்ந்தபின்னர்த் தமது சந்நிதானத்தி லென்னை
யழைத்து அகத்துநோயு நீங்குமாறு பலநன்மொழி யுபதேச
முஞ் செய்து, யானெழுதியவளவு தொல்காப்பியவுரையினையுங்
கேட்டாராய்ந்து, முற்றவெழுதிப் பின்னரே வெளியிடக் கருதிய
வெனக்கு யாக்கை யிளமைமுதலாயின நிலையின்மையின் எழுத
வெழுத வோரோரியலாக வெளியிடலே தக்கதெனப் பலவிபா
யங்கூறி, யவ்வாறே செய்யுமாறுங் கட்டளையிட்டார்கள். அம்
மட்டோ அதுவரை யெழுதியவுரையினை யச்சிடுதற்கு ஆங்குள்ள
பிரபுக்களாகிய நகரத்துவணிகர்களை யழைத்து அவரவர் கருத்
திற் கியன்றவளவிற் பொருளுதவி செய்யுமாறும் பணித்தார்கள்.
அப்பிரபுக்களும் அக்கட்டளை சிரமேற்கொண்டு அவ்வண்ணமே
செய்தார்கள். அவ்வணிகர்குலமக்களது பெருந்தகைமையுந்
தருமசிந்தையுஞ் சிவபத்தியும் பெரியார்ப்பேணலுந் தமிழபிமான
மும் பிறவுயர்வும், என்னான்மட்டுமன்றிப் பலராலும் பெரிதும்
பாராட்டற்பாலவேயாம். அவர்கள் பெயரும் அளித்தபொருளின்
றொகையுஞ்செலவும் எச்சமும் பின்னர்க் குறித்திருக்கின்றேன்.

பின் அச்சுவாமிகள் கட்டளைப்படி முறையே பாயிரவிருத்தி
முதலாயின அச்சிடுமாறுகருதிக் குரோதி௵ தைமீ தஞ்சை
சென்றேன். சென்று வேலைதொடங்கிய சின்னாளுட் சுரங்கண்டு
உணவொழித்துக் கிடைப்படுத்திற்றாகலின் அச்சிடு முயற்சியு நின்
றது. அக்காலை யெனக்கு மிக்கநண்பினரும் வடமொழிதென்
மொழியாங்கில நூலாராய்ச்சியே பொழுதுபோக்கும் விளையாட்
டாக வுடையாரும் வைத்தியநூற் பயிற்சியு மநுபவமுமுடையா
ரும் பிரபுசிகாமணியும் வள்ளலுமாகிய அரித்துவாரமங்கலம்
மகா-ள-ள-ஸ்ரீ வா. கோபாலசாமி ரகுநாத ராஜாளியாரவர்கள்
என்னைத் தம்மூர்க் கழைத்துச் சென்று பல நன்மருத்துவரைக்
கொண்டு மருந்தளித்தும் வேதமுணர்ந்த அந்தணரைக்கொண்டு
கிரகசாந்தி முதலாயினசெய்தும் பிணிதீர்த்து வெண்பொற்காசு
முந்நூற்றின்மேலாக என்னிமித்தஞ் செலவுசெய்ததூஉமன்றி,
யப்பொழுது தேகவன்மை யெனக்கின்மையாற் றமக்குள்ள இன்
றியமையாதனவாகிய உலகியல் பலவற்றையுங் கருதாமற் றாமே

## பாயிரவிருத்தி அச்சிடுதற்குப் பொருளுதவிசெய்த அரிமளநகரத்துக் கனவான்கள் பெயரும் பொருளின் றொகையும்.

| பெயர். | தொகை ரூ. |
|---|---|
| ஸ்ரீ சுந்தரசற்குரு மகான் | 1 |
| மகா-ா-ா-ஸ்ரீ அ செ. சு இராமன் செட்டியாரவர்கள் | 75 |
| ,, அ. சு செ. சுப்பிரமணியன் செட்டியாரவர்கள் | 50 |
| ,, பரி. முரு. இராமன செட்டியாரவர்கள் | 50 |
| ,, அ. கி. ராம. கிருஷ்ணன் செட்டியாரவர்கள் | 40 |
| ,, பழ. வ. மு. முத்தடைக்கப்ப செட்டியாரவர்கள் | 40 |
| ,, பழ. வ ப. பழனியப்ப செட்டியார ,கள் | 35 |
| ,, வ. பெரி. அரு. இராமன் செட்டியாரவர்கள் | 35 |
| ,, அ. பெரி. பழ செல்லப் , செட்டியாரவர்கள் | 30 |
| ,, கா சு. சி. அழகப்ப செட்டியாரவர்கள் | 25 |
| ,, ராம. கா. சடையப்ப செட்டியாரவர்கள் | 25 |
| ,, அ. செ. சு ழ பெரியகருப்பன்செட்டியாரவர்கள் | 25 |
| ,, ந. சு. அ. இராமன் செட்டியாரவர்கள் | 25 |
| ,, பெ. ராம. செ. செல்லப்ப செட்டியாரவர்கள் | 25 |
| ,, சி. ராம. ப. ராம. சாமிநாதன் செட்டியாரவர்கள | 25 |
| ,, வெ. கு. மு. செல்லப்ப செட்டியாரவர்கள் | 25 |
| ,, கா. சு அ. அப்பு செட்டியாரவர்கள | 25 |
| ,, கா சு அ இலட்சுமணன் செட்டியாரவர்கள் | 25 |
| ,, அ. செ. செ. ஏகப்ப செட்டியாரவர்கள் | 25 |
| ,, சி. செ சிதம்பரஞ் செட்டியாரவர்கள் | 25 |
| ,, ராம கா. அண்ணுமலை செட்டியாரவர்கள் | 20 |
| ,, ராம பழ கதிரேசச் செட்டியாரவர்கள் | 20 |
| ,, அ. வெ அ அருணுசலஞ் செட்டியாரவர்கள் | 20 |
| ,, கா. சு. அ. சடையப்ப செட்டியாரவர்கள | 20 |
| ,, மு. செ. ராம. செல்லப்ப செட்டியாரவர்கள் | 15 |
| ,, சி. ராம. ராம. செ. சின்னய்ய செட்டியாரவர்வன் | 15 |
| , செ சித. வள்ளியப்ப செட்டியாரவர்கள் | 15 |
| ,, மு. செ. கரு அ அண்ணுமலை செட்டியாரவர்கள் | 15 |
| ,, பழ. மு. பழனியப்ப செட்டியாரவர்கள் | 10 |
| ,, சு. ராம மு செல்லப்ப செட்டியாரவர்கள் | 10 |
| ,, வ. பெரி மு. முத்தையா செட்டியாரவர்கள் | 10 |
| ,, பெரி. க. மெய்யப்ப செட்டியாரவர்கள் | 10 |
| ,, ஆ. அ. ந. சுப்பிரமணியன் செட்டியாரவர்கள் | 10 |
| ,, வ பெரி. வ. செல்லப்ப செட்டியாரவர்கள | 10 |
| ,, மு. செ. கரு. சடையப்பசெட்டியாரவர்கள் | 10 |
| ,, சி பெ. சி. சின்னக்கருப்பன்செட்டியாரவர்கள் | 10 |
| ,, ப. செ. ராம. செ. செல்லப்பசெட்டியாரவர்கள் | 10 |



உ

கணபதிதுணை.

# தொல்காப்பியம்.

# சண்முகவிருத்தி.

## கடவுள் வாழ்த்து.

### சித்திவிநாயகனார்.

தந்தமொன் றேய்கருங் குன்றையன் பார்த்துப்
புந்திவெண் பாற்கட லுட்டொடூஉஞ்
செந்தமி ழமிர்தந் திரண்டெழற் பொருட்டே.

### அறுமுகக்கடவுள்.

அந்தரி யீன்றருள் சுந்தர வறுமுகத்
தெந்தை யடிப்புணை யெய்துதூஉஞ்
செந்தமிழ்க் கடற்கரை யுந்துதற் பொருட்டே.

### அங்கயற்கண்ணம்மை.

தங்குநம் புந்தித் தடத்தினு மாலவா
யங்கயற் கண்ணுமை யடிமலர்
சங்கமுத் தமிழியல் சார்தரற் பொருட்டே.

### ஆலவாய்ப்பெருமானடிகள்.

ஆரிய தமிழிய லகத்தியற் குணர்த்திய
குரவனற் றுளகங் கொள்வ
லைய மருளறு மெய்யுணர் வுறவே

### நல்லிசைப்புலவர்.

வான்றனி முத்தமிழ்ப் புத்தமிழ் தாதியி
லான்றவர் கூட்டுண வகத்தியற் குணர்த்திய
தேன்றரு மலர்ச்சடைத் தேசிகன் மான்றரு

# தொல்காப்பியம்.

மீன்றிகழ் கண்ணி மணாளன் விரிகலை
தோன்றிய வுருவெனத் தான்றிகழ் செல்வி
கான்றரு மலையக் கடமுனி நிதிக்கோ
னென்றுறு நமனுயிர் கான்றெறு சேய்முடி
நாக ராய னாரத னாதியா
மூன்றுசங் கத்தினு மூன்றிய நல்லிசைச்
சான்றவ ருடனவர் போன்றமர் பான்முறை
யூன்றரு மயரப வுரைத்தோன் முதலாத்
தோன்றருட் புலவர் மின்றிகழ் கொடியாற்
செந்தமிழ் வளர்த்தருண் மைந்துறு மெவந்தருஞ்
சிந்தனை மலர்மிசைச் சேர்ப
பைந்தமி ழியலுரை பகர்தரற் பொருட்டே.

## ஆசிரிய ரசத்தியனார்.

முத்தமி ழகத்திய முதனூ லுரைத்த
வித்தக னடிமலர் விளக்குஞ்
சித்தநின் றுத்தமச் செந்தமி ழியல்பே.

## ஆசிரியர் தொல்காப்பியனார்.

ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப் பியத்துரை
நல்குக வெனவரு நவின்ற
தொல்காப் பியனடித் தோயுமா ருளவே.

இவை பாடல்சால் செந்தமிழ்ப் பாண்டிநன் னாட்டினைக் கூடல்சால் சங்கந் துலாவிய மதுரை யாலவா யணிநகர் மேல்வையின் விளங்கி, நலமபா டுறவரு மிலம்பாட் டினைக்குர ராழவந் தான்றாய் சோழவந்தானூரில், வேளாண்குலதிலகனாகிய சண்பகம்பிள்ளை யவரின் விளங்கிய அரசப்பபிள்ளைமகன் சண்முக னென்னுமியற்பெயருடைய தொல்காப்பியத்தொண்டன் றனெடுத்துக்கொண்ட நூலினுரை யிடையூறின்றி யினிதுமுடிந்து நில வுலகத்து நின்றுநிலவுமாறு கலியுக மையாயிரத்துநான்கிற் செல்லாநின்ற சுபகிருதியாண்டு பங்குனித்திங்க ளந்தரத்தன்று திருவாலவாயுடையாராலயத்துட் சங்கப்புலவர்சந்நிதியிற்கூறின வென்பது.

கணபதிதுணை.

தொல்காப்பியம்.

# பாயிரவிருத்தி.

## சிறப்புப்பாயிரம்.

வடவேங்கடந் தென்குமரி
யாயிடைத்
தமிழ்கூறு நல்லுலகத்து
வழக்குஞ் செய்யுளு மாயிரு முதலி
னெழுத்துஞ் சொல்லும் பொருளு நாடிச்
செந்தமி ழியற்கை சிவணிய நிலத்தொடு
முந்துநூல் கண்டு முறைப்பட வெண்ணிப்
புலந்தொகுத் தோனே போக்கறு பனுவ
னிலந்தரு திருவிற் பாண்டிய னவையத்
தறங்கரை நாவி னான்மறை முற்றிய
வதங்கோட் டாசாற் கரிறபத் தெரிந்து
மயங்கா மரபி னெழுத்துமுறை காட்டி
மல்குநீர் வரைப்பி னைந்திர நிறைந்த
தொல்காப் பியனெனத் தன்பெயர் தோற்றிப்
பல்புகழ் நிறுத்த படிமை யோனே.

[என்பது—சூத்திரம்.]

இச்சூத்திர மென்னபெயர்த்தோவெனின், சிறப்புப்பாயிர மென்னும் பெயர்த் தென்பது.

இனி யிப்பாயிரஞ்செய்தார் யாவரெனின், இந்நூலாசிரியரு டன்கற்ற வொருசாலைமாணாக்கராகிய வாசிரியர் பனம்பாரனா ரென்பது.

இனி நூல்செய்தான் பாயிரஞ்செய்தற் குரியனல்லனோ வெனின்,

*"தோன்று தோற்றித் துறைபல முடிப்பினுந்
தான்றற் புகழ்த றகுதி யன்றே"

என்றாராகலி னல்லதெனப்படுது.

இனிப் பாயிரஞ்செய்தற் குரியார் யாவரெனின், தன்னா சிரியனுந் தன்னொடுகற்றோனுந் தன்மாணாக்கனுமென மூவரு ளொருவனுமென்பது.

இனிப் பாயிரமென்ற சொற்குப் பொருள் யாதோவெனின், நூற்குப் புறமாவன கூறலாற் புறவுரையா மென்பது.

இனி நூலுரைப்பான்புக்கு முதற்கட் புறவுரையுரைக்கப் புக்க தென்னையெனின்,

§ "ஆயிர முகத்தா னகன்ற தாயினும்
பாயிர மில்லது பனுவ லன்றே."

எனவும், § கோழுச் சென்றவழித் துன்னூசி யினிது செல்லுமாறு போலப் பருப்பொருட்டாகிய பாயிரங் கேட்டார்க்கு நுண்பொருட்டாகிய நூலினிதுவிளங்கு மெனவும், † மது கேளாக்காற் குன்றமுட்டிய குரீஇப்போலவுங் குறிச்சிபுக்க மான்போலவு மாணாக்க னிடர்ப்படு மெனவும், மப்பாயிரந்தா னூற்குப் புறனுவைத்துங் ‡ கருவமைந்த மாநகர்க் குருவமைந்த வாயின்மாடம்போலவும், ** தகைமாண்ட நெடுஞ்சுவர்க்கு வகைமாண்ட பாவைபோலவு, ¶ மாப்பரிய வாகாயத்திற்கு விளக்கமாகிய திங்களு ஞாயிறும்போலவு, நாண்றேவாக் குலமகட்கு மாண்றேவா வணியு மாடையும்போலவுந் தலையமைந்த யானைக்கு வினையமைந்த பாகன்போலவுங், கற்றுவல்ல கணவற்குக் கற்புடையாள்போலவு மந்நூற் கின்றியமையாச் சிறப்பிற்று மெனவு முந்து நூல்கூறலி, னந்நூலை யுரைப்பினு மந்நூற்குப் பாயிரமுரைத்துரைத்தன் மரபாயிற் றென்பது.

---

* இளம்பூரணருரை மேற்கோள்.
§ இறையனார் களவியலுரை மேற்கோள்.
§ நக்கீரனார்.
† ஷை
‡ ஷை
** ஷை
¶ ஷை

இனிப் பாயிர மிரண்டுவகைப்படும்; பொதுவுஞ் சிறப்பு
மென. அவற்றுட், பொதுப்பாயிரமென்ப தெல்லா நூன்முகத்து
முரைக்கப்படுவது; சிறப்புப்பாயிரமென்பது தன்னாலுரைக்கின்ற
நூற்கின்றியமையாதது.

இனி யவ்விருவகைப்பாயிரத்திற்குங் கொழுவும் வாயி
ன்மாடமும் பாவையு முவமம். நூற்குத் துன்னூசியு நகரஞ்
சுவரு முவமம். கோளாக்காற் குரீஇப்போலவு மான்போலவு மிடர்
ப்பட லவையிரண்டற்கும் பொது.

கொழுத் துன்னூசிநுழைதற்கு வழியாக்கலுடைத்து.
பாயிர நூனுழைதற்கு வழியாக்கலுடைத்து. வாயின்மாட நகர்க்
குட் செல்லற்கு வழியாதலோ டணிசெயலுடைத்து. பாயிர
நூலுட் செல்லற்கு வழியாதலொடு நூற்கணிசெயலுடைத்து.
பாவை சுவர்க்கணிசெயலுடைத்து. பாயிர நூற்கணிசெய
லுடைத்து. பாயிரங் கேளா மாணாக்க னூலினை முட்டி யிஃ
துணரற்பாற்றன்றென மீளலு, மீளாது செல்லினுந் தொன்னூற்
கஞ்சித் தடுமாறலு முடைய னாகுதலிற் குன்றுமுட்டிய குரீஇப்
போலவுங் குறிச்சிபுக்க மான்போலவு மிடர்ப்படுவான்.

கொழுவென்பது ஊசித்தொளையின்மேலுள்ள கோலினை.
துன்னூசியென்பது தைத்தற்றொழிற்செய்யு நூல்கோத்ததொளை
யையுடைய வூசியின் காதினை. கொழுவுதலாற் கோல் கொழு
வெனப்பட்டது.

பொதுப்பாயிரத்திற்குத் திங்களு மணியும் பாகனு முவ
மம். நூற்காகாயமுங் குலமகளும் யானையு முவமம்.

திங்கள் கலையின் வளர்ச்சிக்குத்தகப் புறத்திருணீக்கி
யாகாயத்தை விளக்கும். அணி யழகுசெய்யும். பாக னடங்கா
யானையை யடக்கித் தன்குறிப்பின்வழி நடத்தும். பொதுப்பாயிரந்
தன்னை யுணர்தலின்வளர்ச்சிக்குத்தக விடர்ப்பாடென்னு மிருணீ
க்கி நூலினை விளக்கும்; அந்நூற் கழகு செய்யும்; மாணாக்க
ருணர்ச்சிக்குப் பொருளா னடங்காது தோன்று நூலினைத் தன்
குறிப்பா னடங்குமாறு காட்டி நடத்தும்.

ஈவோன்றன்மையென்பது ஆசிரியனது தன்மை யென்ற வாறு. அஃதாவது, ஈதற்றொழி லெனப் படுவ வேண்டி னிரப் போர்வேண்டும் பொருளுடையனாந்தன்மையு, மதனை யீதற் கேதுவாகிய விரக்கமுதலிய குணமுடையனாந்தன்மையு மீவோ னுக் கின்றியமையாதிருத்தல் வேண்டுமாதலி னாசிரிய னவற்றை யுடையனாதல்.

ஈதலியற்கையென்பது ஆசிரிய னுரைக்குமுறைமை யென்ற வாறு. அஃதாவது, பசியா னிரப்போர்க் கப்பசியளவறிந்து முகமலர்ந் தின்சொற் கூறி யுணவளித்தாங்கு மாணாக்கர்க் கவனளிக்கு முறைமை.

கொள்வோன்றன்மையென்பது மாணாக்கனது தன்மை யெ ன்றவாறு. அஃதாவது, பசித்தான் வேட்டபொழு ததனையுடை யார்மாட் டடைந்து பணிக்குங் குறிப்பறிந் தடக்க முடையனா யிறைப்போல வவன் கற்றவையட் டடைந்தாம் பிறப்பதில் முனியா மையு முடையனாதல்.

கோடன்மரபென்பது மாணாக்கன் கேட்குமுறைமை யென் றவாறு. அஃதாவது, பசித்தான் வேட்டற்கதனை யளிப்பி னவனதனை யார்வத்தோ டேற்றுச் சிதறாம லருந்திப் பசிதீர்ந் தாற்போல வாசிரிய னளித்த பொருளையவன் கொள்ளுமுறைமை.

இனிச் சிறப்புப்பாயிர மெட்டென்பவர்; ஆக்கியோன் பெயரும் வழியு மெல்லையு நூற்பெயரும் யாப்பு நுதலியபொரு ளுங் கேட்போரும் பயனுமென. என்னை ?

* “ ஆக்கியோன் பெயரே வழியே யெல்லை
நூற்பெயர் யாப்பே நுதலிய பொருளே
கேட்போர் பயனோ டாயெண் பொருளும்
வாய்ப்பக் காட்டல் பாயிரத் தியல்பே. ”

என்றாராகலின்.

* இறையனார் களவியலுரை மேற்கோள்.

இனி பொருசாரார் காலமுங் களனுங் காரணமுங் கூட்டிப் பதினொன்று மென்பாரு முளர். என்னை?

* "காலங் களனே காரண மென்றிம்
மூவகை யேற்றி மொழிநரு முளரே."

என்றாராகலின்.

இனி யாக்கியோன்பெயரென்பது நூல்செய்த வாசிரியர் பெய ரென்றவாறு.

வழியென்பது இந்நூ லின்னநூலின் வழித்தாகச் செய் யப்பட்டதென்பது.

எல்லையென்பது இந்நூ லின்னவெல்லையுணடக்குமென்பது.

நூற்பெயரென்பது நூலது பெயரென்றவாறு. அது பெயர் பெறுமிடத்துப் பலவிகற்பத்தாற் பெயர்பெறும். அவ்விகற்பங் கள் செய்தான் செய்வித்தா னிடுகுறி யளவு சிறப்பு முதலாயின. செய்தானாற் பெயர்பெற்றன:—அகத்தியந் தொல்காப்பியமென் வினை. செய்வித்தானாற் பெயர்பெற்றன:—சாதவாகன மிளந் திரையமென வினை. இடுகுறியாற் பெயர்பெற்றன:—நிகண்டு கலைக்கோட்டுத்தண்டென வினை. அளவினாற் பெயர்பெற்றது பன்னிருபடலம். சிறப்பினாற் பெயர்பெற்றது களவியல். என்னை?

§ "முற்ப டப்புண ராதசொல் லின்மையிற்
கற்பெனப் படுவது களவின் வழித்தே."

எனக் கற்பினுங் களவினைச் சிறப்புடைத்தென் றவ்வாசிரி யன் வேண்டுமாதலின்.

இனி யாப்பென்பது நூல்யாப்பென்றவாறு. அது யாக்கு மிடத்து நான்குவகையான் யாக்கப்படும்; தொகுத்தும் விரித் துந் தொகைவிரிசெய்து மொழிபெயர்த்துமென. என்னை?

---

* இறையனார் களவியலுரை மேற்கோள்.

§ இறையனார் களவியல் கு-வது சூத்திரம்.

† "தொகுத்தல் விரித்த றொகைவிரி மொழிபெயர்த்
ததர்ப்பட யாத்தலோ * டனைமர பினவே".

என்றாராகலின்.

இனி நுதலியபொருளென்பது நூனுதலியபொருளைச் சொல்லுத லென்றவாறு.

கேட்போரென்பது நூலைக்கேட் டதன்கட் குற்றமின்மை யாராய்வோ ரென்றவாறு.

பயனென்பது இது கற்க, வின்ன பயக்குமென்பது.

காலமென்பது நூ லின்னகாலத்துச் செய்யப்பட்டதென் பது.

களமென்பது இந்நூலிவைக்களத் திந்நூ லரங்கேற்றப் பட்ட தென்பது.

காரணமென்பது இந்நூ லின்னகாரணத்தாற் செய்யப் பட்டதென்பது.

இனிப் பொதுப்பாயிரவகைநான்கனு ளீவோன்றன்மை யுரைக்கற்பாற்று.

அது பயன்படலும் படாமையும் பற்றிக், கற்கப்புகுதற்குத் தகுதியுடைத்தாகுதலானு மாகாமையானுங் கற்கப்படுதன்மை யும் படாத்தன்மையுமென விருவகைப்படும்.

அவற்றுட், கற்கப்படுதன்மையுடையா னாசிரியனெனப்படு வான்; அத்தன்மையில்லாதா னாசிரியனாகா னெனப்படுவான்.

அவருட் கற்கப்படுவோ னன்குவமத்தா னுணரப்படுவான். என்னை?

---

†தொல்காப்பியம் பொருளதிகாரம் கூ௱௬-வது சூத்திரம்

* அனைவகைப்படுமே என்பதூஉம் பாடம். இறையனாரகப்பொருளுரை க-வது சூத்திரம் ௬-வது பக்கம்.

*" மலைநிலம் பூவே துலாக்கோலென் றின்ன
ருலைவி லுணர்வுடை யோர்."

என்றாராகலின்.

கற்கப்படாதோனு நான்குவமத்தா னுணரப்படுவான். என்னை?

†" கழற்பெய் குடமே மடற்பனை முடத்தெங்கு
குண்டிகைப் பருத்தியோ டவையென மொழிப".

என்றாராகலின்.

இனிக் குண மொழுக்க நெறி பய னாற்ற முருவமுதலாய சொற்க ளடையில்வழி நன்மைக்கூற்றை வரைந் தேனைக்கூற்றை விலக்கி நற்குண நல்லொழுக்க முதலாயவற்றை யுணர்த்தியாங்கு, மலையு நிலனும் பூவு மீண் டடையின்றி நிற்றலி னன் மலையையு நன் னிலத்தையு நற்பூவையு முணர்த்தின. அவற்று ணன்னிலமென் பது நெற்பயிர்முதலாயின செய்யு நன்செய்யை.

துலாக்கோலென்பது நூறுபலத்தளவு தன்னுவின்கணுள்ள வரையா னுணர்த்துஞ் சிறப்புடைய நிறுத்தற்கருவியை. துலா மென்பது நூறுபலம். அஃ தாகுபெயரா னதனை யுணர்த்தும் வரையினையுணர்த்திற்று.

இனித் தராசுகோலெனப் பொருள்கொண்டாற் குற்றமென் னேயெனின், அது பொருந்தாது. என்னை? அது சிறிதாயிற் றுலா மென்னு நிறையை யொருமுறையி னிறுத்தல்செய்யாமையும், பெரிதாயிற் றுலாத்தின்மிக்கபாரத்தையு நிறுத்தலு முடைமையி, னாகுபெயராகித் துலாக்கோலெனப்படாமையானு நிறுத்தற்கரு வியாகத் தானிருந்து வைத்தும் படிக்கன்முதலிய பிறகருவி வேண்டுஞ் சிறப்பின்மையானு மென்பது.

இனிக் கழற்பெய்குடமென்பது விளையாட்டுச்சிறார் கழற் பெய்துவைக்குங் கலசத்தை யுணர்த்திற்று; வழக்குமிகுதிபற்றி.

---

*இளம்பூரணருரைமேற்கோள்.

† ஷை.

இனி மடற்பனையென்பது ஆண்பனையை யுணர்த்திற்று. என்னை?

* " இனச்சுட் டில்லாப் பண்புகொள் பெயர்க்கொடை
வழக்கா றல்ல செய்யு ளாறே "

என்றாராகலின், மட லினஞ்சுட்டலா தென்பது.

இனி மட லினஞ்சுட்டுமா றென்னையெனின், மடலென வேறு காட்டாமலம்மடலின்கட் காய்த்தலையுடைய வேனைப்பெண்பனை யாய வினத்தைச் சுட்டி யதனினின்றுவிலக்கிக் காய்த்தலின்மை யின் வேறாகக்காணப்படு மடலுடைய வாண்பனையை யவ்வடை வரைந்துணர்த்தல் வழக்காறுதலி னென்பது.

இனிக் காய்த்தற்பனை வேறுகாட்டாவிடினு மடலுண்மையி னவ்வடைபெறுமை யென்னையெனின், கையென்பது கொடுத்தற் சிறப்பில்லாக் களிற்றை விசேடித்துக் கைக்களிறென்று வருத லல்லது கொடுத்தலியல்புள்ள மக்களை விசேடித்து வாராமை போல, மடலுங் காய்த்தற்சிறப்பில்லாத வாண்பனையை விசேடி த்தலல்ல தச்சிறப்புள்ள பெண்பனையை விசேடித்து வாரா தென் பது.

இனி யிக்கருத்தறியாம னன்னூலார்முதலாயினு ருடன் முழுது மடல்விரிந்த காய்த்தலையுடைய பனையெனப் பொருள் கொண்டார். அது பொருந்தாது. என்னை? மடலென்பது அக விதழு மதனைமூடிப் பின்னர்விரிக்கும் புறவிதழுமாகிய பாளைக் குப் பெயராதலன்றி யோலையைத் தன்னகத்துக் கொண்டிருக்கு மட்டைக்குப்பெயராகாமையானு மாருமெனக்கூறுவாருளராயினு மஃ துடன் முழுதும் விரிந்த மடலெனப் பொருள்படாமையானு மென்பது.

---

*தொல்காப்பியம் சொல்லதிகாரம், ௧௮.

§ இனிப் பெரும்பாணாற்றுப்படையுள், யாற்றறல் புரையும் வெரிநுடைக் கொழுமடல் என வது மட்டையை யுணர்த்திற்றா லெனின், ஆண்டும் பாளையே யுணர்த்த லவ்வுரையினை யாராயிற் காணப்படுமென்பது.

இனி யாகுபெயரான் மடன் மட்டையை யுணர்த்திற்றெனக் கொள்ளுதுமெனின், மட்டையின்றிக் காய்க்கும் பனையொன் றிருப்பி னதனை யினஞ்சுட்டல் கூடுமாதலானு மவ்வாறுகாய்க் கும் பனை யாண்டுமின்மையி னவ்வடை யினஞ்சுட்டாமையானு மதுவும் பொருந்தா தென்பது.

இனி முடத்தெங்கென்பது ஏனைத் தெங்கினது நெருக்கத் தான் ஞாயிற்றி னொளிபடாமன் முடமாய கூந்தற்றாழையை யுண ர்த்திற்று. கூந்தலென்ற தோலையினை. தாழையென்றது தெங்கினை. காய்த்தற்குக் காரணமாகிய பாளையின்றி யோலையே யுடைமையி னப்பெயர்த்தாயிற்று. அதனைக் கூந்தாழையென விக்காலத்தார் வழங்குப. அது மரூஉவழக்கு, கோந்தாழையென வழங்கலு முண்டு.

இனிக் குருடுசெவிடேயெனவிவை காணல் கேட்டல் சொ ல்லென்னுந் தந்தன்மையினைக் கொள்கையில்லாத கண்ணுங் காது நாவுமென வவற்றது குறையினை யுணர்த்தியாங்கு, முட மென்பதூஉ மெண்வகையுடற்குறையு ளொன்றுஃதலிற் கொடுத் தற்கு மேற்றற்கு மேதுவாகிய நீட்டன் முடக்கலென்னுந் தன் றன்மையினைக் கொள்ளாத கையினது குறையையும் பிறவுறுப் பினைத் தாங்கிநிற்ற லென்னுந் தன்றன்மையினைக்கொள்ளாத காலது குறையையு முணர்த்துமாதலி னீண்டுக் காய்கொடுத்தற் கேதுவாகிய கையினை யொத்த பாளையினுக்குறையை யுணர்த் திற்று.

இக்கருத்தறியாது நன்னூலார் முதலாயினு ரதனை வேலிக் கப்புறம்வளைந்த தெங்கெனக் கொண்டார். அது பொருந்தாது.

---

§ பெரும்பாணாற்றுப்படை அக-வது அடி.

என்னை? முடம் வினைச்சொல்லாகாமையானும், வேலிக்கப்புற மென வேறுவின்றி யச்சொல்லை வருவித்தல் கூடாமையானும், வளைந்த முதுகுபோல்வதெனக் கொள்ளுது மெனின், அது கவைமுலை யிரும்பிடிக் கவுண்மருப் பேய்க்குங், குலைமுதிர் வாழைக் * கூனி வெண்பழம் என்றாற்போலக் கூனெனப்படலன்றி முட மெனப்படாமையானு மென்பது.

இனிப் பதிற்றுப்பத்தின்கண், ¶ முடந்தை நெல்லின் விளை வயற் பரந்த தடந்தா ளாரை. யெனவுந், ‡ தடந்தா ளாரை படிந்திரை கவரு, முடந்தை நெல்லின் கழை. யெனவு, மச்சொல் வளைவுகுறித்து வந்ததாலெனின், ஆண்டு நெல்லின்கழை நிலத் தின்க ணின்றதாயி னதன்மேற் றங்கி யிரைகவரல் கூடாமையி, னாரை நிலன்படிந் திரைகவருமாறு நிற்றலின்றி நிலத்து வீழ்ந்த வக்கழையினை யுணர்த்தலிற், கதிரினைத்தாங்கிநிற்கு மியல்பில்லா மன் முடம்பட்ட வேரெனப்படுங் காலினது தன்மைபற்றி வந்த தன்றி வளைவாகிய வினைபற்றி வந்ததன் றென்பது.

இனிப் பிறசெய்யுளின்கண் † முடமதி யிலைச்சினனென வந் தமையி னாண்டு வளைவுகுறித்ததாலெனின், ஆண்டும் வளர்தலா கிய தன்றன்மையைக் கொள்ளாமன் முடம்பட் டிறைவன்முடி மருங் கென்று மொருபடித்தாகக் கிடக்கும் பிறையினை யுணர்த் தலி னேனைக்கலைவளர்ச்சியி னடியாக நின்ற வப்பிறையது வளர் ச்சியின்மை குறித்ததன்றி வளைவுகுறித்திற்றில தென்பது.

இனிக் குண்டிகைப்பருத்தி யென்பது நீர்க்கரகத்துட் பெய் துவைத்த பருத்திக்காயினை யுணர்த்திற்று. என்னை? விளையா

---

* பெரும்பாணாற்றுப்படை௩௫௭-வது அடி.

¶ பதிற்றுப்பத்து ௨௯-வது பாட்டு.

‡ ஷை ௩௨-வது பாட்டு.

† "முடமதி யிலைந்தா னுங்கண் முகமதி யிடத்த தென்முன்" திரு விளையாடல் வளையல் விற்றபடலம் ௬-வது பாட்டு.

டற்பொருட்டுக் கழற்காயினையும் புன்னை கமுகு முதலாயவற்றின் காயினையு மவைபோல்வன பிறவற்றையுங் கொண்டாற்போலப் பருத்திக்காயினையுஞ் சிறார்கோடல் வழக்காதலானும், மக்காய் வெளிப்புறக் கிடப்பிற் காற்றா னுலர்ந்தாயினும் வெய்யிலாற் காய்ந் தாயினும் வெடித்தலின் விளையாடற் காகாமையு நீருட் கிடப் பிற் சின்னாட்குப் பயன்படலு முடைமையி னீர்வறிதறியாக் கரக மென்னுங் குண்டிகையு ளவர் பெய்துவைத்தல் வழக்காதலானு மென்பது.

இதனை யுணராது நன்னூலார் முதலாயினார் குண்டிகைப்ப ருத்தியைப் பருத்திக்குண்டிகையென மாற்றிப் பஞ்சடைத்ததா கிய மிகச்சிறியவாயினையுடைய நீர்வறிதாய குடுக்கையெனப் பொருள்கொண்டார். அது பொருந்தாது. என்னை? குண்டி கையென்பது யாண்டும் வாயகன்ற நீர்க்கரகத்தையன்றி நீர்வறி தாய பிறிதொன்றனை யுணர்த்தாமையானுங், குண்டிகைப்பஞ்செ னினுஞ் சூத்திர மமைதலி னங்ஙனங்கூறாமையே யப்பருத்தி பஞ்சினை யுணர்த்தாதென் றறிவித்தலானும், வழக்கின்கட் குடுக் கையு ளடைத்தற்பாலதாய விலவம்பஞ்சினை விலக்கிப் பருத்திப் பஞ்செனக் கூறலாற் போந்தபயன் பிறிதொன்றின்மையானு மென்பது.

இனித் தந்வீ சாருபயோதரா சுவதநா சியாமா மநோகாரணி நீதா நிட்கருணேந கேநசிதநோ எனத்தொடங்கிப் பிராணப் பிரியா குண்டிகா எனமுடிந்த வாரியசுலோகத்துட் சிறுபெண்ணு மழ கியமுலையாளு நன்முகத்தாளும் யௌவனத்தாளு மனோகரமு டையாளுமாகிய பிராணப்பிரியையைக் கருணையில்லாத வொருவ னேயோ கொண்டுபோயினனெனவுஞ், சிறியது நன்னீருடை யது நன்முகமுடையதுங் கரியது மனோகரமுடையதும் பிராணப் பிரியமுடையதுமாகிய குண்டிகையை யொருவன் கொண்டுபோ யினனெனவு, மிருபொருள்படக் கூறுமாற்றானுங் குண்டிகை குடுக்கையாகாமை யுணரப்படு மென்பது.

இனி மலைமுதலவாய வவ்வெட்டும் பால்போலு மின்சொ லென்றாற்போல வுவமத்திற்கும் பொருட்கும் பொருந்து மொப்புமைக்குணத்தினை விதந்து * சுட்டிக்கூறா வுவமமாதலிற், பொருளொடு புணர்த்துப் புணர்ந்தன கொள்ளாவிடி னப்பொருள் புலப்பாடின்மையி னக்குண முரைக்கற்பாற்று.

இனி யக்குண மீவேராது தன்மைபலவற்றுக்குப் பொதுவாக நிற்றலிற் பொதுவியல்பெனவு, மவரதுதன்மையு ளிதல் வினை யொன்றற்கே யுரிமையாக நிற்றலிற் சிறப்பியல்பெனவு மிருவகைப்படும்.

அவற்றுட், பொதுவியல்பாவது சான்றோரியல் பெனப்படு முறுப்புவகையெட்டு மவற்றுண் முதலுறுப்பாகிய குடிப்பிறப்பின் வகை யெட்டுமாம். சிறப்பியல்பாவது அக்குடிப்பிறப்பின் முதலாவது வகையுண் முதற்குணமாகிய விதபெறாழிற்குக் காரணமெனப்படு முதனிலைவகை யெட்டு மவற்றின் விகற்பமுமாம்.

இனிச் சான்றோருறுப் பெட்டென்பது, ‡ எட்டுவகை நுதலிய வவையத் தானும் என விவ்வாசிரியன் மேற்கூறுமாற்றா னுணரப்படும்.

இனி யவ்வுறுப்புக் குடிப்பிறப்புந், தூய்மையு, மொழுக்கமுங், கல்வியும், வாய்மையு, மழுக்காறிலாமையு, மவாவின்மையு நடுவுநிலையுமென விவை. என்னை?

“ வலம்புரி முத்திற் குலம்புரி பிறப்பும்
வான்யா றன்ன தூய்மையும் வான்யாறு
நிலம்படர்ந் தன்ன நலம்பட ரொழுக்கமுந்
திங்க ளன்ன கல்வியுந் திங்களொடு
ஞாயி றனன வாய்மையும் யாவது
மஃகா வன்பும் வெஃகா வுள்ளமுந்
துலைநா வன்ன சமனிலை யுளப்பட
வெண்வகை யுறுப்பின ராகித் திண்ணிதின்

* தொல்காப்பியம் பொருளதிகாரம் உஅ௳.
‡ தொல்காப்பியம் பொருளதிகாரம் எசு-வது சூத்திரம்.

வேளாண் வாழ்க்கையுந் தாளாண் மையு
முலகிய லறிதலு நிலைஇய தோற்றமும்
பொறையு நிறையும் பொச்சாப் பின்மையு
மறிவு முருவு மாற்றலும் புகழுஞ்
சொற்பொரு ளுணர்த்துஞ் சொல்வன் மையுங்
கற்போர் நெஞ்சங் காமுறப் படுதலு
மின்னோ ரன்ன தொன்னெறி மரபினர்
பன்னருஞ் சிறப்பி னல்லா சிரிய
ரறனே பொருட்பய னின்பெனு மூன்றின்
றிறனறி பனுவல் செப்புங் காலை
முன்னர்க் கூறிய வெண்வகை யுறுப்பினு
ளேற்பன வுடைய ராகிப் பாற்படச்
சொல்லிய பொருண்மை சொல்லியாங் குணர்தலுஞ்
சொல்லிய பொருளொடு சூழ்ந்தநன் குணர்தலுஞ்
செய்ந்நன்றி யறிதலுந் தீச்சார் பின்மையு
மடிதடு மாற்ற மானம்பொச் சாப்புக்
கடுநோய் சீற்றங் களவே காம
மென்றிவை யின்மையுஞ் சென்றுவழி படுதலு
மறத்துறை வழாமையுங் குறிப்பறிந் தொழுகலுங்
கேட்டவை நினைத்தலும் பாடம் போற்றலு
மீட்டவை வினவலும விடுத்தலு முரைத்தலு
முடைய ராகி நடையறிந் தியலுநர்
நன்மா ணாக்க ரென்ப மண்மிசைத்
தொன்னூற் புலமைத் துணிபுணர் வோரே"

¶ என வாத்திரையன் பேராசிரியன் பொதுப்பாயிரங் கூறி னுளகலி னென்பது.

இன்னும்,

---

¶ "வுலம்புரி முத்திற் குலம்புரி பிறப்பும்," என்னும் பொதுப்பாயிரஞ் செய்தா னாத்திரையன் பேராசிரியன். அச்சிட்ட தொல்காப்பியப் பொருளதிகாரம் ௩௱௪-வது சூத்திரத்துரையி னிறுதி. ௮௧௪-வது பக்கம்.

‡ "அழுக்கா றிலாமை யவாவின்மை தூய்மை
யெ ழுக்கங் குடிப்பிறப்பு வாய்மை—யிழுக் காத
நற்புலமை யோடு நடுவு நிலைமையே
கற்புடைய வெட்டுறுப்புக் காண்."
எனக் கூறுமாற்றானு முணரப்படும்.

இனிக் குடிப்பிறப்பு முதலாகக் கூறலே முறையாயினும், † படைகுடி கூழமைச்சு நட்பர ணாறும் என்புழிப்போல யாப்புப் பற்றி வெண்பாவின்க ணவை முறையின்றி நின்றன.

இனி யாத்திரையன் பாயிரத்துள் யாவது மஃகாவென்பது வன்புட னியைதலேயன்றி வெஃகாவுள்ளத்துடனு மியையும்.

இனி வன்பென்பது,

§ "அழுக்கற் றகன்றாரு மில்லையஃ தில்லார்
பெருக்கத்திற் றீர்ந்தாரு மில்."

என்றாராகலிற் பெருக்கத்தை யஃகாமைச்செய்யும் வலியுடைத்தாய வழுக்காறிலாமையை யுணர்த்திற்று. வன்பு வலியென்பன வொருபொருள.

இனிவெஃகாவுள்ளமென்பது,

§ "அஃகாமை செல்வத்திற் கியாதெனின் வெஃக மை
வேண்டும் பிறன்கைப் பொருள்."
என்றாராகலி னத்தன்மைத்தாய வவாவின்மையை.

இனி, யாவது மஃகாத அன்பெனக்கொண்டா லென்னையெனின், அது பொருந்தாது. என்னை? அன்புமுதலாயின முதனூறுப்பாகிய குடிப்பிறப்பின் பொதுவியல்பின்க ணடங்குதலானும், பிறவுறுப்

---

‡ வீரசோழியம் பொருட்படலம் கக-வது செய்யுளுரையிறுதி-அச வது பக்கம்.

† திருக்குறள்-௩அக.

§ ஷை௳ கஎ௦.

§ ஷை௳ கஎஅ.

பினு ளழுக்காறிலாமை கூறப்படாமையானு, மழுக்காறிலாமை யின்றே லேனைய வுறுப்பெல்லா மொருங்கிருப்பினும் பயனின் மையானும், பிறசான்றோரு மன்புகூறும லழுக்காறிலாமையே கூறினாராகலானு மென்பது.

இதுவன்றி,

|| “குடிப்பிறப்புக் கல்வி குணம்வாய்மை தூய்மை
நடுச்சொல்லு நல்லணி யாக்கம்—கெடுக்கு
மழுக்கா றவாவின்மை யவ்விரண்டோ டின்ன
விழுக்கா வவையின்க ணெட்டு.”

என்னும் வெண்பாவினுள் யாவதுமஃகாவன்பு யாவதுமஃகா வெஃகாவுள்ள மென்பவற்றையே யாக்கங்கெடுக்கு மழுக்காறு ஆக்கங்கெடுக்கு மவாவென வுடன்பாட்டாற்கூறுமாற்றானும்,

§ “ குடிப்பிறப் புடுத்துப் பனுவல் சூடி
விழுப்பே ரொழுக்கம் பூண்டு காமுற
வாய்மைவாய் மடுத்து மாந்தித் தூய்மையிற்
காதலின் பத்துத் தூங்கித் தீதறு
நடுவுநிலை நெடுநகர் வைகி வைகலு
மழுக்கா றின்மை யவாஅ வின்மையென
விருபெரு நிதியமு மொருதா மீட்டுந்
தோலா நாவின் மேலோர் பேரவை ”

எனக் கூறுமாற்றானு மஃதுணரப்படும்.

அவற்றுட் குடிப்பிறப்பென்னையோவெனின், காரியங் கார ணத்தின் வேறுபடா வியல்பிற்றாதலிற் காரணமாகிய மரபின்கட் குற்றமின்மையானே யுயர்குலமாகிய குடியிற் பிறந்தார தியல் பெனப்படு மென்பது.

---

|| புறப்பொருள் வெண்பாமாலை அவையமுல்லை யுரையின் மேற்கோள்.

§ அச்சிட்ட தொல்காப்பியப் பொருளதிகாரம் ளசச-வது பக்கம் ௨-வது வரி முதலாக.

இனி யவ்வியல்பின்வகை யென்னையெனின், இன்னிலைக் குந் துறவு நிலைக்கு முரியபொதுவியல்பெனவு, மின்னிலைக்குரிய வந்தணரியல் பரசரியல்பு வணிகரியல்பு வேளாளரியல்பெனவுந், துறவுநிலைக்குரிய தவத்தினியல்பு போகத்தினியல்பு ஞானத்தினி யல்பெனவு மெண்வகைப்படுமென்பது.

அவற்றுட் பொதுவியல் பென்னையோவெனின்,

* "நகையீகை யின்சொ லிகழாமை நான்கும்
வகையென்ப வாய்மைக் குடிக்கு."

எனவும்,

† "நலத்தின்க ணாரின்மை தோன்றி னவனைக்
குலத்தின்க ¶ ணையப் படல்."

எனவும்,

§ "நலம்வேண்டி னாணுடைமை வேண்டுங் குலம்வேண்டின்
வேண்டுக யார்க்கும் பணிவு."

எனவும்,

§ "இற்பிறந்தார் கண்ணல்ல தில்லை யியல்பாகச்
செப்பமு நாணு மொருங்கு."

எனவுங் கூறினாராகலின், வறியார்சென்றவழி முகமலரு நகையு, முள்ளனகொடுக்கு மீகையு, மின்சொற்சொல்லுதலு, ‡ மில்லாரை யெல்லாரு மெள்ளுவராயினுந் தானிகழாமையுங், குல த்தின்க ணையப்படாமைக் கேதுவாகிக் கொடாமை கடுஞ்சொன்

* திருக் · றள்-கூ௫௩

† ஷை. கூ௫௮.

¶ ஐயப்படுமென்பது பரிமேலழகர்கொண்டபாடம். அது கூடாமை யினியச்சிடப்படுந் திருக்குறட்சண்முகவிருத்தியுட் காண்க.

§ ஷை. கூ௯௰.

§ ஷை. கூ௫௧.

‡ ஷை. எ௫உ.

முதலாயவற்றை யின்மையாக்கு மன்பு, † மந்தணர் சான்றோ ரருந் தவத்தோர் தம்முன்னோர் தந்தைதா யென்றிவரெல்லாரையு மிருக் கையெழ லெதிர்செலவுமுதலாயின செய்து பணிவுங், கருத்துஞ் சொல்லுஞ் செயலுந் தம்முண் மாறாகாத செம்மையு, மிழிந்த கருமங் காரணமாகப் பழிபாவங்களின் மடங்கு நாணமுமென வவ்வெட்டென்பது.

அவை யீகைமுதலாக நிற்றலே முறையாயினும் யாப்புப் பற்றிப் பிறழநின்றன. என்னை?

‡ “ இட்டார் பெரியோ ரிடாதா ரிழிகுலத்தோர்
பட்டாங்கி லுள்ளபடி.”

என வுயர்குலத்திற் கீதலையே முதன்மையாகக் கூறினாராக லினென்பது.

இனியவற்றுண் மலை, தனக்குக் காரணமாகிய நிலனீரென்னு மிருவகைமரபுங் குற்றமின்றிப் படைப்புக்காலந்தொட்டு மேம் பட்டுவரு முயர்பிறப்புடைமையி னருவிமுதலாய வுள்ளனகொடு க்கு மீகையும், புறத்தே யருவி விரிந்து மலர்தலி னகையுமெனக், குடிமையு ளிரண்டனை யியல்பாக வுடைத்து. அம்மலை யக்குண த்தோ டருவியோசையான் வன்குரல் காட்டலி னின்சொலின் மையுந், தன்னைக் கூஉயழைப்பி னவர்க் கிறுத்தல்செய்யா மலவ ருரைத்த மொழியினையே தானுங் கூறி யெதிரொலிசெயலி னிகழ் வுமெனக் குற்றமிரண்டுடைத்து.

இனி நிலன் வன்குரலு மெதிரொலியுஞ் செய்யாமையி னக் குற்றமின்று. தன்மாட்டுத் தொடர்புடையாராய சாலிய ரோரா னுழுதலைச் செய்தபின்னர்ப் பசியான் வருந்துதலைக் கண்டு முண வளியாமையி னன்பின்மையுஞ், சான்றோர் தன்முகத்தெதிர்வரி னிருந்தபடியே கிடத்தலிற் பணிவின்மையுமெனக் குற்றமிரண்டு டைத்து. ஈண்டுச் சாலியென்றது நெல்லினை. சாலியர் நெற் பயிர்விளைப்போர்.

---

† புறப்பொருள் வெண்பா மாலை பாடாண்படலம் ௯௧-வது பாட்டு.

‡ நல்வழி ௨-வது பாட்டு.

பூப் பசியான்வருந்திய தும்பிக்குத் தேனீதலானு மிசைபாடலிற் சான்றதாய வத்தும்பி தன்முகத்தெதிர்வரினதனடியைத் தன்முடிமேற்றாங்கித் தாழ்தலானு மக்குற்றமின்று. அகத்தினுள்ள தேனைப் பிறர்காணாவகை யொளித்துத் தானுள்ளவெல்லாங் கொடுப்பதுபோலப் புறத்தே முகமலர்ச்சிகாட்டலி னகமும் புறமுந் தம்முண் மாறுயவாற்றாற் செப்பமின்மையும்,

$ "கருமத்தா னாணுத னாணுத் திருநுத
னல்லவர் நாணுப் பிற."

என்றாராகலின், விரும்பினோரெல்லா முண்ணுமாறு வெளிக்காட்டாது மறைக்கு மிழிந்தகருமத்தி னாணுதலின்றி நிமிர்ந்து, ¶ புலத்தலிற் புத்தேணா டுண்டோ வெனத் தாமேயூடி யவ்வூடலை யுணர்த்துமாறு தங்காதலர் வழிபாடுசெய்யினதன்பொருட்டுநாணுங் குலமகளிர்நாணுப்போல, வத்தும்பி தேனுண்ணற்பொருட்டுப் புறந்தைவந் திசைபாடித் தலையான்வணங்கும் வழிபாட்டினுணிக் கவிழ்தலி, னாணின்மையுமெனக் குற்றமிரண்டுடைத்து.

துலாக்கோல் நாவகத்துள்ள நிறைகாட்டற்பாலவாகிய வரையும் புறத்துள்ள பொருளுந் தம்முண் மாறாகாமையாற் செப்பமும், § யானேக்குங் காலை நிலனேக்குமென்றாராகலி னத்தன்மையராய குலமகளிர்போல மக்கணேக்குங்காலை நாணுதலின்றி வரையும் பொருளு மாறுயவழி,

* "நாணா லுயிரைத் துறப்ப ருயிர்ப்பொருட்டா
னாண்டுறவார் நாணாள் பவர்."

என்றாராகலி, னவ்வண்ணமே கோடாமையென்னுந் தன்னுயிர் துறந்து நடுவணதாகிய தன்னிலைவிட்டு மேலதுகீழதெனப் பிறிதொருநிலனேக்கிச் செல்லுதலி னாணு முடைமையி னக்குற்றமின்று.

---

$ திருக்குறள் ௧0௧௧.
¶ ஷை ௧௩௨௩.
§ ஷை ௧0௯௪.
* ஷை ௧0௧எ.

இனி யாசிரியன் றாய்மரபுதந்தைமரபென்னு மிருவகைக் காரணமுங் குற்றமின்றிப் படைப்புக்காலந்தொட்டு மேம்பட்டு வருதலின், வலம்புரியு மழைத்துளியுமாகிய விருவகையுங் குற்ற மின்றி மேம்பட்ட வலம்புரிமுத்திற் குலம்புரி பிறப்புடையனாதலின், னீகைமுதலாய குடிமை பெட்டு மியல்பி னுடையான். $ இருவர்ச் சுட்டிய பல் வேறு தொல்குடி யென்றார் நக்கீரனாரும்.

இனிக் கழற்பெய்குட மீரமில் கழற்காயுடைமையானுந் தனக்குக்காரணமாய மண்ணைக் குயவன் மிதித்துச் சுடலானு மிருவகை மரபுங் குற்றமுடைமையி, னக்காய் தன்கண் முளைத்த லின்மையாற் றான் பொருளுடைத்தாகாமையானு மலராமை யானு, மீகையினையு நகையினையு மியல்பினின்று. பெய்தபி னீகையுந் தகர்த்தபின் மலர்தலுஞ் செயற்கையாதலி னீண்டைக் கேலா. அக்குட மக்குற்றத்தோடு வன்சொலின்மையு மிகழா மையுமெனக் குணமிரண் டுடைத்து.

இனிமடற்பனை,

† "கற்றறிந்த நாவினார் சொல்லார்தஞ் சோர்வஞ்சி
மற்றைய ராவார் பகர்வர் பனையின்மேல்
வற்றிய வோலை கலகலக்கு மெஞ்ஞான்றும்
பச்சோலைக் கில்லை யொலி."

என்றாராகலி, னவ்வாறு வற்றிய வோலையான் வன்குரலு மிக முழங் காட்டலி னக்குணமின்று. தன்மாட்டுத் தொடர்புடைய சாலியர் பசியான் வருந்திற் கள்ளளித்தலி னன்பு, மச்சான்றார் தன்முகத்தெதிர்வரி னவரடியினைத் தன்றலையாற் றாங்கி யேளாத விற் பணிவுமெனக் குணமிரண்டுடைத்து ஈண்டுச் சாலியென்றது கள்ளினை. சாலியர் கள்விளைப்போர். சான்றாரென்றது அத்தொ ழிலுடைச் சாதியாரை.

இனி முடத்தெங்கு பாளை யீனுமையிற் பசிக் குணவளியா மையானு முணவின்மையான் விருந்தினர் தன்முகத்தெதிர் வாரா

---

$ திருமுருகாற்றுப்படை-௨௭௬-வது அடி.

† நாலடி-௨௯௯.

ாதலி னவரடியினைத் தாங்கிப் பணியாமையானு மக்குணமின்று. அகத்து ளொருபொருளு மின்மையானும் புறத்துப் பொருளு டையதுபோல முகமலர்ச்சிசெய்து காட்டாமையானு மகமும் புறமுந் தம்முண் மாறுகாமையாற் செம்மையுங், கூட்டிச் செல்லு மியல்பிற்றாதலிற் ‡ குளுண்ட நீரைத் தலையாலே தான் றருதற் கிய லாமைபற்றிவரு நாணுமுமென்க் குணமிரண் டுடைத்து.

இனிக் குண்டிகைப்பருத்தி, யகத்துள்ளது தின்னற் குரித் தாகாத பஞ்சேயெனினுந் தின்னற்குரிய பொருளுடைத்தெனத் தோன்றுமாறு புறத்தே பசியநிறங் கோடலி னகமும் புறமுந் தம்முண் மாறுகலானுந், தான் குண்டிகையுட் புகாக்காலை யம்மா றுபாடு கருதி நாணுது நிமிர்ந்து நின்று, குண்டிகையுட் பெய்து வைத்து நீர்வார்த் துபசரித்தகாலைச் சிறார்க்கு நன்றிசெய்யாமல்,

> ¶ "முகைமொக்கு ளுள்ளது நாற்றம்போற் பேதை
> நகைமொக்கு ளுள்ளதொன் றுண்டு."

என்றாராகலி, னத்தன்மைபராய குலமகளிர் நாணுப்போலப் புலனாகாததோர் பொருளுடைத்தெனக் காணப்படலானு மக் குணமின்று.

இனி யாசிரியனல்லாதா னிருவகை மரபுங் குற்ற முடைமை யா னவ்வெட்டனையு மியல்பினிலன்.

இனி மலை, யுயர்பிறப்பிற்றாயினு மாசிரியற்காகாக் குற்றஞ் சில வுடைமையானுங் குடிமையெட்டனையு முணர்த்தாம லெஞ்ச வுணர்த்தலானு மக்குற்றத்தை விலக்கி, யம்மலையா னுணரப்ப டாதவேனைக்குணத்தினை யுணரற்பொருட், டம்மலையின் பி னிலனு மங்நிலனு மத்தன்மைத்தாதலி னதன்பின்னர்ப் பூவு மப்பூவு மத் தன்மைத்தாதலி னதன்பின்னர்த் துலாக்கோனு முவமங் கூறி, யந்நான்கானு மக்குடியியல் பெஞ்சாம லுணரப்படலி, னவற் றின்பின்னர்ப் பிறிதொன்று கூறாமலும் விடுத்தார்.

---

‡ "தளரா வளர்தெங்கு தாளுண்டநீரைத் தலையாலே தான்றருத லால்" என்பது முதுரை.

¶ திருக்குறள், ௧௨௭௪.

இனிக் கழற்பெய்குட, மாசிரியனல்லாதானுக் கியற்கையி னில்லாத குணஞ்சில வுடைமையானு மவனது தன்மையு ளெல்லாமுணர்த்தர்ம லெஞ்ச வுணர்த்தலானு, மதன்பொருட்டு மடற் பனையு மதுவு மத்தன்மைத்தாதலின் முடத்தெங்கு மதுவு மத் தன்மைத்தாதலிற் குண்டிகைப்பருத்தியு முறையாற் கூறி, யந் நான்கானு மவனியல் பெஞ்சாம லுணரப்படலிற், பிறிதொன்று கூறாமலும் விடுத்தார்.

இவ்வாற்றானே தனிநின்றவழிப் பொருளது தன்மையை முற்ற வுணர்த்தாமையின், மலைமுதலாய வந்நான்கு மொருங்கு நின் றாசிரியனுக்குப் பிண்டவுவம மாகுமென்பதூஉ, மவை பிண் டமாயவாற்றான் மலையின் குற்றத்தை நிலனு நிலத்தின் குற்றத் தைப் பூவும் பூவின் குற்றத்தைத் துலாக்கோலுங் களைதலி, னந் நான்கனது குணங்க ளொருங்கெண்ணப்படலா னவை யாசிரிய னியல்பாயின வென்பதூஉ, மவ்வாறே கழற்குடமுதலாயின வாசி ரியனல்லாதானுக்குப்பிண்டவுவம மாகுமென்பதூஉ, மவ்வாற்றாற் குடத்தின் குணத்தைப் பனையும் பனையின் குணத்தைத் தெங் குந் தெங்கின் குணத்தைப் பருத்தியுங் களைதலி, னந்நான்கனது குற்றமு மொருங்கெண்ணப்படலா னவை யாசிரிய னல்லாதானி யல்பாயினவென்பதூஉங், கழற்குட மலையியல்பின் மறுதலையு மடற்பனை நிலத்தின் மறுதலையு முடத்தெங்கு பூவின் மறுதலையுங் குண்டிகைப்பருத்தி துலாக்கோலின் மறுதலையுமாகுமென்பதூஉ, மிவ்வா றுடன்பாட்டானு மெதிர்மறையானு மாசிரியனது குண மு மல்லாதானது குற்றமு முணரப்படலி, னாசிரியனல்லாதா னாசி ரியனது தன்மையின் மறுதலைத்தன்மை யுடையா னென்பதூஉம் பெறப்பட்டன. இனி யுரைப்பனவு மன்ன.

இனி யிவ்வுவமத்தா னின்னிலை துறவுநிலை யென்னு மிரண் டனு ளொன்றுபற்றி நிற்கு நால்வகை வருணத்துள்ளு மாசிரி யனு மல்லாதானுமாகிய வவ்விருவகையாரது பொதுவியல்பு மின் மையு முணரப்படும்.

இனி யவை யியற்கையாமா றென்னையோவெனின், அவ்வெ ட்டு மிற்பிறந்தார்க்காயி னொருவர் கற்பிக்கவேண்டாமற் றாமே யுளவாகுதலானும்,

§ " அடுக்கிய கோடி பெறினுங் குடிப்பிறந்தார்
குன்றுவ செய்த லிலர். "
எனவும்,

** " வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பிற் றலைப்பிரித லின்று. "
எனவும்,

* " சலம்பற்றிச் சால்பில செய்யார்மா சற்ற
குலம்பற்றி வாழ்துமென் பார். "

எனவுங் கூறினாராகலிற், பெருக்கம்பற்றியும் வறுமைபற்றியுஞ் சலம்பற்றியு மவ ரவ்வியல்பின் வேறுபடாரென்பது பெறப் படலானும் பிறர்க்காயிற் கற்பித்தவழியு மவை நெடிதுநில்லாமையானு மஃதறியப்படுமென்பது.

இனி,

‡ " ஒழுக்கமும் வாய்மையு நாணுமிம் மூன்று
மிழுக்கார் குடிப்பிறந் தார். "

என்றாராகலி, னவற்று ளொழுக்கமும் வாய்மைமையுமென வவ்விரண்டனையு மவ்வெட்டனொடு கூட்டி யுரையாது வேறு கூறினமையு நாணினை யவ்வாறு கூறாமையு மென்னையெனின், அவையு மியற்கையாயினு மொழுக்கமும் வாய்மையு நந்நான்கு வகைய வாதலானு, மேனைய நாணமுதலாய வெட்டும் பல்வகைய வாகாமையானு, மவ்வெட்டனையுங் குடிமையென வோருறுப்பாக்கியு மொழுக்கத்தினையும் வாய்மையினையு மிருவே றுறுப்பாக்கியுங் கூறினா ரென்பது.

இனிச் செப்பமு நாணுமென முன்னர்க் கூறப்பட்டவற்று, ளணிவினை யொழுக்கமும் வாய்மையு நாணுமெனப் பின்னுங் கூறிய

§ திருக்குறள் கூஉ.
** ஷை கூஉ
* ஷை கூஉ,
‡ ஷை கூஉ

தென்னையோவெனின், இக்கடா வந்நூலுரைக்குமிடத்து வேண்டுமோ தலி னின்றோரன்ன யின்மைக்கேலா வென்பது.

இனி,

*" ஒழுக்க முடைமை குடிமை யிழுக்க
மிழிந்த பிறப்பாய் விடும்."

எனவுங் † குலத்தளவே யாகுங் குணமெனவுஞ் சான்றோர் கூறினாராகலி, னொழுக்கத்தி னிழுக்காதுநிற்பின் வேற்றுமை தெரிந்த நாற்பாலுள்ளுங் கீழ்ப்பால்வருணத்தானாயினு மவ்வருணத்து ளுயர்குலத்தானாகுதலானும், மேற்பால்வருணத்தானாயினு மிழுக்கி னவ்வருணத்துட் கீழ்ப்பாற்குலத்தானாதலொடே யன்றிக் கீழ்ப்பால்வருணத்தானு மாகுதலிற் பிறப்பினு மிழிதலானும், மேற்கூறிய பொதுவியல்பே யன்றித் தத்தம்வருணத்துக்கோதிய சிறப்பியல்பு மின்றியமையாமையி னவ்வியல்பு ளந்தணரியல்புரைக்கற்பாற்று.

இனி யவ்வியல் பென்னையோவெனின்,

§" ஓதல் வேட்ட லவைபிறர்ச் செய்த
லீத லேற்றலென் றாறுபுரிந் தொழுகு
மறம்புரி யந்தணர் வழிமொழி யொழுக்கம்."

என்றாராகலி, னவ் ¶ அறுவகைப்பட்ட பார்ப்பனப்பக்க மென்பது.

அவற்றுண் மலே,யெழுதற்கியலாதனவாகி நாளிடையீடின்றி யொலிக்கு மருவியொலியு, நாளிடையிட் டோரொருகாலத் தொலிக்கு மழையொலியுங், காற்றுள்ள காலத்து மூங்கின்முதலாயவற்றா னெழு மருமராஞ்சவொலியு, மெழுதற் கியலுமா றொரு

---

* திருக்குறள் ௧௩௩. † முதுரை.

§ தொல்காப்பியப்பொருளதிகாரம் ௧௪௰-வது பக்கம் ௨-வதுவரி.

¶ ஷை பொருளதிகாரம் ௭௫-வது சூத்திரம்.

வர் கூறியவழி யுளதாகு மெதிரொலியு மென, நால்வகை யொலி யுடைத்து.

அவற்று ளருவியொலி போல வெழுதாக்கேள்வியை யிடை யீடின்றி யோதலுடையா ரந்தணர்.

அம்மலை, பைந்தியு முத்தீயுமென விருவகைக்கடவுட்டீயும் வெளிப்படுதற்குக் காரணமாய வச்சுவத்தமென்னு மரனையு, மக் கடவுட் காசனமாகிய சமிமுதலாய மரனையு, முலகிபற்றீயு ளௗ பாசனத்திப்போல வவியாது விளங்குஞ் சோதிவிருக்கத் தையு, மூணடுதீப்போல வேண்டுங்காலை யெரிவெளிப்படற்குரிய வேனையமரனையும், வேள்விக் கின்றியமையாது வேண்டுஞ் சோம லதைமுதலாய பிறவற்றையு முடைத்து. தீக்கடவு ளச்சுவவுரு வங்கொண்டு தன்மருங் கொளித்தலா னரசமர மச்சுவத்தமென ப்பட்டது.

இனி யரணியி னின்று வெளிப்படு மைந்தீ முத்தீயென்னுங் கடவுட்டீயு மேனை யுலகியற்றீயுமென வவற்று ளொன்றுபற்றி யந்தணர் வேட்டலி, னம்மலை யவாக் குவம மாயிற்று.

இனிக் காருகபத்தியமு மாகவநீயமுந் தக்கிணாக்கினியு மென்பன முத்தீ யெனப்படும். அவற்றொடு சப்பியமு மாவசத் தியமுங் கூடி யைந்தீ யெனப்படும். மனையாளுட னில்லத்து ளோம்புந்தீ யௌபாசன மெனப்படும். ஊணடுதீயென்பது அட் டிற்றீயினை.

தீக்கடவு ளொளித்துப் புக்கமையா னரசு, மிரதத்துக் கிரு ப்பிடமென வேதம் புகழ்வதா லத்தியுந், துறக்கத்திருந்து நில வுலகத்துப் போந்தமையாற் புரசு, மக்கடவுளின் குரோதத்தைச் சமஞ்செய்தலாற் சமியெனப்படும் வன்னியு, மக்கடவுளி னொளி யிருத்தலாற் களாவு, மேகத்தி னியைபா னேரொளி தங்கலி னிடிவீழ்மரனும், யாகபதியாகிய மாயோனிருப்பிட மாதலிற் றுமரையிலையுமென, வவ்வேழு மக்கடவுட் காசனமாதற் குரிய வாயின.

தீக்கடவுளின் குரோதத்தைச்சமஞ்செய்யும் வன்னிமரனுடையமலை வினைத்தியின் குரோதத்தைச் சமன்செயற்பொருட்டு வேள்வி செய்யு மந்தணரியல்பைக் குறிக்கும்.

இனி யோதுவிப்பார் மாணுக்க ரோதுங்காலைத் தாமோதாராகலானும், வேட்பிப்போர் வேட்போரது தீயினைக்கொண்டன்றித் தமது தீயான் வேட்டல் செய்யியாராகலானு, மம்மலை யோதலுந் தீயுந் தாமெனுழியாதுகோடலி னவ்விரண்டனை யின்றெனலறியப்படும்.

இனி நிலன், பயிற்றுவார் பயில்வாரை யோதுவித்தாற்போல வுழவரை யுழுங்காலை யேர்நடத்தற்பொருட் டொலிப்பச் செயலினேதுவித்தலுந் தன்வளங் கொண்டு ‡ பகடு நடந்தகூழ் பல்லாரோ டுண்க எனவும்,

§ "பகுத்துண்டு பல்லுயி ரோம்புத னூலோர்
தொகுத்தவற்று ளெல்லாந் தலை."

எனவும்,

§ "பரிந்தோம்பிப் பற்றற்றே மென்பர் விருந்தோம்பி
வேள்வி தலைப்படா தார்."

எனவுங் கூறினாராகலி, னவ்வாறோம்பி வேள்விதலைப்படச் செய்வித்தலான் வேட்பித்தலுமென வவ்விருதொழிலுமுடைத்து.

இனி நில னிவ்வாற்று னந்தணர்க் குவம மாயிற்று.

இனி நிலந் தன்புதல்வராய வுழவருங் கணவனுய வரசனுமென வச்சுற்றமன்றிப் பிறர்க்களியாமையி, னந்தணர்க்கியல்வதாகிய விருந்துபுறந்தர லென்னு மீகையினையின்று.

பூத் தன்கணுள்ளதேன் சிறிதளவிற்றாயினு மதிதியாகிய தும்பிக்கு முகமலர்ந்தளித்து விருந்துபுறந்தரலி னவ்வீகையுடைத்து.

‡ நாலடி ௨. § திருக்குறள் ௩௨௨. § ஷை ௮௮.

சத்துப்பிரத்தனென்னு மந்தணனொருவ னறக்கடவுளாகிய வதிதிக்குத் தன்னில்லத்துள்ளசிறிதளவிற்றாய நென்மாவினை யளித்தாங் களித்த லந்தணரீகை.

அப்பூத் தன்முதலாகிய கொடிமுதலாயின நீரிரப்பினுந் தானொன்று மிரவாமையி னேற்றலின்று.

இனி,

|| "வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவுந் தமபோற் செயல்."

என்றாராகலிற், றுலாக்கோ லவ்வாறு விலைப்பொருளு ளூதிய மேற்ற லுடைத்து. ஊதியமொழிந் தெஞ்சியவிலை பொருட்கீ டாதலி னஃதேற்றற்பொருளாகாமை காண்க.

இனி,

* "நிலம்பொறை யாற்று நீதிபல கொண்டுங்
குலம்பெறுதீங் கந்தணர் கொள்ளார்."

என்றாராகலின், வேட்பித்தன்முதலாய நெறியானன்றி யேலா ரந்தணர்.

இனி யந்தணர் செல்வம்பேணுங் கருத்தான் முயலாது கல்வி பேணுங்கருத்தான் முயல்வராதலி, னவரிடத்துள்ளன கொள்வோர் வேண்டளவிற் குறையினுங் குற்றமாகாமையானும்,

¶ "ஆற்றுவா ராற்றல் பசியாற்ற லப்பசியை
மாற்றுவா ராற்றலிற் பின்."

எனவும்,

† விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று."

---

|| திருக்குறள், ௧௨௰. ¶ ஷை ௨௨௫. † ஷை ௮௨.
* தொல்காப்பியம் பொருளதிகாரம் ௧௬-வது பக்கம், ௧௧-வதுவரி

எனவுங் கூறினாராகலின், விருந்து புறத்ததாக வுண்ணுமை யே யவாக்கியனு மறமாக முடிதலானு, மலையு நிலனுந் துலாக் கோலுங் கொள்வோர் வேண்டளவிற் குறையாமலும் வரையாம லு மிகக்கொடுத்தலி னவ்வீகை யந்தணர்க்கொல்லாமையிற் பூவி னீகையே யவர்க்குப் பொருந்துமியல்பிற்றென் றுணரப்படும்.

இனி யக்குட மொலியாமையானுந் தீயின்மையானு மோத லும் வேட்டலு மின்றித், தன்கணுள்ள கழற்காயினுற் சிறுரை யொலிப்பித்தலானுந் தீத்தொழில் புரிவித்தலானு மோதுவித்த லும் வேட்பித்தலு முடைமையின், மலையின் மறுதலைத்தன்மை த்து. இவ்வியல்பு பிற்கூறு மரசரியல்பிற்கும் வணிகரியல்பிற் குங் கொள்ளப்படும்.

இனி யப்பனை, கள்விளைப்போரை யொலித்தல் செய்வியா மையானுங் கள்விளைக்குங்காலை யதுகொண்டு தீத்தொழில் புரிவி யாமையானு மோதுவித்தலும் வேட்பித்தலு மின்றி, யதிதிகளா கிய சான்றோர்க்களித்தலான் விருந்துபுறந்தந்து பசிமாற்றலுடை மையி, னிலத்தின் மறுதலைத்தன்மைத்து.

இனி யத்தெங்கு பாளையினுமையிற் பசிமாற்ற லின்மையானு நீரேற்ற லுடைமையானும் பூவின்மறுதலைத்தன்மைத்து.

இனி யப்பருத்தி, நீரினைச் சிறார் வலிதிற்பெய்யினு மதனைத் தன்னகத்துட் கொள்ளாது மிதத்தலா னேற்றலையின்றுதலிற் றுலாக்கோலின் மறுதலைத்தன்மைத்து.

இவ்வாற்று னந்தணர் வருணத்து ளாசிரியனல்லாதானது தன்மையுணரப்படும்.

இனி யரசரியல் பென்னையெனின், ஓதலும் வேட்டலு மீத லுங் காத்தலுந் தண்டமுமென ** வைவகை மரபி னரசர்பக்கமெ ன்பது.

இனி யந்தணர்க்குச் சிறப்பியல்பெனக் கூறியவற்று ளோத ன்முதலாய மூன்றனை யரசர்க்குங் கூறுத லென்னையெனின், அவை வினைநிகழ்ச்சியா னொருதன்மையவாயினு மவ்வவ்வருணத்

** தொல், பொருளதிகாரம் எடு-வது சூத்திரம்.

துக்குரிய சிலவேறுபாடு முடைமையி னதுபற்றி யரசர்க்குஞ் சிறப்பியல்பாயின வென்பது. இஃதேனோர்க்கு மொக்கும். அவற்றின் விகற்பங்களையெல்லாந் தனித்தனிக்கூறப்புகின் விரியுமாதலி, னீண்டுக்கூறு முவமவாயிலானன்றிப் போதாயன மனு பாரதமுதலாய நூல்கொண்டு முணர்க.

இனிச் சிலகூறி யேனையவு மின்னவென் றொழியாம லெல்லாவகையு முரைக்கப்புக்க தென்னையோவெனின், நூலு ளறுவகைப்பட்ட பார்ப்பனப்பக்கமு மென்றற்றொடக்கத்துச் சூத்திர முதலாகப் பலசூத்திரங்கட் கிம்முறைகொண்டே யுரையினைத் தூய்தாக்கப்படுமாதலி, னாங்கெல்லா மிதனைத் தனித்தனியெடுத்துக்காட்டல் கூடாமையி னீங்குக்கூற லின்றியமையாமையாயிற் றென்பது.

இனி யரச ருலகுகாத்த லுடையராதலிற் போர்முதலாய வினையாற் கால மிடையீடிலு மமையுமென நூல்விதித்தலின், மலையி னொலிவகை நான்கனுண் மழையொலி யவர்க்குவம மாயிற்று.

வேட்டலுள்ளும் பிருகற்பதிசவன மந்தணர்க்கு மிராசசூயமுந் துரங்கவேள்வியு மரசர்க்குஞ் சோமயாகம் வணிகர்க்கு முரியவு மேனைய பொதுவுமாதலி, னங்கியங்கடவு ளச்சுவவுருக்கொண்டு புக்கொளித்த வரசினையுடைய வம்மலை யச்சுவவேள்விக்குரிய வரசர்க்கு வேட்டற்றொழில்பற்றி யுவமமாயிற்று

இவ்வாற்ற னரசர்தொழிலு ளோதலும் வேட்டலும் பெறப்பட்டன.

இனி மலை † நறுந்தண் டகரம் வகுள மிவற்றை வெதுப்புதல் போல் வேண்டாது வெட்டி யெறிந்துழுது சேந்தினை வித்துந் தன், சுற்றமாகிய குறிஞ்சிநிலமாக்களுக்கு மிகப்பயன் படச்செய்யாம லேனையநிலமாக்களுக் கருவிநீரைப் பயன்படுத்தலி னரசர்க்குரிய வீகையின்று.

† தொல், பொருளதிகாரம் ௨௧௧-வது டக்கம்.

இனி நிலன் றன்மாட்டுத் தொடர்புடைய சுற்றத்துக்கே யவர்வேண்டுவனவற்றை யின்சொல்லுட னீதலுடைத்து. இன்சொலென்றது இனியசொல்லினை.

இனி,

‡‡ "இன்சொலா லீத்தளிக்க வல்லாற்குத் தன்சொலாற்
றான்கண் டனைத்திவ் வுலகு."

என்றாராகலி னவ்விகையுடையா ரரசரெனப்படுவார்.

அரச னுலகுகாக்கும் பேரறமுடையா னாகலானு, மக்காத்தற்றொழிற் கின்றியமையாப்பொருளை யத்தொழி னிலைபெறுமாறு தம்முயிருங் கொடுப்போராய தன்படையாளரென்னுஞ் சுற்றத்துக்களித்தலே யின்றியமையாமையானு மதனிற் பிறர்க்களியாவிடினுங் குற்றமாகாமையானு, நிலத்தினீகையே யவர்க்கியலு மீகையாயிற்று.

இனி நிலன் பயிர்க்குக்கேடுவிளைக்கும் பன்றிமுதலாய வற்றையுங் களையினையுங் கள்வரையுங் கடியாமையிற் காத்தலையின்று.

இனிப்பூ,

§ "பிணியின்மை செல்வம் விளைவின்ப மேம
மணியென்ப நாட்டிற் கிவ் வைந்து."

என்றாராகலி னவ்வைந்தியல்புமுடைய வகத்திதழாகிய தன்னாட்டுப்புக்க தும்பியாகியகுடி யதன்காவலானும்,

** "சிறுகாப்பிற் பேரிடத்த தாகி யுறுபகை
யூக்க மழிப்ப தரண்."

என்றாராகலி னவ்வியல்பினவாகிய புறவிதழென்னு மரணின்காவலானு, மீமுதலாய பிறவற்றா னலிவுறாமற் காக்கப்படுதலிற் குடிபுறங்காத்தோம்ப லுடைத்து.

---

‡‡ திருக்குறள், ஙஅஎ. § டை எஙஅ. ** டை எசச.

இனி,

§ "ஆபயன் குன்று மறுதொழிலோர் நூன்மறப்பர்
காவலன் காவா னெனின்."

என்றாராகலி னவ்வண்ண மப்பூத் தும்பியைக்காவாவிடிற் காம்பின்பயனாகியதேன் ஞாயிற்றினொளியாற் குன்றுதலு மறுதாட்டும்பி யிசைநூன்மறத்தலு மறிக. இவ்வாற்றாற் காத்தல் பெறப்பட்டது. அப்பூத் தன்குடியாகிய தும்பி கள்ளுண்டு களித்தவிடத்து மொறுத்தல்செய்யாமையிற் றண்டமின்று.

இனி,

‡ "குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்
வடுவன்று வேந்தன் றொழில்."

எனவும்,

$ "கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர்."

எனவுங்கூறினாராகலி, னம்முறையானே துலாக்கோ றன்கட்டேக்கிய பொருண்மிகி னச்செயல் வணிகற்குக் கேடு பயத்தலினதனைக் குறைத்தலானுங், குறையிற் கொள்வோர்க்குக் கேடுபயத்தலிற் பின்னும் பொருள்கோடலானு, மத்தூக்கிய பொருள் கொள்வோர்க்கு வேண்டாப்பொருளெனக் காணி னவ்விருவர்க்குங் கேடுபயத்தலி னதனை யறவொழித்தலானுந், துன்பஞ்செயலும் பொருள்கோடலுங் கோறலுமென மூவகையொறுப்பு முடைத்து. இதனாற் றண்டம்பெறப்பட்டது.

இனி யக்குடை, மோதலும் வேட்டலுமின்மையானுந் தன் சுற்றமாகிய சிறார்க்கே கழலளித்தலானு மலையின் மறுதலைத்தன்மைத்து.

அப்பனை, தன்றோலையின்க ணூலினை யெழுதிவைத்து நிலைநாட்டி, யவ்வோலையி னொருதனியானைக் குலகுபுரக்கு மலகிலரசரு மஞ்சிப்பணிந்து நெஞ்செனுந் திறையளிப்பச்செய்யுங் கல்விவிரராகிய வுறுதிச்சுற்றத்துக் கவருண்ணற்பால வொன்றனையுமளியாமையி னீகையின்மையுங், காப்பெல்லாவற்றுள்ளு முதன்மையதாகிய நூல்வரைய வேடளித்தலிற் காத்தலுமுடைமையினிலத்தின் மறுதலைத்தன்மைத்து.

§ திருக்குறள் ருகம. ‡ ஷை. ருசக. $ ஷை. ருருஉ.

அத்தெங்கு ஞாயிற்றி னொளியின்றி நோயுற்று முடம்பட்டமையாற் பிணியுடைத்து. காயினமையிற் செல்வமின்று. பாளையின்மையின் விளைவின்று. வினைத்தெங்கிற்குத் தலைக்காய்ப்பின்கணுடைபுனைந்து பொங்கலிட்டு மணப்புணர்த்து விழாவயர்தலுலகவழக்காதலி னச்சிறப்பும் பிறவுந் தனக்கின்மையி னின்பமின்று. விளைவின்மையி னேமமின்று. இவ்வாற்றா னாட்டிற்குரிய விலக்கண மின்மையானுந், தன்மருங்கெய்தினார துயபகையூக்கமழியாமையி னரணின்மையானும், பசியு நீர்வேட்கையுந் தணியாமையானுங் குடிபுறங்காத் தோம்பலின்று. ஞாயிற்றி னொளிபடாத் துரவுநீர்முதலாயவு மப்பெற்றியவாய மரநிழன்மேக நிழன்முதலாயவு நோயுறுத்துமெனப் பிடகநூல் கூறலி, னவ்வாறு தன்னை யேனைய தெங்கினது நெருக்கத்தான் முடமுறச் செய்த கொடியார் தன்மருங்குறி னோயுறுத்தலாற் றண்டமுடைத்து.

அப்பருத்தி தன்னைப் பஞ்சளியாவண்ணம் நீருட் பெய்து தடைச்செய்த கொடியாராய சிறாரை யொறுத்த லின்மையிற் றண்டமின்று.

இவ்வாற்றா னரசரு ளவ்விருவகையாரது தன்மை யுணரப் படும்.

இனி வணிகரியல் பென்னையெனி னோதலும் வேட்டலு நிரையோம்பலும் வாணிகமு முழவு மீதலுமென * வீருமூன்று மரபினவாய பக்க மென்பது.

இனி வணிகர்க்கு வாணிகமே சிறப்புடைத்தாதலானும் வாணிகங் குறித்துத் திரைகடன்மேலும் பிறதேயத்துஞ் செல்லுழி வேதமோத னியமமாகாமையானும், பொருண் முட்டுப்பாடின்றித் தந்நாட் டிருக்குங்காலை யோதினு மமையுமாதலானு, மலையின்கட் காற்றுளபோழ் தொலிக்கு மருமராஞ்ச மவ்வணிகரோதற் குவமமாயிற்று. சோமலதை முதலாயின கொண்டு பலையினை யவர்வேள்விக் குவம மாக்கப்படும். அம்மலை நிரையழிக்கும் புலிமுதலாயவற்றை யுடைமையி னிரையோம்ப லின்று.

---

* தொல்காப்பியம் பொருளதிகாரம், எடு.

தன்வளத்துக்குக் காரணமாகிய வித் தித்துணைத்தென்றும் வள னித்துணைத்தென்று மறியலாகாமையின் வாணிக மின்று.

நிலன் றன்கணுள்ள நெல்லின் களைபானும் புல்லானு நிரை யோம்பலுடைத்து. வித்தாகியமுத லித்துணைத்தென் றறியப் படலானு மதனை யொன்றுபலவாக்கி விளைத்த வூதியமாகிய வளனு மித்துணைத்தென் றறியப்படலானும் வாணிக முடைத்து. தன்னை யுழுதலன்றித் தானுழாமையி னுழவின்று.

பூத்தன்மேற் றும்பியு மதன்பெடையு மொருங்குற்றகாலைக் காற்றசைப்பிற் றானசைந்தசைந்து, கையாகிய விதழை யக்க ரிய தும்பிக்கும் பெடைக்கு மிடையே நீட்டி யோட்டுங் காட்சி ** மாமனு மருகனும் போலு மன்பின காமனுஞ் சாமனும் போலுங் காட்சிய வாய கரிய † நெறிமருப் பெருமையி னேருத்த லேரினை யுழ வர் கைப்பற்றியுழுங் காட்சியோ டொக்கு மாதலி னுழவுடைத்து. பசித்தார் யாவராயினு மூணளித்த லறமாமெனவைந்த வித்தான் விதித்தலிற் றேனீத லறமாயினுங் கட்குடியுடைய தும்பிக்கு மகரந்த மாய பொருளளித்த லறமாகாமையிற் றக்காரையறிந்தீ தலை யின்று.

அக்கோல்,

‡ "தளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு."

எனவும்,

§ "ஈட்டிய வெல்லா மிதன்பொருட் டென்பதே
காட்டிய கைவண்மை காட்டினார்—வேட்டொறூஉங்
காமருதார்ச் சென்னி கடல்சூழ் புகார்வணிகர்
தாமரையுஞ் சங்கும்போற் றந்து."

எனவுங் கூறினாராகலி, னவ்வண்ணமே விலைகொடுக்குந் தக்கார்க் கவர்வேண்டுவன குறையாது கொடுத்த லுடைத்து.

சங்கநிதியும் பதுமநிதியும் பின்னுமளித்தற்குரிய தன்னாற் றலை யளியாம னிதியமெல்லா மளிக்கும். வணிகர் முதற்பொ ருளை யளியாம லூதியமெல்லா மொருங்கே யீதலுடையார்.

---

** சீவகசிந்தாமணி நாமகளிலம்பகம். கசு. † ஷை கரு.

‡ திருக்குறள், உகஉ.

§ தொல்பொருளதிகாரம். கரூசு-வது பக்கம், கரு-வது வரி.

இனி யக்குட மோதலும் வேட்டலு மின்மையானு, மேனைக் குடம்போலக் கற்றுவின்பாற் கறத்தற்கு மேற்றற்கும் பயன்படா மற் கிடத்தல் கன்றுசாவப் பால்கறவா ரென்ற மேலையோரது நன் மொழி கடைப்பிடித்துக் கன்றினைப் பாதுகாக்குங் கருத்தொடு நிரையோம்பற் குணத்தைக் காட்டலானு, முத லிவையென்றும் விளையாட்டி னாதியத்தாற் கிடைத்தன விவையென்றுஞ் சிறார் கழல்கணித்துப் பெய்தலின் வாணிகமுடைமையானு, மலையின் மறுதலைத் தன்மைத்து.

அப்பனை ¶ யாவுரித்துத் தின்றுழலும் புலையரைக் கள்ளூட்டிக் காத்தலி னிரையோம்ப லின்று. ஏனைப்பனைபோல வொன்றுபல வாதற்குரிய வித்தாகிய முதலைப் பெருமையின் வாணிக மின்று. மடல்விரிந்தகாலைக் கீழ்த்தூங்குவன வெருமைக்கடாக்களின் காலெனவு மேலுள்ள தழுபடைக் கருவியெனவுந் தோன்று மாதலி னுழவுடைத்து.

அத்தெங் குழுதற்குரிய கருவியு மொன்று மின்மையி னுழ வின்று. தன்னீர்க்கினைத் துராற்குப்பை நீக்குங் கருவியாகக் கோயின் முதலாயவற்றுக் களித்தலிற் றக்கார்க் கீதலுடைத்து.

அப்பருத்தி தன்பஞ்சினைத் தக்காராய நூற்போர்க் களி யாது தகாராய சிறார்க் களித்த லுடைத்து.

இவ்வாற்றான் வணிகரு ளவ்விருவகையாரது தன்மை யுண ரப்படும்.

இனி வேளாள ரியல்பென்னையெனின், மேல் வணிகர்க்குக் கூறியவற்றுள் வேட்ட லொழிந்த வைந்தனொடு வழிபாடுமென விருமூன்று மரபினவாய பக்கமென்பது. ஒரு சாராசிரியர் வழி பாடு கொள்ளாமற் பெண்கோடல்பற்றி வேட்டலுளதென வத னைக் கூட்டி யாறென்பாரு முளர். அவ ரரசராற் சிறப்பெய்தாத வேளாளர்க்கே வழிபா டுரித்தென்பர்.

இனி மலை, யிலனென்னு மெவ்வ முரைத்துத் தான் பிறர் மாட் டிரவாமையு மிரப்பார்க்குத் தன்மாட்டுள்ள பொருளுள்

¶ திருநாவுக்கரசு நாயனார் தேவாரம். ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனு மவர்கண்டீர் யாம்வணங்குங் கடவுளாரே.

யாதுவேண்டினுஞ் சிலையாகிய தன்னுறுப்புள் யாதுவேண்டினும் வரையாதீதலு முடைத்து.

இனி,

† "இரவா ரிரப்பார்க்கொன் றீவர் கரவாது
கைசெய்தூண் மாலை யவர்."

எனவும்,

‡ "இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்
குலனுடையான் கண்ணே யுள."

எனவும்,

§ "அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையா
ரென்பு முரியர் பிறர்க்கு."

எனவுங் கூறினாராகலின், ¶ னிரப்போர்சுற்றமும் புரப்போர் கோற்றமு முழவிடைவிளைப்போராகிய வேளாள ரப்பெற்றியவாகிய வீகையுடையார்.

அவர் மலையி னெதிரொலிபோல வெழுதாக்கேள்வியாகிய வேதமோதலின்றி யெழுதப்படுவனவாகிய தருக்கமுங் கணித மும் பிறவு மோதுத லுடையார்.

இனித் தும்பியி னிசையைச் சேணிடைக் கேட்டமாத்திரை யா னிருக்கைவிட்டெழுந்து பணியாது வந்தபின்னரே பணித லிற் பூ வழிபா டின்று. துலாக்கோ றன்னிற் பெரியாராய கொள் வோரைக் கண்டமாத்திரையானே யிருக்கையெழலு மெதிர் செலவுமுதலாயின முன்னர்ச்செய்து பின்ன ரவர்வேட்டபொரு ளை யவர்வேட்டவாறே நிறுத்தளித்தலின் வழிபாடுடைத்து.

இனிவேளாளர்,

† "இருக்கை யெழலு மெதிர்செலவு மேனை
விடுப்ப வொழிதலோ டின்ன—குடிப்பிறந்தார்
குன்றா வொழுக்கமாக் கொண்டார் கயவரோ
டொன்றா வுணரற்பாற் றன்று."

என்றாராகலி னவ்வாறு வழிபடலுடையார்.

---

† திருக்குறள் ௧௦௩௩.‡ ஷை ௨௨௩. § ஷை ௭௨.

¶ சிலப்பதிகாரம் நாடுகாண்காதை,

† நாலடி ௧௬௩

ஏனைய நிரையோம்பலும் வாணிகமு முழவு மேற்கூறப்பட்டன.

அவை வணிகர்க் கோதன்முதலாகவும் வேளாளர்க் கீகை முதலாகவு முரைத்த வெண்ணின் முறைபற்றி வேறுபா டுடைமையி னவ்விருவர்க்குஞ் சிறப்பாயின.

இனி யக்குட மெதிரொலியு மீகையு மின்று. அத்தெங்கு முடத்தா லெஞ்ஞான்றுங் கூப்பிநிற்றல் கைகூப்பி வழிபாடு செய்வா னியல்பு குறிக்கும். அப்பருத்தி யிருக்கையெழன்முதலாயின செய்யாமையின் வழிபாடின்று. ஏனையமேற் கூறப்பட்டன.

இவ்வாற்றான் வேளாளரு ளவ்விருவகையாரது தன்மை யுணரப்படும்.

இனி மலையி னீகை வேளாளர்க்கு நிலத்தினீகை யரசர்க்கும் பூவினீகை யந்தணர்க்குந் துலாக்கோலினீகை வணிகர்க்கு முவமமாதலி, னம்முறையானே வித்தினை முன்னர்ப்பெற்றுப் பின்ன ரீயு நிலன்போல விறைப்பொருண்முதலாயின முன்னர்ப்பெற்றுப் பின்னீயு மரசரீகையினு முன்ன ரொன்றும் பெறாமற் றுலாக் கோல்போல வீயும் வணிகரீகை சிறந்தமையு, முன்னர்ப் பெறாவி டினும் பிறர்மாட்டுப்பெற்ற வூதியப்பொருளன்றி முதற்பொரு ளீயாத வவ்வரீகையினு முள்ளன முற்றக்கொடுக்கு மந்தணரீகை சிறந்தமையு, முள்ளன முற்றக்கொடுப்பினுஞ் சிறிதளவினவாதலு முறுப்பினை யீயாமையுமுடைய வவரீகையினு முடலும் பொருளு முணவு மொருங்கே வேண்டினும் வரையாது முற்றக் கொடுக்கும் வேளாளரீகை சிறந்தமையு முணரப்படும். உடல் கொடுப்போர் வேளாளரே யாதலி னவரே யுயிருங் கொடுப்போரென்பது போதரும். இவ்வாறே யோதலினும் வேட்டலினும் வேறுபாடு மேற்கூறியவாற்றா னுணர்க.

இனி யுயிர்க்கொடை வேளாளர்க்கே யுரிமையு மேனையோர்க் கங்ஙன மாகாமையு மென்னையெனி, னந்தண னறநெறியினை யுலகிற் குணர்த்துவோனாதலானு, மரச னுலகினைப் புரப்போனாத லானும், வணிக னவ்வரசனுக்கும் படைக்கும் வேண்டுவன வாணி கமுறையிற் கொணர்ந்தளிப்போ னாதலானு, மவருயிர்துறப்பி

னவரனைய நூல்வல்லாரு நீதிவல்லாரும் வாணிகம்வல்லாரும் பிறரில்வழி, யுலகிற்குப் பெருந்தீங்குபயத்தலி னவ ரொருதலையாக வுயிர்க்கொடைக் குரியரல்லர். வேளாள ருயிர்துறப்பி னவர்புதல்வர்முதலாய சுற்றத்தார் நெடுநாட்பழக்கம் வேண்டாமையே யுழவுநடாத்துவா ராதலி னுலகிற்குத் தீங்கின்மையா னக்கொடையவர்க்கே யுரிமையாயிற்றென்பது.

இனி யொருவர்க்குச் சிறப்பும் பிறர்க்குப் பொதுவுமாய வொன்றனை யுலகிற்குக் கேடுபயவாவழிப் பிறருஞ் சிறப்பாக்கிக் கொள்ளி னிழுக்கின்று. அதனை நான்மறைமுற்றிய ஞான வுருவினனாகிய ததீசி, வானவர்வேந்தன் மேன்மையெய்த முதுகென்பளித்த சிதையா வறவினையாற் றெளிக.

இனித் துறவுநிலையுட் டவத்தி னியல்பென்னையெனி, னூணசையின்மையு நீர்நசையின்மையும் வெப்பம்பொறுத்தலுந் தட்பம்பொறுத்தலு மிடம்வரையறுத்தலு மாசனம்வரையறுத்தலு மிடையிட்டுமொழிதலும் வாய்வாளாமையுமென § நாலிருவழக்கிற் றாபதப்பக்க மென்பது.

அவற்று ளூணு நீரு நசையின்மை யென்பன, உணவினு நீரினுஞ் சென்ற மனத்தைத் தடுத்தல். வெப்பமுந் தட்பமும் பொறுத்தலென்பன, ஐந்நீநாப்பணு நீர்நிலையினு நிற்றல். இடமு மாசனமும் வரையறுத்த லென்பன, கடலு மலையுங் காடு முதலாயவற்று ளொரிடத்துட் டாமரையு மாம்பலும் யாமையுமுதலாயவற்று ளோராசனத் திருத்தல். இடையிட்டு மொழிதலும் வாய்வாளாமையுமென்பன, உண்டன்முதலாயின செய்காலை யுரையாடாமையுந் துறந்தக்காற்றெருட்டு வாய்வாளாமையுமாம்.

அவற்றுண் மலை நிலன்போல வெருவிடலு நீர்ப்பாய்ச்சும் வெஃகாமையி னூணசையு நீர்நசையு மின்று. மரன் முதலாயவற்றைக் குடையெனக்கொண்டு வெய்யிலை மறைத்தலானும் வான்பெய்த நீரினை யேலாமற் புறத்தே யருவியென விடுத்தலானும் வெப்பமுந் தட்பமும் பொறுத்த லின்று.

§ தொல் பொருளதிகாரம் எகு.

நிலன் வெப்பமுந் தட்பமும் பொறுக்கும். தானே பிறவற்றுக் கிடமுமாசனமு மாதலன்றித் தனக்கோ ரிடமுமாசனமு மின்று.

பூ நீருங் கோடுங் கொடியுமுதலாய வோரிடம்பற்றித் தாமரையிலைமுதலாய வோராசனத் திருக்கும். தும்பியி னிசைகேட்டு முகமலர்ந்து நகைசெயலானும் பின்னர் வாய்மூடாமையானு மிடையிட்டு மொழிதலும் வாய்வாளாமையு மின்று.

துலாக்கோல் பொருளைத் தூக்கற்கு முன்னர்ப் பொருளு நிறையும் விலையு முசாவற் குரையாடலுந் தூக்குங்காலை யுரையாடாமையும் வாணிகந்துறப்பின் வாய்வாளாமையு முடைத்து.

இனி யக்குட மூனு நீரு மேற்குமியல்புடைத் தாதலி னவற்றி னசையுடைத்து. வெய்யிலு மழையுந் தாங்கலி னவற்றைப் பொறுத்தலுடைத்து.

அப்பனை வெய்யில் பொரும லோலையான் மறைத்துக் கோடலு மழைபொருமற் பாளைகருகுதலு முடைத்து. கடற்கரை முதலாய மணற்பாங்கமைந்த விடம்வரையறுத்தலு மணன்மே லிருக்கையென வாசனம் வரையறுத்தலு முடைத்து. இதனைப் § பெண்ணை யோங்கிய வெண்மணற் படப்பை, யன்றி லசவு மாங்கட், சிறுகுர னெய்தலம் பெருங்கழி நாட்டே. என்பதனுனறிக.

அத்தெங்கு, நிலத்தன்றி நீரினுங் கோட்டினுங் காட்டினு நில்லாமையானு நிலனன்றிப் பிறிதோ ராசன மின்மையானு மவற்றை யின்று. அது பிறந்தக்காற்றொட்டுப் பிறதெங்கினது நெருக்கத்தாற் காற்றினு மொலியாமையின் வாய்வாளாமை யுடைத்து.

அப்பருத்தி பெய்தற்கண்ணு மெடுத்தற்கண்ணு முன்னும் பின்னு மிடையினுஞ் சிறு ருரையாடலி னத்தன்மை யின்று.

இவ்வாற்றானே தவம்புரிவாரு ளவ்விருவகைபாரது தன்மை யுணரப்படும்.

இனி யோகினியல் பென்னையெனின், இயமமு நியமமு மிருக்கையும் வளிநிலையுந் தொகைநிலையு நிறையு நினைவுஞ் சமாதியு மென நாலிரு வழக்கிற் றபதப் பக்க மென்பது. என்னை?

§ தொல், பொருளதிகாரம், கஎ-வது பக்கம், க வது வரி.

* "இயம நியமமே யெண்ணிலா வாதன
நயமுறு பிராணாயாம நன்பிரத்தி யாகாரஞ்
சயமிகு தாரணை தியானஞ் சமாதி
பயமுறு மட்டாங்க மாவது மாமே."

என்றாராகலின்.

இருக்கையென்பது ஆதனம். வளிநிலையென்பது பிராணா யாமம். தொகைநிலையென்பது பிரத்தியாகாரம். நிறையென் பது தாரணை. நினைவென்பது தியானம்.

இனி,

‡ "பொய்கொலை களவே காமம் பொருணசை
யிவ்வகை யைந்து மடக்கிய தியமம்."

எனவும்,

‡ "பெற்றதற் குவத்தல் பிழம்புநனி யுலர்த்தல்
கற்பன கற்றல் கழிகடுந் தூய்மை
பூசனைப் பெரும்பய மாசாற் களித்தலொடு
நயனுடை மரபி னியம மைந்தே."

எனவும்,

‡ "நிற்ற லிருத்தல் கிடத்த னடத்தலென்
றொத்த நான்கி னொல்கா நிலைமையோ
டின்பம் பயக்குஞ் சமமே முதலிய
வந்தமில் சிறப்பி னாதன மாகும்."

எனவும்,

‡ "உந்தியொடு புணர்ந்த விருவகை வளியுந்
தந்த மியக்கந் தடுப்பது வளிநிலை."

எனவும்,

‡ "பொறியுணர் வெல்லாம் புறத்தின் வழாம
லொருவழிப் படுப்பது தொகைநிலைப் புறனே."

எனவும்,

‡ 'மனத்தினை யொருவழி நிறுப்பது நிறையே."

எனவும்,

* திருமூலர் திருமந்திரம். ௫௫௨.

‡ தொல், பொருளதிகாரம் ௧௬௫-வது பக்கத்திலிருந்து, ௧௬௬-வது பக்கத்துள்ள மேற்கோட் சூத்திரங்கள்.

‡ "நிறுத்திய வம்மன நிலைதிரி யாமற்
குறித்த பொருளொடு கொளுத்த னினைவே."

எனவும்,

‡ "ஆங்கனங் குறித்த வம்முதற் பொருளொடு
தான்பிற னாகாத் தகையது சமாதி."

எனவுங் கூறுமாற்றா னவ்வெட்டு முணரப்படும்.

இனி யியமத்துட் பொய்யென்பது, † தன்னெஞ் சறிவது பொய்த்தல். கொலையென்பது, ‡ உயிர்க்குறுகண் செய்தல். களவென்பது, § பிறன்பொருளைக் கள்ளத்தாற் கொள்வேமெனக்கருதுதல். காமமென்பது, $ தவமறைந் தல்லவை செயலாகிய கூடாவொழுக்கம். பொருணசை யென்பது, ¶ நில்லாதவற்றை நிலையின வென்றுணரும் புல்லறிவாண்மை.

இனி நியமத்துட் பெற்றதற் குவத்தலென்பது,

* "ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியு மல்ல பல."

என்றாராகலி னங்ஙனங் கருதலின்றி,

$$ "பரியினு மாகாவாம் பாலல்ல வுய்த்துச்
சொரியினும் போகா தம."

என்றாராகலி னவ்வாறு கருதித் தானடைந்தவற் றுவத்தல். பிழம்புநனி யுலர்த்தலென்பது, நூல்சொல்லியவாறு கிருச்சிர சாந்திராயணமுதலாய விரதங்களானுடலை யுலர்த்தி †† யுற்றநோய் நோன்று தவஞ்செயல். கற்பன கற்றலென்பது, ‡‡ கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டு, அதனை §§ யோர்த்துள்ள முள்ள துணரல். அஃ தனுபவமுடைய தேசிகர்பா லுபதேசமொழிகளைக் கேட்டலும் விமரிசமும் பாவனையுமென மூவகைத்து. கழிகடுந் தூய்மை யென்பது,

---

‡ இவையும், தொல்காப்பியம் பொருளதிகாரம் ௧௬௫-வது பக்கத்தி லிருந்து ௧௬௬-வது பக்கத்துள்ள மேற்கோட்சூத்திரங்கள்

† திருக்குறள், ௨௯௩. ‡ ஷை ௨௬௧. § ஷை ௨௮௨. $ ஷை ௨௭௪. ¶ ஷை ௩௩௧. * ஷை ௩௩௭. $$ ஷை ௩௭௬ †† ஷை ௨௬௧, ‡‡ ஷை ௩௫௬ §§ ஷை ௩௫௭,

‡ "தூஉய்மை யென்ப தவாவின்மை மற்றது
வாஅய்மை வேண்ட வரும்."

எனவும்,

$ "புறந்தூய்மை நீரா னமையு மகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும்."

எனவுங் கூறினாராகலின் மண்முதலானவற்றா னீரிற் புறமா சின்றாக வுடலை மண்ணலு, மாசையின்மை யெனுமண்ணு லரிய வாய்மைப் புனலில்வினை, மாசின்றாக வுள்ளத்தை மண்ணலுஞ் செய்தலான் வருவது.

இனியாசனமென்பது, சமமுதலாயபல்வகைத்து. என்னை?

§ "பத்திரங் கோமுகம் பங்கயங் கேசரி
சொத்திகை வீரஞ் சுகாதன மோரேழு
முத்தம மாமுது வாசன மெட்டெட்டுப்
பத்தொடு நூறு பலவா சனமே."

என்றாராகலின்.

அவற்றுட் சிலர் பதுமஞ் சொத்திகை முதலாயவற்றை முதன்மையாகவுஞ் சிலர் சித்தாதனத்தை முதன்மையாகவுஞ் சிலர் வேறுபிற வாதனங்களை முதன்மையாகவுங் கூறுவர். கலசயோனியாகிய வாசிரியனகத்தியன்முதலாயினர் சமாதனத்தையே முதன்மையாகக் கொண்டார்.

சமாதன மென்பது, நிற்றலு மிருத்தலுங் கிடத்தலு நடத்தலுமென நால்வகை நிலையு ளொன் றுபற்றி, நிலத்தினு நீரினு மொப்ப விருத்தல். ஏனைய வாதனங்களை முடிந்தநூல்கொண் டுணர்க.

இனிவளிநிலையென்பது, பிராண னபானனென்னு மிருவகைவளியினையு மாயாமஞ்செய்து நிறுத்தல்.

இருவகை வளியினையும் வேறுவேறு கூறாது பிராணனெனவுங் கூறுப. ஆயாமமென்பது தடுத்து நிறுத்தல்.

இனித்தொகைநிலையென்பது, ஐம்புலனும் புறமாக விடயத்தி னியன்றிடாமற் றடுத்தற்பொருட்டு முறையானே நால்வகை நிலையுட்படுத்து மனத்தையொருக்கல்.

‡ திருக்குறள் கக௪, $ ஷை உ௯அ.
§ திருமந்திரம். ௫௬௧.

இனி நிறையென்ப தென்னையெனின்,

‡ "ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றி
னெழுமையு மேமாப் புடைத்து."

என்றாராகலி னவ்வாறு பொறிவாயிலாக வவாவினைச் செலுத்தாம லடக்கி நிறுத்தல். பொறி யைந்தாகலி னவற்றின் வழியாகச் செல்லு மவாவு மைந்தாயின.

இனிநினைவென்பது,

* "பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு."

எனவும்,

"அற்றது பற்றெனி, லுற்றது வீடுயிர்
செற்றது மன்னுறி, லற்றிறை பற்றே."

எனவுங் கூறினாராகலி, னவ்வண்ணம் பற்றற்றானை யாதானு மோருருவத்தாயினு முருவமன்றியாயினு முள்ளத் திருத்தி, யாதானுமொரு மந்திரத்தாயினு மந்திரமன்றியாயினுங் கருதுதல். உருவத்தாற் குறித்தல் சகுணதியானம். அருவத்தாற் குறித்த னிர்க்குண தியானம். மந்திரங்கோடல் சகற்பம். மந்திரமின்மை அகற்பம்.

இனிச் சமாதியென்பது $ பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ் செம்பொருள் கண்டு, அப்பொருளொடு தான் பிறனாகாத் தன்மை யெய்தல். அவற்றின் பரப்பெல்லாமீண்டுரைப்பிற் பெருகும்; யோகநூல்களுட்காண்க. அவற்றை யினியொருவகையா னுவமத்தினுங் காட்டப்படும்.

இனி மலை, யகத்துள்ள நீரைப் புறத்துக் காட்டாது மறைக்கு நிலன்போலன்றிப் புறத்துங் காட்டலிற் பொய்யின்று. அருவியெனுங் கையாற் பல்லுயிர் வாரி வாரிதியிற் சேர்த்தலிற் கொலையுடைத்து.

---

‡ திருக்குறள். ௧௨௬. * ஷை. ௩௫௦.

● திருவாய்மொழி முதற்பத்து 2-ம்திருவாய்மொழி ௫-வதுபாசுரம்.

$ திருக்குறள், ௩௫௮.

நிலன் பல்லுயிர் தாங்கலிற் கொலையின்று. உழவரிட்ட வித்துட் சிலவற்றை முளைப்பித்து வெளிக்காட்ட லின்றி யவரறியா மற் கொண்டுண்ணலிற் களவுடைத்து.

பூப் பிறரறியாவண்ணம் யாதாயினுங் கோடலின்மையிற் களவின்று. இசைகற்று வல்ல கணவனாகிய தும்பியுட னிதழாகிய சேக்கையுட் பிறர்காணாவண்ணம் புணர்ச்சிகோடலிற் காமமும், தன்னொடு நில்லா துதிர்தற்பாலவாய மகரந்தமெனும் பொருளை நிலையினவென்று கொண்டு, தன்னகத்து வைத்தலிற் பொருணசையுமுடைத்து.

துலாக்கோல், பிறர்காணுமாறு பொருளைத்தூக்கி நிற்றலினது நட்பின் புணர்ச்சியாத லன்றிக் காமப்புணர்ச்சி யாகாமையானுந், தூக்கியபின்ன ரப்பொருளைப் பற்றற வொழித்தலானதனை யளத்தற்பொருட்டுத் தன்னகத்துட் கொண்டமையும் பொருணசையாற் கொள்ளாமையுங் காணப்படுதலானு, மவற்றையின்று.

அக்குடம்,

‡ "கழற்காய் விதைக்குக் கனவண்ட வாதந்
தழற்பக்கச் சூலைகுன்மஞ் சாந்தி."

எனப் பிடகநூல் கூறிற்றுகலி, னப்பிணி தீர்க்குங் கழற் பருப்பினை வெளிக்காட்டாம லகத்தே மறைத்தலிற் பொய்யுடைத்து. தனக்கெனவொரு வினையின்மையிற் கொலையின்று.

அப்பனை கள்ளளித் தறிவினைக்கொன் றுயிர்க்குறுகண் செயலிற் கொலையுடைத்து. பிறர்பொருளை யவரறியாமல் வெளவுத லின்மையிற் களவின்று.

அத்தெங்கு தான்பாளையீனுமை பற்றி, வளர்ப்போர் வெறுத்துப் பிறதெங்கிற்கே நீர்பாய்ச்ச வந்நீரினை யவரறியாமல் வேரின் வழியா னுண்ணலிற் களவுடைத்து. தன்மருங் குற்றுரொடு பிறர்காணுமாறு நட்பின் புணர்ச்சி யுடைத்தன்றிப் பிறர்காணாக் காமப்புணர்ச்சி யின்மையிற் காமமு, மோலையு மீர்க்கு முதலாய பொருளைப் பிறர்கோட லில்வழியு மவைநில்லாதனவென நினைந் தாழ்த்தலிற் பொருணசையு மின்று.

---

‡ தேரையர் பதார்த்தகுண சிந்தாமணி.

அப்பருத்தி பஞ்சினைப் பிறர்காணுவகை யகத்துட் கொண்டு புணர்தலிற் காமமு, மதனை யில்லாதென்று நினையாமற் றோலாகிய பேழையுட் பெய்துவைத்துக் காத்தலிற் பொருணசையு முடைத்து.

இவ்வாற்றானே யியமு மியமமின்மையும் பெறப்பட்டன.

இனி மலை, யெருவு நீரு முழவர் குறையக் கொடுப்பி னுவவாமற் புலக்கு நிலன்போலன்றி, வெறியாட்டாள ரூணு நீருங் குறையக் கொடுப்பினு மிகக் கொடுப்பினு முவத்தலிற் பெற்றதற் குவத்த லுடைத்து. ஈண்டு மலைத்தெய்வமாகிய சேயோனுக்குப் பலியிடல்குறித் துவத்தல் கூறப்பட்டது. எஞ்ஞான்று மூணு நீருங் குறைவற வுடைமையிற் பிழம்பு நனியுலர்த்தலின்று.

நிலன் விளைவின்பின்ன ரூணு நீரு மின்றிப் பன்னாட் கிடத்தலிற் பிழம்புநனி யுலர்த்த லுடைத்து. உழவரது கடாவிடை செலுத்து மோசை யன்றி மறைமொழியாகிய வுபதேசங் கேட்டலின்மையிற் கற்பனகற்ற லின்று.

பூ வதனிதழகத்துத் தும்பியின் முகமொன்ற லுபதேசங் கேட்டலைக் குறித்தலிற் கற்பனகற்றலுடைத்து. அகத்துள்ள தேனை வெளிக்காட்டாது மறைத்தலின் வாய்மை யின்மையானகந்தூய்மை யின்று. தன்னைத் தாங்கி நிற்கு முதற்பொரு ளன்றித் தானீராடாமையிற் புறந்தூய்மை யின்று. தன்பயனாகிய தேனைத் தன்னைத் தாங்கிய கொடிமுதலாயவற்றுக் களியாமையிற் பூசனைப்பெரும்பய மாசாற் களித்த லின்று.

துலாக்கோ னிறைகாட்டும் வாய்மை யுடைமையா னகந்தூய்மையு, மதனை நாடோறு நீரிற் கழீஇத் தூய்தாக்குவ ராதலிற் புறந்தூய்மையுந், தூக்கிய பொருளான் வந்த வூதியத்தைத் தன்னைத் தாங்கிய வணிகர்க்கே யளித்தலிற் பூசனைப்பெரும்பய மாசாற் களித்தலு முடைத்து.

அக்குடங் கழற்காயினைக் குறையப் பெய்யிற் குறைவுகாட்டலானு மிகப்பெய்யி னேலாமையானும் பெற்றதற் குவத்த லின்று. ஊணு நீரு மின்மையிற் பிழம்புநனி யுலர்த்த லுடைத்து.

அப்பனை கள்ளினைப் பாளையாகிய வாயினுற் காலுதலி னதனைமிகவுண்டு வமனமுறல் காட்டுமாகலா னுண்வொழிந்து பிழம்

புனனி யுலர்த்த லின்று. சான்றாரது முகங் கள்விளைக்குங்காலை யதன்முகத்தொடு பொருந்த லுபதேசங் கேட்டலைக் குறித்தலிற் கற்பனகற்ற லுடைத்து.

அத்தெங்கு கள்ளாயினுங் காயாயினு மளியாமையி னதன் செவிக்கண் மனிச்சர்முக மொன்றுமையாற் கற்பனகற்ற லின்று. நீர்பலகான் மூழ்கலானுந் தன்பாலுள்ளவற்றை மறையாது வெளிக்காட்டலானு மிருவகைத்தூய்மையு முடைத்து. தன்பயனாகிய வோலையைப் பனைபோலத் தான்வைத்துக்கோட லின்றிப் பழுத்தவுட னூழ்த்துத் தன்னைத் தாங்கிய நிலத்துக் களித்தலி னுசாற்களித்த லுடைத்து.

அப்பருத்தி நீருட்கிடப்பினுந் தன்பசியநிறங் குன்றி யழுக்குப்படிதலிற் புறமாசு நீங்காமையானு மகத்துள்ள பஞ்சினை மறைத்தலானு மிருவகைத் தூய்மையு மின்று. தன்பயனாகிய பஞ்சினைத்தன்னைத் தாங்கிய நீரினுக் களியாது சிறார்க் களித்தலி னுசாற்களித்த லின்று.

இவ்வாற்றானே நியமும் நியமமின்மையும் பெறப்பட்டன.

இனி மலை, நிற்றலாய நிலையினை நிலத்தினு நீரினு மொப்பக் கோடலி னவ்வாதன முடைத்து. குமரி மைநாக முதலாயின கடலி னுண்மையின் மலை நிலத்தன்றி நீரினு நிற்ற லுணரப்படும். நில னிருத்தலாகிய நிலையினை யவ்வாறு கோடலி னாதன முடைத்து. பூக் கிடந்தநிலையினை யவ்வாறு கோடலி னாதன முடைத்து. துலாக்கோ ளடத்தலாகிய நிலையினை நிறுக்குங்காலைக் கோடலி னவ்வாதன முடைத்து.

அக்குட மொருநிலையேனுங் கொள்ளாமற் சிறார் குறித்து வைக்கு நிலையினைக் கோடலி னாதன மின்று. அப்பனை மணற்பரப்பினல்லது நீரி னில்லாமையின் யாண்டு மொத்தவாதனங் கோட லின்று. அத்தெங்கு நீர்வளமிக்க நிலத்தன்றிப் பிறிதிடத்து நில்லாமையி னாதன மின்று. அப்பருத்தி நீர்மேலன்றி நிலத்திற் கிடப்பின் வெடித்தலி னாதன மின்று.

இவ்வாற்று னாதனமு மாதனமின்மையும் பெறப்பட்டன.

இனி வளிநிலை நான்குவகைப்படும்; இரேசகமும் பூரகமுங் கும்பகமு நிலையுமெனை. அவற்று ளிரேசகமென்ப, துருத்தியின்

மேலிடமாகிய வெளியினின்ற காற்றினைப் பதினாறுமாத்திரை யுள்ளே யிழுத் தறுபத்துநான்கு மாத்திரை யுந்தியிற் றடுத்து, முப்பத்திரண்டு மாத்திரை மீண்டும் வெளியில் விடுத்தல். என்னை?

‡ "ஏறுதல் பூரக மீரெட்டு வாமத்தா
லாறுதல் கும்பக மறுபத்து நாலதி
னூறுதன் முப்பத் திரண்ட திரேசக
மாறுத லொன்றின்கண் வஞ்சக மாமே."

என்றாராகலின்.

இனிப் பூரகமென்பது, வெளியினின்ற காற்றை யுள்ளிழுத் துந்தியின் முற்றுந் தடாம லுடனே மீண்டும் வெளியில் விடுத் துப் பின்ன ருந்தியிற் றடுத்து மீண்டு முள்ளிழுத்தல். என்னை?

§ "மேல்கீழ் நடுப்பக்க மிக்குறப் பூரித்துப்
பாலா மிரேசகத் தாலுட் பதிவித்து
மாலாகி யுந்தியுட் கும்பித்து வாங்கவே
யாலால முண்டா னருட்பெற லாமே."

என்றாராகலின்.

இனிக் கும்பகமென்பது, பதினாறுமாத்திரை பூரித்து முப் பத்திரண்டுமாத்திரை யிரேசித்துப் பின்னறுபத்துநான்குமாத் திரை யுந்தியிற் றடுத்தல். என்னை?

† "வாமத்தி லீரெட்டு மாத்திரை பூரித்தே
யேமுற்ற முப்பத் திரண்டு மிரேசித்துக்
காமுற்ற பிங்கலைக் கண்ணாக விவ்விரண்
டோமத்தா லெட்டெட்டுக் கும்பிக்க வுண்மையே"

என்றாராகலின்,

இனி நிலையென்பது. இரேசித்துப் பூரித்து நில்லாது கழிதற் பாலதாகிய நான்கங்குலக்காற்றினைக் கழியாது தடுத்துக் கும்பித் துக் கும்பித்த காற்றினை நடுநாடியாகிய சுழுனையிற்செலுத்தி நிலைக்கச் செய்தல். என்னை?

* "இட்ட தவ்வீ டிளகா திரேசித்துப்
புட்டி படத்தச நாடியும் பூரித்துக்
கொட்டிய பிராண னபானனுங் கும்பித்து
நட்ட மிருக்க நமனில்லைத் தானே."

---

‡ திருமந்திரம் ௬௪௮ § ஷை ௫௭௨ † ஷை ௫௭௩. * ஷை ௫௭௪.

எனவும்,

* "கூட மெடுத்துக் குடிபுக்க மங்கைய
ரோடுவர் மீளுவர் பன்னிரண் டங்குல
நீடுவ ரெண்விரற் கண்டிப்பர் நால்விரற்
கூடிக் கொளிற்கோல வஞ்செழுத் தாமே."

எனவும்,

‡ "பன்னிரண் டானைக்குப் பகலிர வுள்ளது
பன்னிரண் டானையைப் பாக னறிகிலன்
பன்னிரண் டானையைப் பாக னறிந்தபின்
பன்னிரண் டானைக்குப் பகலிர வில்லையே."

எனவுந் திருமந்திரங் கூறிற்றாகலின். வளிநிலை வகை நான்கனுண் முன்னையமூன்றும் பூரகத்தையு மீற்றுநிலை யிரேசகத்தையு முதற்றொழிலாக்கோடலி, னிறுதியி னிகழுந் தொழிலானவை யப்பெயர் பெற்றன. இனி யிதனிற் பிறழக் கூறு நூலுமுள. அது முனைவனூலுக்கு முரணுதலை யுபதேசமுறையா னுணர்க.

இனி மலை, மழைநீரினைத் தன்னகத் திழுத்து வாங்கிப் பின்னக்காலத்தின் மிக்களவு தன்வயிற்றடுத்து நிறுத்தி, நிறுத்திய நீரினுட் பாதியைத் தானுண்டு, பாதியை வெளியில் விடுத்தலி னிரேசகமுடைத்து. இரேசகமென்ப துட்காற்றை வெளியில் விடுத்தலும் பூரகமென்பது வெளிக்காற்றை யுள்ளிழுத்தலு மாதலானு மலை யுள்ளிழுத் தெஞ்சிய நீரினை யிரேசித்தலிற் பின்னும் பூரித்தல் கூடாமையானும் பூரகமின்று.

நிலமந்நீரினை யிழுத்து முற்றுந்தடாமல் வெளியில் விடுத்துப் பின்னருமுள்ளிழுத் துண்ணலிற் பூரக முடைத்து. உள்ளிழுத்த நீர் மண்ணொடுகலந்து சுவறுது தடுத்தலின்மையிற் கும்பகமின்று.

பூத், தும்பிவாய்வைத்தகாலை மேலுங் கீழு முள்ள விரதத்தைத் தேனுகக் காம்பிற்பூரித்துப், பூரித்த காலத்தின் மிக்களவத்தேனைத் தும்பி யுண்ணுமா றிரேசித் தத்தும்பி யுண்ட தேனின் மிக்களவிற்றாய தேனைத் தன்னகத்துக் கும்பித்தலிற் கும்பக முடைத்து. கும்பித்ததேன் காற்றானு ஞாயிற்றானுஞ் சுவறலி னடுநாடியி னசையாது நிறுத்தலாகியநிலை யின்று.

* திருமந்திரம் ௫௭௬. ‡ ஷை ௫௭௭.

துலாக்கோல், தான்றாக்கிய பொருண்மிகி னிரேசித்துக் குறைத்துக் குறையிற் பூரித்து நிறைத்துப், பின்னிறைத்த பொருளை நிறைகாட்டுங் கருவியாகிய நடுவுநிலையுடைய நாவிற் கூட்டி யசையவிடாது நிற்கச்செய்த லுடைத்து.

அக்குடஞ் சிறுரிடத் தேற்ற கழலை யவ ரிரந்தவழி யொருங்கே வெளியில் விடுத்தலி னொருபாதி யுண்டு மற்றைப்பாதி கழித்தலாய விரேசகமின்று. கழல்பெய்யப்பெய்ய வுள்வாங்கலிற் பூரக முடைத்து.

அப்பனை தானேற்றுக் கழித்த மழைநீரினை நிலம்போல மீண்டு மிழுத்தலின்மையிற் பூரகமின்று. தன்னுேலையா னம்மழைநீரைத் தடுத்துச் சிறிதுபோழ்து தாங்கலிற் கும்பக முடைத்து.

அத்தெங்கு கூம்பி மேனோக்கிச் செல்லலி னதனோலை மழைநீரினைத் தாங்காமையாற் கும்பக மின்று. தன்னிரதத்தை முடம்பட்டமையாற் பாளையின் வழித்தாக மதுவெனக் காலாது நடுவே யசைவின்றி வைத்தலி னிலையுடைத்து.

அப்பருத்தி, யகத்துள்ளபஞ்சினை விடாமையானும் புறத்துள்ள நீரினை யுள்ளிழுத்தல் செய்யாமையானு மசைதலானும் யாதானுமொரு நிலையின்மையானு மிரேசித்துப் பூரித்தசையாது நிறுத்தலாகிய நிலையின்று.

இவ்வாற்றுன் வளிநிலையு மின்மையும் பெறப்பட்டன.

இனித் தொகைநிலைவகை யென்னையெனின்? மனத்தைப் புலன்வழிப் போக்காது நாபிக்குப்பின் பன்னிரண் டங்குலத்தின் கீழ் நிறுத்தலு நாபிக்கு நால்விரற்கீழ் நிறுத்தலு நாசிக் கதோமுகமாகப் பன்னிரண்டங்குலத்தி னிறுத்தலுங் கீழ்வாயிலைத் தாழிட்டு மூடி மேல்வாயிலாகிய பிரமரந்திரத்தி னிறுத்திக் கண்விழித் திருத்தலுமென விவை. என்னை?

‡ "நாபிக்குங் கீழே பன்னிரண் டங்குலந்
தாபிக்கு மந்திரந் தன்னை யறிகிலர்
தாபிக்கு மந்திரந் தன்னை யறிந்தபின்
கூவிக்கொண் டீசன் குடிபுகுந் தானே."

எனவும்,

‡ திருமந்திரம் ருஎ௬.

* " மூலத் திருவிரன் மேலுக்கு முன்னின்ற
பாலித்த யோனிக் கிருவிரற் கீழ்நின்ற
கோலித்த குண்டலி யுள்ளே செழுஞ்சுடர்
ஞாலத்து நாபிக்கு நால்விரற் கீழே."

எனவும்,

$ " நாசிக் கதோமுகம் பன்னிரண் டங்குல
நீசித்தம் வைத்து நினையவும் வல்லையேன்
மாசித்தி மாயோகம் வந்து தலைப்பெய்துந்
தேகத்திற் கென்றுஞ் சிதைவில்லை யாகுமே."

எனவும்,

‡ " மூலத் துவாரத்தை முக்கார மிட்டிரு
மேலைத் துவாரத்தின் மேன்மனம் வைத்திரு
வேலொத்த கண்ணை வெளியில் விழித்திரு
காலத்தை வெல்லுங் கருத்தது தானே."

எனவுந் திருமந்திரங் கூறிற்றாதலின்.

இனி மலைக்குச் சிகரமே பிரமரந்திரமு மடிப்பரப்பே நாபியு நிலத்தின்கீ ழூன்றிய வேரே மூலத்துவாரமாகவு முடிதலானு நாபியின்கீழ்மூலத்துவாரத்தளவாய பன்னிரண்டங்குல நாபியின்மேற் பிரமரந்திரத்தளவாய முப்பத்தாறங்குலத்தின்மூன்றிலொருபகுதியாகுதலானுஞ், சிகரத்திருந்து நிலத்தின்வரையுள்ள வுயரத்தளவுண் மூன்றிலொருபகுதியின் கீழாக நிலத்தின்கீழ் வேரூன்றிநிற்குங் காரணத்தாற் சாயாது நிற்றலானு, மம்மலை நாபியின்கீழ்ப் பன்னிரண்டங்குலத்திற் றன்னைத் தாபித்தலி னத்தொகைநிலையுடைத்து, தன்னை நாபியின்கீழ்ப் பன்னிரண்டங்குலத்திற் றாபிக்கு முதலாவதுநிலை யுடைத்தன்றி நான்கங்குலத்தின்கீழ்த் தாபிக்கு மிரண்டாவதுதொகைநிலை யின்று.

நிலத்துக்கு வரம்பே பிரமரந்திரமு மடிப்பரப்பே நாபியு மவ்விரண்டற்கு நடுவாகிய வெளியே நாசிக் கதோமுகம் பன்னிரண் டங்குலத் துள்ளதெனப்பட்ட வுள்ளக்கமலமுமாக முடிதலானு, நெற்பயிரினை நாபிக்கு நால்விரற்கீழ்த் தாங்கலன்றி யுள்ளக்கமலத்திற் றாங்காமையானு மந்நிலையி னிரண்டாவதுநிலையுடைத்து. மூன்றாவதுநிலை யின்று.

* திருமந்திரம், ௫௮௰. $ ஷை ௫௮௧. ‡ ஷை ௫௮௬.

பூவிற் குள்ளமெனப் படுவது காம்பின்மேலு மகவிதழின்கீழுமாய விடமேயாதலானு மவ்விடத்தே தேனைத் தொகுத்தலானும் பூமூன்றுவதுநிலையினை யுடைத்து. மூலத்துவாரமாகிய காம்பின்வாயை மூடாமையானு மேலைத் துவாரமாகிய முகமலர்ந்து திறத்தலி னதனைத் திறவாது நோக்குதலின்மையானு நான்காவது நிலையின்று.

துலாக்கோலுக்கு மேலுள்ளவாய நிறைதெரிக்கும் வரைகளேபிரமரந்திரமும் பொருளைத்தாங்குந் தூக்கே மூலமாகவுமுடிதலானு, நிறுக்குங்காலை மூலமாகிய தூக்கின்கட்சிறுதுவாரங்க ளிருப்பினுந் தூக்கியபொருள் வழுவாமையின் மூலத்துவாரத்தை முக்காரமிட்டமை பெறப்படலானுந், தூக்கிற்பொருளை மேலுள்ள வரையுடனொப்பித்துநோக்கப்படுதலின் மேலைத் துவாரத்தின்மேன் மனம்வைத்தல் பெறப்படலானுந், தூக்கின்பக்கலுள்ள தூங்குகயிறுக ளத்தூக்கினுள்ள பொருளை மறையாமையிற் கண்விழித்திருத்தல் பெறப்படுதலானு நான்காவது நிலையுடைத்து.

இனி யக்குடத்தினைச் சமநிலையுடைய நிலத்துவைப்பிற் சாயுமாதலிற் சிறுமொருவிர லிருவிரன் மூன்றுவிர னான்குவிர லாழத்திற் குழிதொட்டுத் தாபித்த லன்றிப் பன்னிரண் டங்குலத்தளவிற் றுபியாமையின் முதலாவதுநிலை யின்று. இரண்டாவது நிலையுடைத்து.

அப்பனை தானிற்குநிலத்தி னடிப்பரப்பிற்கு நான்குவிரலின் மிக்கவாழத்தின்கீழ் வேருடைத்தாதலி னிரண்டாவதுநிலையின்று. உச்சிக்குக் கீழும் பராரைக்கு மேலுமாய நடுவிடத்துப் பாளையின் கண் மதுவுய்த்தலின் மூன்றுவது நிலையுடைத்து.

அத்தெங்கு தனக்குள்ளமாகிய நடுவிடத்துண் மதுவுய்த்தலின்மையின் மூன்றுவதுநிலை யின்று. பாளையீனுதற்கு வேண்டுங் கருவருதற்கு வழியாகிய வேரென்னு மூலத்துவாரத்தை முக்காரமிட் டடைத்தலானுங் கூம்பி மேனோக்கலானு மோலையான் மறைத்த லின்மையிற் கண்விழித்தலானு நான்காவது நிலையுடைத்து.

அப்பருத்தி மேலைத்துவாரமாகிய நுனியை நோக்காது மல்லாந்து கிடத்தலானு, மூலமாகிய காம்பிற் றுவாரமே யின்மை

யின் முக்காரமிடல் வேண்டாமையானு, முள்ளிருக்கும் பஞ்சு தோன்றுமற் றேலான் மறைத்தலிற் கண்விழித்தலின்மையானு நான்காவது நிலையின்று.

இவ்வாற்றாற் றொகைநிலையு மவற்றதின்மையும் பெறப்பட்டன.

இனி யவாவுவது மனமேயாதலானு, மம்மனத்தைப்பொறி யுணர் வறச்செய் தடக்க லமரர்க்கு மரிதாகலானு மவ்வாறடக்கினு மறிவதறியாமையா னசேதனமெனப்படு மாதலானு, மறிவதறிந்து பிறிதொன்றனை யவாவாமன் மனத்தினை யடக்கி யொருவழி நிறுத்தலே நிறையெனப்படும். என்னை?

* "அஞ்சு மடக்கடக் கென்ப ரறிவிலா
ரஞ்சு மடக்கு மமரரு மங்கிலை
யஞ்சு மடக்கி லசேதன மாமென்றிட்
டஞ்சு மடக்கா வறிவறிந் தேனே."

எனவும்,

‡ "அஞ்சுள சிங்க மடவியல் வாழ்வன
வஞ்சும்போய் மேய்ந்துதம் மஞ்சக மேபுகு
மஞ்சி னுகிரு மெயிறு மறுத்திட்டா
லெஞ்சா திறைவனை யெய்தலு மாமே."

எனவுங் கூறினாராகலின்.

இனிமலை, வளர்தலுந் தீயிடிற் பிளத்தலு முடைத்தாதலினைம்பொறியுண் மெய்ப்பொறியு மைம்புலனு ளூறு முடைத்தென்று காட்டலானுங் குளிரினு முடல் பனியா தாடையை யவாவாமையானு மெய்யடக்க முடைத்து. ஒருவன் கூயழைக்தவழித் தானுமெதிரொலித் துரையாடலி னுவும் வாயுமுடைத்தென்று காட்டலானும்,

○ "யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு."

என்றாராகலி, னங்ஙனநாகாவாமையைத் தன்னைக்கூயழைத்தாரதுமொழியினைச் சிறுபான்மை யொத்துப் பெரும்பான்மை சிதைந்து சொல்லிழுக்குப்படு மவ்வெதிரொலியாற் காட்டுதலானும்,

* திருமந்திரம், உயகூ. ‡ ஷை உயஉசு. ○ திருக்குறள், கஉஎ.

* "கல்லாதமேற்கொண் டொழுகல் கசடற
வல்லதூஉ மையந் தரும்."

என்றூராகலினங்ஙனங் கல்லாத மேற்கொண்டொழுகித் தானெதிரொலித்தலாற், றனக்கியல்பானமைந்த வருவியொலிக் கண்ணு மவ்வொலி மேகமுதலானவற்று னுளதாய வெதிரொலி யோவென் றையப்படற்குத் தானேதுவாக முடிதலானு நாவடக்க மின்று. தான் மழைவளத்தா னுடல்கொழுத்தகாலைச் சுவை விரும்பாதாயினும் வேனிலா னுடல்காய்ந்தகாலை யின்சுவையவாகிய நீராயினுந் தேனாயினு மிகப்பெய்தவழி வாய்பிளத்தலா னுவடக்கமின்று. முன்னர் மலை யூணசையை யின்றெனக் கூறினமையானீண்டு வாயடக்க மின்றென்பது மாறுடைத் தாகாதேயெனி, னுண்டுண்டிசுருக்கும் விரதங்குறித்துக் கூறியதன்றிச் சுவைவெஃகு மவாவடக்கல் பெறப்படாமையின் மாறாகாதென்பது. பிறுண்டுமிவ்வாறே வேறுபாடுய்த்துணரப்படும்.

இனி நில, னொலித்தலின்மையானும் பல்வேறு சுவையினவாயவெருவுந் தழையு மிடினும் வாய்திறவாமையானு நாவடக்கமும் வாயடக்கமு முடைத்து. நீரின்றிப் பயிர்வாடுங்காலை வாய்க்கால் வழி யோடிவரு நீரோசை கேட்டுத் தன்முகத்துள்ள மடைக்கண்ணைத் திறத்தலானு நீர்முற்றப் பாய்ந்தபி னக்கண்ணை மூடலானுங் கண்ணடக்க மின்று.

இனிப் பூக், தும்பியி னோசைகேட்டுத் தன்முகக்கண்ணைத் திறவாமையானு மத்தும்பி யதன்காலாற் றன்கண்ணைத் திறந்து தேனுண்டு போயபின்னு மக்கண்ணை மூடாமையானுங் கண்ணடக்க முடைத்து. தானிடையறாது நறுமணம் விரும்பிக்கோடலானுந் தும்பியின் குரல்கேட்டு முகமலர்தலு மழையது வன்குரல்கேட் டுதிர்தலு முடைமையானு மூக்குஞ் செவியு மடக்கு மேனையவடக்க மின்று.

இனித்துலாக்கோல், நறுமணப்பொருளாயினு மஃதில் பொருளாயினுந் தூக்கி நிறுத்தலானு மின்குரல் கேட்பினும் வன்குரல் கேட்பினுந் தானடுவுநிற்றலின் வழாமையானு மேனைய விரண்டடக்கமு முடைத்து.

---

* திருக்குறள், அசுகு.

இனியக்குடம் விளையாட்டு முற்றியபின்னர்ச் சிறுரான் வைக் கோற்போர் முதலியவற்றுண் மறைத்துவைக்கப்படு மியல்பிற்று தலிற் குளிர்க்கஞ்சிப் போர்த்துக் கிடைகோடல் காட்டலான் மெய்யடக்கமின்று. ஒலியாமையானும் யாதுபெய்யினு மேற்கு மியல்பிற்றுதலானு நாவடக்கமும் வாயடக்கமு முடைத்து.

அப்பனை யொலித்தலானுங் கள்ளினைப் பாளைவாயிலாற் காலுதலானு மவ்விரண்டடக்கமு மின்று. நீர்ப்பாய்ச்சினைத் தான் வேண்டாமையின் வரம்பு மடைக்கண்ணுந் தானின்றவிடத் தின்மையிற் கண்ணடக்க முடைத்து.

அத்தெங்கு, பிறதெங்கி னடுநிற்பதா லேனைத்தெங்கினுக் காக நாற்பக்கத்தும் வரம்புகோலி நீர்ப்பாய்ச்சற்பொருட்டு மடைக்கண் வைத்தல் வழக்காதலி னீர்வருகாலைக் கண்டிறத்தலும் பாய்ந்தபின்னர்க் கண்மூடலு முடைமையி னவ்வடக்கமின்று. ஏனைய தெங்கினது பாளையி னன்மணத்தினு மப்பாளையினூறுங் கள்ளினது தீயமணத்தினுந் தாநெருப்பநிற்றலானுங் காற்றொலிக்குமழை யொலிக்கு மொப்ப நிற்றலானு மூக்குஞ் செவியு மடக்க முடைத்து.

அப்பருத்தி, குண்டிகைநீர் நன்மண முடைத்தாமளவும் பசுமைகாட்டலானு மந்நீர் காலஞ்செல்லிற்றீயநாற்ற முறுமாதலி னக்காலைத் தான்பசுமைமாறி வெம்பலானு மூக்கினை யடக்கலின்று. காற்றொலியின் மலர்தலு மழையொலியிற் கூம்பலு முடைமையிற் செவியடக்க மின்று.

இவ்வாற்று னைந்தடக்கலாகிய நிறையு நிறையின்மையும் பெறப்பட்டன.

இனித் தியானமாகிய நினைவின் முறையுள்ளு மதன்பின்னரெய்துஞ் சமாதிமுறையுள்ளு முபதேசமுறையிற் கேட்கற்பால பெரும்பாலன வாதலி னவற்றை யுவமத்தானுங் கூறல் கூடாமையி னொருவகையான் மனநின்ற விடவிகற்பம்பற்றித் தியானமுந் தியானத்தாற் குறித்தபொருளொடு வேற்றுமையின்றி யொன்றுபட்டிருத்தலே சமாதியாதலி னத்தியானத்தொடு சமாதியு முரைக்கப்படும்.

இனித் தியானமென்பது சகுணநிற்குணம்பற்றியுஞ் சகற்ப மகற்பம்பற்றியு மளவிறந்தபேத முறுமாயினு மனநின்றநிலையா

கிய கண்ணு மூக்குஞ் செவியு நாவுமென வந்நான்கிடம்பற்றி நால்வகைப்படும். என்னை ?

§ "கண்ணுக்கு மூக்குச் செவிஞானக் கூட்டத்துட்
பண்ணுக்கி நின்ற பழம்பொரு ளொன்றுண்டு."

என்றாகராலின்.

இனிக் கண்ணிற் குறிக்குந் தியானமென்னையெனின் :—

* "ஒண்ணு நயனத்தி லுற்ற வொளிதன்னைக்
கண்ணாரப் பார்த்துக் கலந்தங் கிருந்திடில்
விண்ணாறு வந்து வெளிகண்டிட வோடிப்
பண்ணுமை யின்றது பார்க்கலு மாமே."

என்பதனைறிக.

இனி மலை விண்ணாறுபோல வெளிகண்டிட வோடு மருவிநீருடைமையா னக்காட்சி, நயனத்தொளி பார்த்துக் கலந்தங் கிருந்திடுதலைக் குறிப்பித்தலி னத்தியான முடைத்து. ஆங்கனங் கண்ணிற்குறித்த பொருளொடு தான் பிறணுகாது மனமொடுங்கி னதுவே சமாதியாம்.

அக்குடத்தில் விண்ணாறு காணப்படாமையி னது தியானமுஞ்சமாதியுமின்று.

இனி மூக்கிற் குறிக்குந் தியான மென்னையெனின் :—

§ "நாட்ட மிரண்டு நடுமூக்கில் வைத்திடில்
வாட்டமு மில்லை மனைக்கு மழிவில்லை
யோட்டமு மில்லை யுணர்வில்லை தானில்லை
தேட்டமு மில்லை சிவனவ னாமே."

என்பதனைறிக.

இனியொருநிலத்திற்கே போதியநீர் வாய்க்கால்வழி யோடினக்காலை நீர்பாய்ச்சுவா ரந்நிலத்தின் மடைக்கண்ணைச் சிறிதுதிறந்து கால்வாயின்மேலாக மூக்குப்போல வணைகோலி யடைத்து வைப்பிற் பயிர்க்கு வாட்டமு மழிவு நீரோட்டமுந் தேட்டமுமின்றிச் செழித்தலா னில னத்தியான முடைமை யுணரப்படும். ஆங்கன நடுமூக்கிற் குறித்த பொருளொடு தான்பிறணுகாது மனமொடுங்கி னதுவே சமாதியாம்.

இனி யோலை வற்றி வாடுதலி னப்பனை யத்தியானமுஞ்சமாதியு மின்றென் றனுமிக்கப்படும்.

---

§ திருமந்திரம் ௬௧௧. * ஷை ௬௭௯. § ஷை ௬௭௪.

இனிச் செவியிற்குறிக்குந் தியான மென்னையெனின்:—

† "மணிக்கடல் யானை வளர்குழன் மேக
மணிவண்டு தும்பி வளைபே ரிகையாழ்
தணிந்தெழு நாதங்க டாமிவை பத்தும்
பணிந்தவர்க் கல்லது பார்க்கவொண் ணாதே."

எனவும்,

§ "ஓடிச்சென் றங்கே யொருபொருள் கண்டவர்
நாடியி னுள்ளாக நாத மெழுப்புவர்
தேடிச்சென் றங்கே தேனை முகந்துண்டு
பாடியு ணின்ற பகைவரைக் கட்டுமே."

எனவுங் கூறுமாற்றா னறிக.

இனிப் பூந் தேடிச்சென் றங்கே தேனை முகந்துண்டு பாடி யுண்ணின்ற பகையாகிய தும்பியைக் கட்டலானுந் தன்செவி யாகிய மேலிதழகத்துக் கேட்குமாறு வண்டினதுநாத மெழுப்ப லானு மத்தியான முடைத்தென் றனுமிக்கப்படும். முறையாற் கேட்கப்படுவனவாகிய கடலொலி முதலாய பத்துவகைநாதத்து ளெப்பொழுது கேட்கப்படு நாதத்தின்வழியே சென்று தான்பிற ஞகாது மனமொடுங்கி னதுவே சமாதியாம்.

அத்தெங்கு மதுவுடைத் தாகாமையின் வண்டெய்தப்பெறு மையானும், வண்டெய்தாமையி னதங்கேளாமையானு, நாதங்கே ளாமையி னதனோடு மனமொடுங்க லின்மையானு, மத்தியான முஞ் சமாதியு மின்றென் றனுமிக்கப்படும்.

இனி நாவிற் குறிக்குந் தியான மென்னையெனின் :—

‡ "வண்ணா னொலிக்குஞ் சதுரப் பலகைமேற்
கண்ணாறு மோழை படாமற் கரைகட்டி
விண்ணாறு பாய்ச்சிக் குளத்தை நிரப்பினா
லண்ணாந்து பார்க்க வழுக்கற்ற வாறே."

எனவும்,

* "நாவி னுனியி னடுவே சிவிறிடிற்
சீவனு மங்கே சிவனு முறைவிட
மூவரு முப்பத்து மூவருந் தோன்றுவர்
சாவது மில்லைச் சதகோடி யூனே."

எனவுங்கூறுமாற்றானறிக.

---

† திருமந்திரம், ௬௱௬. § ஷை ௬௬௯. ‡ ஷை அ௱. * ஷை அ௱௩.

இனித் துலாக்கோல் வண்ணு னொலிக்குஞ் சதுரப்பலகை போல்வதாகிய தூக்கின்மேற் றாங்குகயிருகிய கண்ணின்வழி யாக மோழைபடாமற் கரைகட்டி, நிறுக்கும் பொருளை மேலாக வல்லது கீழாக வாங்காமற் கயிற்றினிடையாகிய விண்ணுறுவா ங்கி நிரப்புதலானு, நாவை யேறிட்டுக் காட்டி யதன்வரையானே நிறைகாட்டி யையமாகிய வழுக்கினை நீக்கலானும், மத்தியானமுஞ் சமாதியு முடைத்தென் றனுமிக்கப்படும்.

அப்பருத்தி யத்தன்மை யின்மையி னத்தியானமுஞ் சமா தியு மின்று.

இவ்வாற்றான் யோகுபுரிவாரு ளவ்விருவகையாரது தன்மை யுணரப்படும்.

இனி,

* "நீஇ ராட னிலக்கிடை கோட
ரோஒ லுடுத்த றெல்லெரி யோம்ப
லூ ரடை யாமை யுறுசடை புனைதல்
காட்டி லுணவு கடவுட் பூசை
யேற்ற தவத்தி னியல்பென மொழிப."

எனவும்,

* "நீர்பலகான் மூழ்கி நிலத்தசைஇத் தோலுடையாச்
சோர்சடை தாழச் சுடரோம்பி—யூரடையார்
கானகத்த கொண்டு கடவுள் விருந்தோம்பல்
வானகத் துய்க்கும் வழி."

என்வுங் கூறினாராகலி னவற்றை நாலிருவழக்கிற் றாபதப் பக்கமா மென்பாரு முளர். அது பொருந்தாது. என்னை? தாபதப் பக்க மெட்டனு ளொன்றாகிய நியமத்தின்க ணீராடன்முதலாய வவ்வெண்வகைத்தவமு மடங்கலா னென்பது.

இனி ஞானத்தியல் பென்னையெனின்:—

‡ "காமம் வெகுளி மயக்க மிவைமூன்ற
னாமங் கெடக்கெடு நோய்."

என்றாராகலி, னம்மூன்றன தின்மையு மெடுத்த வுடம்பு மதுகொண்ட வினைப்பயனு மன்றி முன்கிடந்த துன்பங்களு மேல்

---

* தொல், பொருள், ௯௬௯-வது பக்கம். ‡ திருக்குறள் ௩௬௦.

வரக்கட்வ துன்பங்களு மாகிய் நோயின்மையுமென வவ்வியல்பு நால்வகைப்படு மென்பது.

அவ்வகையினை,

* "மறவில் செய்தி மூவகைக் காலமு
நெறியி னாற்றிய வறிவன் றேயமும்."

என்னுமிவ்வாசிரியன்.

அவற்றுண்மலை, மறுவில் செய்தியுட் காமமின்மையை மூவகைக்காலமு நெறியினாற்ற லுடைத்து. எதிர்வரு பொருளை யருவியென்னுங் கையாற் றள்ளலின் வெகுளியு முடைத்து.

நில ‡ னகழ்வாரைத்தாங்கலின், வெகுளியின்று. உழவரிட்ட வித்தான் வந்தமையி னெற்பயிர முதலாயின தன்பொருளாகா மையானு மப்பொருட்குக் கேடுபயக்குங் களையே தன்பொருளாக முடிதலானும் † பொருளல்லவற்றைப் பொருளென்றுணரு மருளுடைத்து.

பூ, மகரந்தமு மணனு மிதழுந் தேனுமெனப் பயன்படுபொருளுடைமையின் மருளின்று. காய்த்துப் பழுத்து வித்தாகிப் பின்னு முளைத்தலி னோயுடைத்து.

துலாக்கோ லெத்துணைக்கால நீர்பெய்து நட்டு வைப்பினு மெடுத்தவுடம்பு மதுகொண்ட வினைப்பயனு மன்றிப் பின்னு முளைத்து வினைசெய்யாமையி னோயின்று.

அக்குடங் கழல்வெலிகலிற் காம முடைத்து. வெகுளியின்று.

அப்பனை, தன்மருங் கேறினரை யுடலைப் பிறலின் வெகுளியுடைத்து. தன்னியற்பொருளாகிய வோலையும் பாளையும் பிறவு நால்வரை தன்முதலாய நற்செய்திக் குதவலிற், பொருளல்லவற்றைப் பொருளென்று கோட லின்று.

அத்தெங்கு காயினை யளிக்கும் பாளையினுது மற்றைப்பொருளல்லவற்றைக் கோடலின் மருளுடைத்து. வித்தின்று பின்னு முளையாமையி னோயின்று.

அப்பருத்தி தனக்குள் வித்துடைமையாற் பின்னு முளைக்குமாதலி னோயுடைத்து.

---

* தொல், பொருளதிகாரம், சுஅ. ‡ திருக்குறள், கருக. † ஷை கருக.

இவ்வாற்றான், ஞானத்தியல்பு மின்மையு முணரப்படும்.

இனி பெண்வகை யுறுப்பு ளேனைய வுறுப்பிற்குக் குடிப்பிற ப்பே காரணமாகலி னதுமுன்னு மேனைய பின்னு, மக்குடிப்பிற ப்புவகை யெட்டனு ளின்னிலை துறவுநிலை யிரண்டற்குங் காரண மாயது பொதுவியல் பாகலி னது முன்னு மேனைய பின்னுந், துற வுநிலை வகைக் கின்னிலைவகையே காரண மாகலி னவ்வகை முன் னு மேனைய பின்னு, மின்னிலைவகை நான்கனு ளந்தணராய வுயர் ந்தோர் கற்பித்தவழியி னேனைய மூவகை வருணத்தாரு நடத்தல் வேண்டு மாகலி னந்தணரியல்பு முன்னு மேனைய பின்னு, மரசன் காவலா னன்றி யேனையோரது தொழி லிலைபெருமையி னரசரிய ல்பு முன்னு மேனைய பின்னு, மரசுகாவலொடு வாணிகமு முழவு நடைபெறற்கோர் காரண மாகலின் வணிகரியல்பு முன்னு மேனை யது பின்னுந், துறவுநிலை மூன்றனுள் யோகத்திற்கு ஞானத்திற் குந் தவங் காரணமாகலிற் றவத்தியல்பு முன்னு மேனைய பின்னு, மத்தவத்தியல்பு நால்வகையின்னிலையுள் யாதானு மொன்றன் காரணத்தா னிகழுமாயினு முயிர்க்கொடைத் துணிவுங் கைவந் தபினன்றித் துறப்பின்,

* "மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்பு மிகை."

என்றாராகலி, னுடம்பினைப் பேணு மவாநீங்கா தாகலிற் றவ முற்றுமையி, னுயிர்க்கொடைக் குரியாராய வேளாள ரியல்பின் பின்ன ரத்தவத்தியல்பு, ஞானத்திற்கு யோகங் காரணமாதலின் யோகத்தியல்பின்பின் ஞானமு முறையானே யுரைக்கப்பட்டன.

இனியோகமின்றி ஞானமாகாதே யெனின், முற்பிறப்புக்களி ன் யோகமுற்றினார்க் கிப்பிறப்பி னது வேண்டாமையி னவரொழி ந்த வேனோர்க்கெல்லா மாகாதென்பது. என்னை?

** "முன்னம் வந்தன ரெல்லா முடித்தனர்
பின்னை வந்தவர்க் கென்ன பிரமாண
முன்னுறு கோடி யுறுகதி பேசிடி
லென்ன மாய மிடுகரை நிற்குமே."

என்றாராகலின்.

இனித் தூய்மைமுதலாய வேனையவுறுப் புரைக்கப்படும்.

---

* திருக்குறள் ௩௪௫. ** திருமந்திரம், ௧௬௧.

அவற்றுட்சில குடிமைவகையாற் பெறப்பட்டனவாமெனி, னுண்டுப் பொதுவகை பெற்றதன்றிச் சிறப்புவகை பெருமையி னீண்டச்சிறப் புரைக்கப்படு மென்பது.

இனித் தூய்மைவகை யென்னையெனின்,

* "மனந்தூய்மை செய்வினை தூய்மை யிரண்டு
மினந்தூய்மை தூவா வரும்."

என்றாராகலின், முன்ன ரகந்தூய்மை புறந்தூய்மையெனப் பொதுவகையா னுரைத்த தூய்மைவகையு ளகந்தூய்மையொன் றே யினந்தூயனாதலு, மியற்கையாகிய வறியாமையி னீங்கி விசே டவுணர்வு புலப்படுமா றுமனந்தூயனாதலு, நல்வினையாமாறு சொற் றூயனாதலு, நல்வினையாமாறு செயற்றூய னாதலுமென நால்வகைப் படு மென்பது.

அவற்றுண்டலை தன்பிறப்பி னியற்கையானே தனக்குக் கிழாய நிலத்துத்துகளோடு கூடாமல்,

"அரியவற்று ளெல்லா மரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்."

என்றாராகலி, னவ்வாறே மேலாய நிலத்துநீரோடு கூடலி னி னந்தூய்மை யுடைத்து.

இனி நிலன், கொடையாற் பெரியாராய வேளாளரது பரிசயத் தானே நெற்பயிர் முதலாயவற்றை யீயாமையென்னு மிழிகுலத்த ன்மையாகிய தன்னியற்கையி னீங்கி, யவற்றை யீதல் வேண்டு மெ ன்னும் விசேடவுணர்வு புலப்படப் பெறுதலின் மனந்தூய்மை யுடைத்து.

இனிப்பூ,

§ "அல்லவை தேய வறம்பெருகு நல்லவை
நாடி யினிய சொலின்."

என்றாராகலி, னவ்வாறு நாடிச் சொல்லித் தேன்பெருக்க லாற் பெருமையுடைத்தாகிய தும்பியின் பரிசயத்தா னல்லவை நாடாமை யென்னுந் தன்னியற்கையி னீங்கித், தன்னு ளிருப்பவ ற்று ளல்லவை நாடி யின்சொலன்ன வினியதேனைப் புலப்படுத்த லிற் சொற்றூய்மை யுடைத்து.

அக்கோல்,

* திருக்குறள், ௪ருடு. ● ஷை. ௪௪௬. § ஷை. கசு.

* "நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக்
குற்றமு மாங்கே தரும்."

என்றாராகலி, னவ்வாறு கொள்ளக் கருதாராகி நடுவுநிலைமை யான் விலைகொடுத்துக் கொள்ளக் கருதிய நல்லோரது பரிசயத் தானே சமன்செய்து சீர்தூக்குங்கருத்துப்பெறுதலிற் செய்வினை தூய்மை யுடைத்து.

இனியாசிரியன்,

"சிற்றின மஞ்சும் பெருமை சிறுமைதான்
சுற்றமாச் சூழ்ந்து விடும்."

என்றாராகலிற், றன்குடிப்பிறப் பியற்கையாற் சிற்றினமஞ்சி யக்கீழ்களோடு கூடாமற் பெரியாரைத் துணைக்கோடலிற் கீழாய நிலத்துத்துகளோடு கூடாத வான்யா றன்ன தூய்மை யுடையன்.

அக்குட முயர்விலைப் பொருளாகிய குடிப்பிறப் பெய்தாமை யாற் சிற்றினமாகிய சிறார்களைச் சுற்றமாச்சூழ்ந்து பெரியாரொடு கூடாமையி னினந்தூய்மை யின்று.

அப்பனை கள்ளேற்கு மிழிகுலத்தாரது பரிசயத்தானே கள் ளாகிய விழிபொருள் கோடலின் மனந்தூய்மை யின்று.

அத்தெங்கு, தன்னைச் சூழ்ந்து நெருக்கித் தானீயாவண்ண ஞாயிற்றி னொளிதடுப்ப வேனைத்தெங்குகளை மிகவடுத்துவைத்த தங்குற்றங் காணாராகி, யின்னும் பாளை யீன்றிலதெனத் தன்னை நிந்திக்கு மிழிந்தாரது பரிசயத்தானே நல்லவை நாடி யினியதா லின்று.

அப்பருத்தி, § சிற்றின்பம் வெஃகி யறனல்ல செய்யுஞ் சிறா ரது பரிசயத்தானே தானு மாடைக்குக் காரணமாகிய பஞ்சளிக்கு மறவினையென்னு மற்றின்பம் வேண்டாமையிற் செய்வினை தூய் மை யின்று.

அல்லாதா னிழிகுலத்தானாதலிற் சிற்றினமஞ்சாமலத்தனையே சுற்றமாச் சூழ்ந்துவிடலிற் றூய்மையிலன்.

இனி மனந்தூய்மை முதலாய மூன்றற் கினதூய்மையு, மன ந்தூய்மைக்குச் சிற்றினமஞ்சலுஞ், சிற்றினமஞ்சற்குக் குடிப்பிற ப்புங் காரணமாதலி, னம்முறையானே குடிப்பிறப்பின் பின்னர்த் தூய்மை கூறப்பட்டதென்பது.

---

* திருக்குறள், கஎக. ¶ ஷை சருக. § ஷை கஎ௩.

இனியொழுக்கத்தின் வகை யென்னையோவெனின்:—

* "பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்."

எனவும்,

† "உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றுங்
கல்லா ரறிவிலா தார்."

எனவுங் கூறினாராகலி னைந்தவித்தான் விதித்தனசெய்தலு, மவன்விலக்கியன வொழிதலு, முயர்ந்தோர்பலரு மொழுகிய வாற்றானே யைந்தவித்தான் சொல்லியவற்று ளக்காலத்திற் கேலாதன வொழிதலு, மவனசொல்லாதவற்று ளேற்பன கொள்ளலுமென வவ்வொழுக்க நான்குவகைத்து.

அவற்றுண்மலே, தூய்மை காரணமாக வைந்தவித்தான் கருத்தின் வண்ணம் வளம்பல படைத்தலின விதித்தனசெய்த லுடைத்து.

நில னுழுவா ரிலக்கிய பயிரினைக் கொள்ளாமையுடைத்து.

பூப் பசித்தார்க் குடனே யுணவளித்த லறனென வைந்தவித்தான் விதித்தானாயினுஞ்,

§ "செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கு மீயப் படும்"

என்றாராகலி, னுடற்குறுதி செய்யு முணவினு முயிர்க்குறுதி செய்யுங் கேள்வி பெரிதாய வறனுமென நினைந்து, தமபி பசித்திருப்பினு மிசைபாடுமவரை யுணவளியாம லுலகநடைபற்றிப் பின்னரே யளித்த லுடைத்து.

அக்கோல்,

‡ "அறிவினு ளெல்லாந் தலையென்ப தீய
செறுவார்க்குஞ் செய்யா விடல்"

என்றாராகலி னைந்தவித்தான் றீய செய்யுமாறு சொல்லாமை பெறப்படுமாயினு, மருத்துவா கேட்டவழித் தொடக்கத்துச் சிறு துன்புறுத்தினும் பின்னர்ப் பிணிதீர்த்துப் பெருநல முறுத்தல் கருதி நஞ்சுமளித்தலிற், சொல்லாதனவுஞ் செய்யு முலகநடையுடைத்து.

இவ்வாற்றா னால்வகைத் தூய்மையுங் காரணமாக விடையறா

---

* திருக்குறள், சு. † ஷை கசம. § ஷை சகஉ. ‡ ஷை உஙஎ.

தொழுகலின், வான்யாறு நிலம்படர்ந்தன்ன நலம்பட ரொழுக்க நால் வகையு முடையா னாசிரியனென் றுணரப்படும்.

அக்குடஞ் சிறுராகிய சிற்றினஞ் சேர்தலாற், றாய்மையின் மை காரணமாக நீரு, நெய்யும், பாலுந், தயிருமென நல்வளம் படையாமையின் விதித்தன செய்த லின்று.

அப்பனை நல்லோர் விலக்கிய கள்ளினைக் கோட லுடைத்து.

அத்தெங்கு பிறதெங்கின்கண் மதுவுண்ணச் செல்லுந் தும்பிக ளிசைபாடுங்காலையு மோலையூழ்த்தலி னுலகநடையு ளஃதி ன்று.

அப்பருத்தி, முன்னர்ச் சிறுர்க்குச் சிற்றின்பஞ் செய்யினுங் கல்விப்பய னிழத்தலாகிய பெருந்துன்பினைப் பின்னர்ச்செய்தலி னுலகநடையு ளஃதின்று

அல்லாதான் றாய்மையிலனாதலி னிடையறு தொழுக லின் மையா னால்வகையொழுக்கமு மிலன்.

இனி யோரொருகாலத் தொழுக்கமுண்மை காண்டுமெனின்,

* “அச்சமே கீழ்கள தாசார மெச்ச
மவாவுண்டே லுண்டாஞ் சிறிது.”

என்றாராகலி, னவ்வா றச்சமுமவாவுங் காரணமாகவல்ல தியல்பாக வாசாரஞ் செய்யானென்பது.

இனி,

$ “மனந்தூயார்க் கெச்சநன் றாகு மினந்தூயார்க்
கில்லைநன் றாகா வினை.”

என்றாராகலி, னன்றாகு மொழுக்கத்திற் கினந்தூய்மையு மதுபற்றுக்கோடாக வுளவாகு மேனைய தூய்மையுங் காரணமாதலி, னம்முறையானே தூய்மையின்பி னொழுக்கங் கூறப்பட்டதென்பது.

இனிக் கல்விவகை யென்னையெனி, னிம்மை மறுமை வீடென்னு மூன்றனையும் பயப்பதாய வறநூலு, மிம்மை மறுமையென்னு மிரண்டனையும் பயப்பதாய பொருணூலு, மிம்மையே பயப்பதாய வின்பநூலு, மம்மூவகை நூலின் சொல்லையும் பொருளையு முள்ளவா றளந்துகாட்டுங் கருவிநூலுமென நான்குவகைப்படும்.

* திருக்குறள், ௧௦௭௫. $ ஷை ௪௫௬.

அவற்று ளின்னிலை யொழுக்கமுந் துறவுநிலை யொழுக்கமுங் கூறுவன வறநூல்.

வழக்குந் தண்டமுங் கூறு நீதிநூலும், யானை குதிரை தேர் படைக்கலமென் றிவைகூறு நூலும், வாணிகஞ் சிற்ப முழவுமுத லாயின கூறு நூலும் பொருணூலெனப்படும்.

கைக்கிளைமுதலாய வெழுதிணை கூறுநூ லின்பநூ லெனப்ப டும்.

காந்தருவமுங் கூத்தும் வரியுஞ் சோதிடமு மருந்து மவை போல்வன பிறவுங் கூறுநூ லம்மூன்றற்கும் பொதுவாதலி, னவ ற்றுளொன்றாக வேனும் பலவாகவேனு மமையும். அவற்றுட் சோதிடங் கருவியுமாம்.

இனி,

* "எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங்
கண்ணென்ப வாழு முயிர்க்கு."

என்றாராகலி, னவை கருவிநூ லெனப்படும்.

அவற்றுண் மலையு நிலனு முண்டகாலை விடாய் தீர்த்துப் பய னுறுத்து நீரும், பசிதீர்த்துப் பின்னரும் பயனுறுத்து முணவுப் பொருளு, முடற்பிணி தீர்க்கு மருந்துமுடையவாயினு, மவற்று ணிலன் வேறுவேறு பொருளாற் செய்தலன்றி, யொருபொரு ளானே யம்முப்பயனுஞ் செய்யாமையானு, மலை வளம்பல படை க்குந் தன்னொழுக்கங் காரணமாக வுளவாகுங் கருநெல்லி சோம லதை முதலாயவற்று ளொன்றனே யம்முப்பயனுஞ் செய்தலானு மலையே யறநூலுக் குவமமாயிற்று.

நிலத்துள்ள தெங்கங்காய் முதலாயின விடாயும் பசியுந் தீர் த்தலி, னிலன்பொருணூலுக் குவமமாயிற்று.

பூவினுள்ளதேன் மருந்தாமாயினுந் தும்பியின் பசியை மு ற்று நீக்காம லுண்டகாலையே பயன்செயலி, னின்பநூலுக் குவ மமாயிற்று.

அக்கோ லம்முப்பகுதியவாய பொருளைத் தன்னுவின் வரை யா னளந்து நிறுத்துக் காட்டலிற், கருவிநூலுக் குவமமாயிற்று.

* திருக்குறள், ருகூ௨.

இனிப் பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்கநெறியின் கண் வழுவாது நிற்றலது வளர்ச்சிக்குத்தக வகைத் * திருணிக்கியின் பம்பத்தலிற், கலைபது வளர்ச்சிக்குத் தகப் புரத்திருணிக்கி யின்பம் பயக்குந் திங்களன்னகல்வி யுடையானாசிரியன்.

அக்குட, நீர்முதலாயின தரு மொழுக்கமே யன்றி வித்தினை முளைக்கச்செய்யு மொழுக்கமு மின்றாதலா, னம்முப்பயனு மொன்றானுஞ் செய்யாமல் விளையாடுகருவியாகிய பயனில்கழ லுடைத்து.

ஆசிரியனல்லாதா னொழுக்கம் வேண்டாமையி னதன்பொருட்டுங் கற்பனவாகிய நற்கல்வியுடையா னாகாமையா, னறம்பொருளின்பம் பயவாம லாரவாரம் பயக்கும் பயனில்கல்வி யுடையன்.

அப்பனை, பசிதீர்க்கு மாயினும் பின்ன ரறிவழித்துத் தீங்கு செய்யுங் கள்ளுடைத்து.

அல்லாதா, னிம்மையிற் பொருள்பயக்கு மாயினும் பின்னர்த் தீங்குசெய்து நிரயத்துள் வீழ்த்தற் பாலவாகிப், பிறர்பொருளைத் தன்வய மாக்கற் குபாயங்கூறுஞ் சூதுநான்முதலாய வறத்தொடுபடாப் பொருணூ லுடையன்.

அத்தெங்கு தன்மருங் குற்றாரை யுறுப்புக்குறைத் தூறுசெயற்பாலதாகிய மட்டையினையுடைத்து.

அல்லாதான், § அறம்புகழ் கேண்மை பெருமையிந் நான்குஞ் சேராது நீக்கிப், § பகைபாவ மச்சம் பழியென நான்கு மிகவாமற் சேர்த்துக், ¶ காணிற் குடிப்பழி யாக்கிக், கையுறிற் கால்குறைத்து, மாணின்மை செய்யுங்கா லின்பந் தினைத்துணையு மின்றி யச்சமே தந்து, நீணிரயத் துன்பம் பயத்தற்பாலதாகித், தனக் குரிமையல்லா மகளிரையுந் தன்வயமாக்கற் குபாயங்கூறு மறத்தொடும் பொருளொடும்படா வின்பநூ லுடையன்.

அப்பருத்தி சிறார்க்குக் கேடுபயத்தலே யன்றிக், கொன்றாலன்றி வெளிப்படாமையிற் றனக்குங் கேடுபயக்கும் பஞ்சினை யுடைத்து.

அல்லாதான், கற்பார்க்கே யன்றித் தனக்கு முயிர்க்கிறுதி பயக்குங் களவுநூன்முதலாயின வுடையன்.

---

* திருக்குறள் ௭௮௨. § நாலடி ௮௨. § திருக்குறள் ௧௪௬. ¶ நாலடி ௮௪.

இவ்வாற்று னல்லாதானது கல்வி, யொழுக்கம் பயவாமையிற் கல்லாமு னகத்தின்க ணுள்ள விருணீக்காமையே யன்றிப் பின்னு மிக்க விருண்மூடச்செய்து துன்பம்பயக்கு மென்பது பெறப்பட்டது.

இனி,

* "கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவ
னற்று டொழாஅ ரெனின்."

எனவும்,

§ "அஃகி யகன்ற வறிவென்னும் யார்மாட்டும்
வெஃகி வெறிய செயின்."

எனவும்,

‡ "மறப்பினு மோத்துக் கொளலாகு" மெனவும்,
"பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்" எனவும்,

$ "கற்க கசடறக் கற்பவை கற்றபி
னிற்க வதற்குத் தக"

எனவுங் கூறினாராகலிற், பொய்தீ ரொழுக்கநெறியின்கண் ணொழுவாது நிற்றற்பொருட்டுக் கற்பனவற்றைக் கசடறக் கற்பினக் கல்வி பயன்படலன்றி, யந்நெறிக்க ணொழுகிற் பயன்படாமையிற் கல்விப்பயனுக் கொழுக்கங் காரணமாதல்பற்றி யதன்பின்னர்க் கல்வி கூறப்பட்டதென்பது.

இனி வாய்மைவகை யெங்ஙனமெனின்?

$$ "பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்."

எனவும்,

** "வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றுந்
தீமை யிலாத சொலல்."

எனவுங்கூறினாராகலி, னன்மைபயக்குமாயி னிகழ்ந்ததே யன்றி நிகழாததுங் கூறலுந், தீங்கு பயக்குமாயி னிகழாததே யன்றி நிகழ்ந்ததுங் கூறாமையு, நன்மை பயவாவிடினுந் தீங்கு பயவாதாயி னிகழ்ந்ததொன்றே கூறலு, மத்தன்மைத்தாயினிகழாதது கூறாமையுமென நான்குவகைப்படும்.

---

* திருக்குறள், உ. § ஷை கஎரு. ‡ ஷை கங௪.
$ ஷை ருகக $$ ஷை உகஉ. ** ஷை உகக.

அவற்றுண் மலை, நிகழ்ந்ததாகிய தன்சிகரத்தி னுயர்ச்சி காட்டலேயன்றி, மரனுங், கொடியும், புதலும், புல்லு மூடிய காரணத்தா னிகழாத தாகிய பசியநிறமுங் காட்டல், யாவர்க்கும் விளங்கித் தோன்றலாகிய நன்மைபயத்தலின் வாய்மை யுடைத்து.

நில, னுயர்ச்சிகாட்டு மலைபோலத் தன்னுழத்தை வாய்விளந்து காட்டி, னது நிகழ்ந்ததே யாயினு முயிர்க்குத் தீங்குபயக்குமாதலி னிகழாததே யன்றி நிகழ்ந்தவாழுமுங் காட்டாமையான் வாய்மை யுடைத்து.

பூத், தும்பிக்கு நன்மை பயவா விடினுந் தீங்கு பயவாமையி னிகழ்ந்த தாகிய நறுமணங் காட்டலின் வாய்மையுடைத்து.

அக்கோல், தீங்கு பயவாவிடினு நன்மை பயவாமையி னிகழாத தாகிய தன்மை யொன்றுங் காட்டாமையான் வாய்மை யுடைத்து.

ஆசிரிய, னற்புலமை யுடையானாதலிற் றிங்களோடு ஞாயி றன்ன வாய்மை யுடையன்.

திங்கள், நன்மை பயத்தலி னிகழ்ந்ததாகிய தன்னுருக் காட்டலே யன்றி நிகழாத தாகிய களங்கமுங் காட்டலான் வாய்மை யுடைத்து.

ஞாயிறு, தீங்கு பயத்தலா னிகழாததே யன்றி நிகழ்ந்ததாகிய தன்னுருக் காட்டலு மின்மையின் வாய்மையுடைத்து.

நன்மை பயக்கு முரைக்குத் திங்களுந் தீங்கு பயவாவுரைக்கு ஞாயிறு முவமமாதலி, னுத்திரையன் பேராசிரியன் றிங்களொடு ஞாயிறெனெ விரண்டுங் கூறினானென்பது.

அக்குட, நிகழ்ந்ததாகிய கழற்காய் காட்டல் விளையாட்டிற் கேதுவாகிச் சிறார்க்குத் தீங்குறுத்தலின் வாய்மை யின்று.

அப்பனை, நிகழ்ந்ததாகிய கள்ளினைக் காட்டலு மக்கள் சுவையிலதாயினு மதனை யுண்பார்க்குச் சுவையுடைத்தெனத் தோன்றலி னிகழாததாகிய சுவைகாட்டலுந் தீங்கு பயத்தலின் வாய்மையின்று.

அத்தெங்கு, தான் முடம்பட்ட ஞான்றே நிகழ்ந்ததாகிய தன்முடத்தினை நீர்வார்த்துப் பேணுவார்க்குக் காட்டி, னவர் பின்னருஞ் சிரம முறுமையி னது நன்மை பயப்பதாகவு மங்ஙனங் காட்டாமையின் வாய்மையின்று.

அப்பருத்தி, தின்னற்குரிய காய்வகையு ளொன்றெனக் காட்டி னது சிறாரை விளையாட்டி னீக்குத லொன்றேயன்றிப்* பருத்தியிலை மோட்டிரண்டைப் பாலிலரைத் துண்ண, வருத்துகின்ற மேக மெல்லா மாறுமென நூல் கூறியவாறு நோய்சிலவுந் தீர்தலி, னன்மைபயப்பதாகவு மங்ஙனஞ் செய்யாமையின் வாய்மை யின்று.

அல்லாதா னற்புலமை யின்மையின் வாய்மையிலக்கணமுணரல் கூடாமையாற், றீங்கு பயப்பினு நிகழ்ந்ததே யன்றி நிகழாததுங் கூறலு, நன்மைபயப்பினு நிகழாததே யன்றி நிகழ்ந்ததுங் கூறாமையு முடையா னென்பது பெறப்பட்டது.

இனி, நன்மை பயப்பிற் பொய்யு மெய்யாகியுந் தீமை பயப்பின் மெய்யும் பொய்யாகியுந் திரிதலானு மவ்வேறுபாடுணர்தற்கு,

† "கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்."

என்றாராகலிற், கல்வியே கண்ணாகு மாதலானும் வாய்மையிலக்கண முணர்தற்குக் கல்வி காரணமாதலி னதன்பின் வாய்மை கூறப்பட்டதென்பது.

இனிக் கல்வி யில்லார் கேள்வியா னவ்விலக்கண முணரல் கூடாதோவெனின்,

‡ "இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே
யொழுக்க முடையார்வாய்ச் சொல்."

எனவும்,

$ "பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லா ரிழைத்துணர்ந்
தீண்டிய கேள்வி யவர்."

எனவுங் கூறினாராகலிற், கல்வியாகிய கண்ணில்லார்க் கக் கேள்வி யூன்றுகோல்போ லுதவு மாதலி னக்கேள்வி கல்வியோ டொக்குமென்பது.

இனி யழுக்காறிலாமையின் வகை யென்னை யெனின்.

§ "அறனாக்கம் வேண்டாதா னென்பான் பிறனாக்கம்
பேணா தழுக்கறுப் பான்."

எனவும்,

* தேரையர் பதார்த்தகுண சிந்தாமணி.

† திருக்குறள், ௩௯௩. ‡ ஷை ௪௧௫. $ ஷை ௪௧௭. § ஷை ௧௬௩.

* "கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்ற முடுப்பதூஉ
உண்பதூஉ மின்றிக் கெடும்."

எனவுங் கூறினாராகலிற், பிறனுக்க மாகிய செல்வமுங் கல்வி யும் புகழ்முதலாய கனமுமென வவற்றைப் பேணுமையும் பிற னது கொடை பேணுமையுமென வந்நான்கன தின்மைடா னுன்கு வகைப்படு மென்பது.

அவற்றுண் மலை, தன்வள னென்று மறையாத வாய்மையா னருவிநீர் முதலாயின வளித்துப் பிறனுக்கம் பேணுதலுடைத்து. பிறரது கல்விகேட் டெதிரொலித்தலிற் கல்விபேணுதலின்று.

நிலை, மெதிரொலியாமையிற் கல்விபேணலுங் கதிர்க்கனந்தா ங்காது நெற்பயிரைக் கீழ்ச்சாய்த்தலி னதுபேணுமையு முடை த்து.

பூக், தும்பியின் கனந்தாங்கலி னதுபேணலு மத்தும்பி தேனைப் பிறிதொன்றற்குக்கொடாதோப்பற்பொருட்டு மெழுகு செய்யுமாறு தானே மகரந்தமுங் கொடுத்தலிற் கொடுப்ப தழுக் கறுத்தலு முடைத்து. அக்குற்றத்தாற் றுனையன்றித் தன்சுற்றமு முடுப்பதூஉ முண்பதூஉமின்றிக் குளிரா னுடல்பனித்துப் பசியா ன்முகம்வாடி யழிவார்போலத், தன்சுற்றத்துட் கன்னியெனப்ப டும்யோனிக் காக்கணமுதலாயின பெண்மை குறிக்கு முறுப்பு, மலரி முதலாயின வாண்மை குறிக்கு முறுப்பு மறையுமா றுடையு டாதுந், தேன் றப்பிடத் திருந்து முண்ணுதுந், தானுந் தன்சுற்ற முமுடல்பனித்து முகம்வாடி யழித லுடைத்து.

அக்கோல், பிறர்க்களித்தலைத் தடாமையி னவ்வழுக்கா றி ன்று.

இனி யாசிரியன் பிறர்க்கு நன்மையுந் தீங்கின்மையும் கரு தும் வாய்மை யுடையனாதலிற், பிறர்க்கே யன்றித் தனக்கும் பெருந்தீங்கு விளைத்தே விடுமழுக்காறுகொள்ளா னாகலானு மவ னுரைபாற் பிறர் கல்வியாக்கமொடு பிறவாக்கமும் பெறலானும் அழுக்கற்றகன்றாரு மில்லை யென்பது பொய்யாமொழி யாதலி னவ ன்கல்விப் பெருக்கத்திற் றீராமையானும்,

‖ "ஔவிய நெஞ்சத்தா னாக்கமுஞ் செவ்வியான்
கேடு நினைக்கப் படும்."

* திருக்குறள் கசசு. ‖ ஷை கசுக,

என்றாராகலி, னொருகா லவன்செல்வப்பெருக்கந் தீர்ந்தானாயினு மதற்கேதுவாகிய பழவினை யாதென் றறிவுடையாரா னாராயப் படுதலானுந் திங்களோடு ஞாயி றன்ன யாவது மலைகா வன்பேனைப்படு மழுக்கா றின்மை யுடையன்

அக்குட மெதிரொலியாமையிற் கல்வி பேணுதலுந், தனக்குள்ளிருக்கு மருந்தாகிய பருப்பினை வெளிக்காட்டாமன் மறைத்தலிற் பொய்காணப்படலி, னக்காரணத்தாற் பிறனுக்கம் பேணுமையு முடைத்து.

அப்பனை, காற்றொலிக்குமிடத்து வற்றிய வோலையாற் கலகலக்குமாதலிற் கல்வி பேணுமையுங், கள்விளைப்போரது கனந்தாங்கி நிற்றலி னது பேணலு முடைத்து.

அத்தெங்கு, கள்ளாயினுங் காயாயினு மளியாமையி னேறுவா ரின்மையி னவரது கனந்தாங்காமையா னது பேணுமையுந், தன்னோலை முதலாயவற்றைப் பெற்றோர் பிறர்க்களிப்பினுந் தடாமையிற் கொடுப்ப தழுக்கறுமையு முடைத்து.

அப்பருத்தி, மக்க ளுடுக்கு மாடை யளித்தற் பொருட்டு வெளிவரக் கிளம்பிய பஞ்சினை வெளிவாராது தடுத்தலிற் கொடுப்ப தழுக்கறுத்த லுடைத்து. அக்குற்றத்தாற் றானுந் தன்சுற்றமும் பஞ்சிருந்து முடாதுந் தானீர்மேற் கிடந்து முண்ணுது மழித லுடைத்து.

இனி வாய்மை யிலக்கண முணர்ந்தார்க்கே,

* "அழுக்காற்றி னல்லவை செய்யா ரிழுக்காற்றி
னேதம் படுபாக் கறிந்து."

என்றாராகலி னதனை யறிதல்கூடு மாதலா, னாசிரியனல்லாதான் வாய்மை யின்மைய। னல்வகைய வழுக்காறு முடையானென்பது பெறப்பட்டது.

இனி யழுக்கா றின்மைக்கு வாய்மையே காரண மாதலி னதன்பி னழுக்கா றிலாமை கூறப்பட்ட தென்பது.

இனி யவாவின்மை வகை யென்னையெனின்? பிறன்வேண்டும் பொருள்வெஃகலும், பிறன்வேண்டு முரிமை வெஃகலும், பிறன்செய்யும் பணிவெஃகலும், பிறன்கூறு முகமன் வெஃகலு மென, வந்நான்கன தின்மையா னல்வகைப்படு மென்பது.

---

* திருக்குறள் கசுச.

அவற்றுள் மலை யெத்துணைக் கொள்ளினும் பெருக்கத்திற் றீராமையி னதற்கேதுவாகிய வழுக்காறின்மை பெறப்படுதலானும், மக்காரணத்தா னொருவிட னீர்ப்பாய்ச்சு முதலாயின வொன்றும் வேண்டாதே வளனீதலானும், பிறன்பொருள் வெஃகலின்று. காட்டினு ரிமையாகிய வரிமா யானை வரிமாப்புலி முதலாயவற்றைத் தானும் வெஃகலிற் பிறனுரிமை வெஃக லுடைத்து.

நிலம் பிறனுரிமை வெஃகாது பிறன்செய்யும் பணிவெஃகலுடைத்து.

பூத் தும்பியின் பணிவெஃகாம லதனிசையாகிய முகமன் வெஃகலுடைத்து.

துலாக்கோன் முகமன்கூறினுங் கூறாவிடினு மொத்ததன்மையா னஃதின்று.

ஆசிரிய னழுக்காறின்மையின் மன மவன்வயப்பட் டொழுகலிற் புலம்வெள்ளேறு ளுருதலானும்,

* "இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
புன்மையில் காட்சி யவர்."

என்றாராகலிற் புலம்வென்ற காட்சியுடையார்க் கிலமென்னுங் கருத்தின்மையானுந், திங்களோடு ஞாயிறன்ன யாவதும் வெஃகா வுள்ள முடையன்.

அக்குடம் பிறன்பொருளாய கழல்வெஃக லுடைத்து. உரிமைவெஃக லின்று.

அப்பனை நாலோர்க் குரிமையாகிய வேட்டினை வெஃகலுடைத்து. நீர்வார்த்தன் முதலாயின வேண்டாமையிற் பிறன்பணி வெஃகலின்று.

அத்தெங்கு நீர்வார்த்தலை வேண்டலிற் பிறன்பணி வெஃகலுடைத்து. முகமன்வெஃக லின்று.

அப்பருத்தி, நீராகிய வாதனத்திருக்கும்வரை யுலராமலு மதனினின் றெடுத்து வெய்யிலிற் போகட்டா லுலர்தலு முடைமையி னுதன மளித்தன் முதலாக பிறர்செய்யு முகமன்வெஃகலுடைத்து.

அல்லாதா னழுக்கா றுடையனாதலின், மன மவன்வயப்படாம லவனைத் தனவயமாக்கலிற் புலம்வென்றே னாகாமையானு

* திருக்குறள் ளஎச.

மவன் முனுரைப்பன பயனிலவாயினும் பொருள்பெறி னன்றி யுரையாகடையானும், யாவதும் வெஃகு முள்ள முடையான்.

இனி, * யொருவன் றன்னெஞ்சத் தழுக்கா றிலாத வியல்பினை யொழுக்காறுக் கொள்ளி, னதுகாரணமாக வவற்குப் பொருண் முதலாய நால்வகையுள் யாதாயினும் வெஃகல் குற்றமெனத் தோன்றுமாதலி, னழுக்கா றிலாமையின்பின் வெஃகாவுள்ளங் கூறப் பட்டது.

இனி நடுவுநிலைமையின் வகை யென்னையெனின்; நண்பு நண் பன்மையு மென்னும் பகுதியு, மேலு மேலன்மையு மென்னும் பகுதியுஞ், சுற்றமுஞ் சுற்றமன்மையு மென்னும் பகுதியுங், கல்வி யுங் கல்லாமையு மென்னும் பகுதியுமென, வந்நான்கு வகையி னும் வழுவாம லொப்ப நிற்றலா னல்வகைப்படு மென்பது.

அவற்றுண்மலை யழுக்கா றின்மையும் வெஃகாமையு முடை மையானுஞ், செல்வப் பெருக்கத்துங் கழுக்கா றின்மையு மச் செல்வமஃகுதற்கு வெஃகுதலுங் காரணமாத லன்றி நண்பும் பகையு முதலாய பகுதிகள் காரண மாகாமையானும், வெறியாட் டயர்ந்து தன்னைப்பேணு நட்டாராயினு முளிகொண்டு தன்னைத் தகர்க்கும் பகைவராயினும் பசிநீர்வேட்கை யுறி னந்துன்பினை ய வ்விருபகுதியினு மொப்ப நீக்கலானுங்,

$ "தகுதி யெனவொன்று நன்றே டகுதியாற்
பாற்பட் டொழுகப் பெறின்."

என்றாராகலி, னப்பகுதிதோறுந் தன்முறைமையை விடா தொழுகு நடுவுநிலைமை யுடைத்து. பகைநண்பு கருதாதாயினு, மேல்கீழெனும் பகுதி கருத லுடைத்து. என்னை? கீழ்நின்றார்க் கன்றிச் சிகரத்தின் மேனின்றார்க்கு விடாயுறினு மருவிநீ ரளியா மையி னென்பது.

நிலன், மேனின்றார்க்குங் கீழ்நின்றார்க்கு மொப்ப வளித்தலி னப்பகுதியிற் சமனிலையுடைத்து. தன்சுற்றமாகிய வுழுவர்க்களித் துழாதாராகிய சுற்றமல்லாதார்க் களியாமையி னப்பகுதியி னுள தாகு நடுவுநிலைமை யின்று.

பூத், தன்சுற்ற மாகாமற் சேணிடைநின் றெய்திய தும்பிக்

* திருக்குறள் கசுக. $ ஷை. ககக

களித்த லுடைத்து. இசைகற்ற தும்பிக்கன்றி யிசைகல்லாத தவளைமுதலாய பிறவற்றுக் களித்தலின்று.

துலாக்கோல், கற்றார் கல்லாதாரென்னும் பகுதி நோக்கா தொப்ப வளித்த லுடைத்து.

ஆசிரிய னழுக்காறின்மையு மவாவின்மையு முடையனாதலிற் பெருக்கத்துக்குக் காரண மழுக்கா றின்மையுங் கேட்டிற்குக் காரண மவாவு மாதலன்றி, நண்பும் பகையு முதலாய பகுதிகள் காரணமாகாவென வுணர்த லியல்பாதலானுங்,

‡ " கேடும் பெருக்கமு மில்லல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க் கணி."

என்றாராகலி னவைகாரணமாக நெஞ்சங் கோடாமையானுங், கோல்கோடுதற்குக் காரணந் தூக்கிய பொருளது மிகையுங் குறையு மாதலன்றி நண்பு முதலாய பகுதி காரண மாகாதெனக்கொண் டம்மிகை குறை நீக்கிச் சமன்செய்து சீர்தூக்கி நண்பு முதலாய வப்பகுதிபற்றிக் கோடாத துலைநாவன்னசமனிலையுடையன்

அக்குடம், கழல்பெய்த சிறாரை நட்ட வேனைச்சிறார்க் களித்தலும் பகைத்த சிறார்க் களியாமையு முடைமையிற் பகைநண்பினொப்ப நிற்கு நடுவுநிலைமை யின்று. மேனின்றார்க்குங் கீழ்நின்றார்க்கு மொப்ப வளித்தலி னந்நடுவுநிலைமை யுடைத்து.

அப்பனை, மேலேறினார்க்கன்றிக் கீழ்நின்றார்க்குக் கள்ளளியாமையி னந்நிலைமையின்று. தன்னை வளர்த்த சுற்றமல்லாதார்க்குங் கள்ளளித்தலி னந்நிலைமை யுடைத்து.

அத்தெங்கு, நீர்வார்த்துப் பேணுஞ் சுற்றத்துக்கே யன்றிப் பிறர்க் கோலைமுதலாயின வளியாமையி னந்நிலைமை யின்று. கற்றார் கல்லாதா ரென்னு மிருபகுதியினு மொப்ப வளித்தலி னந்நிலைமையுடைத்து.

அப்பருத்தி, தன்னை வெய்யிலினுலர்த்திப் பஞ்சினைக் கொள்ளு முபாயங் கற்றார்க் களித்தலு மதனைக் கல்லாத சிறார்க் களியாமையு முடைத்து.

இனி, யழுக்கா றுடையா ரகலாமையிற் பெருக்கங்கண் டறியாமையானும், பெருக்கங்காணுதா ரதுசுருங்குமாறு மறியாமை

‡ திருக்குறள் ககஎ.

யினவாவாற் செல்வஞ் சுருங்குமாறு மறியாமையானும், பெருக்கத்திற்குங் கேட்டிற்குங் காரண முணராமையாற் காரணமாகாத நண்புமுதலாய பகுதியைக் காரணமாக மயங்க லியல்பாகலி, னக்காரணத்தா லந்நால்வகைய நடுவுநிலைமையு மவற்கின்மை யுணரப்படு மென்பது.

இனி யழுக்கா றிலாமையு மவாவின்மையுங் காரணமாக நால்வகைய நடுவுநிலை மையு முளவா மாதலி, னவற்றின்பின்னர்ச் சமனிலை கூறப்பட்டது.

இத்துணையு மெண்வகை யுறுப்புக்கூறப்பட்டன.

இனி, யாத்திரையன் பேராசிரியன் கூறிய வேளாண் வாழ்க்கை முதலாய பிறவு மவ்வுறுப்புளடங்கும். என்னை? குடிமையுளீகையின் விகற்பமே வேளாண் வாழ்க்கையும்,

* "தாளாண்மை யில்லாதான் வேளாண்மை பேடிகை
வாளாண்மை போலக் கெடும்."

என்றுராகலி, னவற்றுக்கேதுவே தாளாண்மையுங், கல்வி விகற்பமும் பயனுமே யேனையவு மாகலானென்பது.

அற்றே லவற்றை யவன் வேறுகூற லென்னையெனி, னியற்கையாகியவீகை யவ்விரண்டானுங் கல்வி யேனையவற்றானும் புலப்படலை யுணர்த்தற்கென்பது.

இனி யவை, யத்தன்மைத்தாயினு மவற்றையு மவற்றின் மறுதலைத்தன்மையையும் வேறுவே றுவமத்தானு மறிதல் வேண்டுமெனி, னவை தொகைக்குண மாகாமற் றனிக்குணமாக வேறு வேறெண்ணப்படலாற் பிண்டவுவமத்தா னுரையாது மலையானு மதன்மறுதலை யாகிய கழற்குடத்தானு முரைக்கப்படு மென்பது.

இனி மலை யடுத்தார்ப் புரக்கும் வேளாண் வாழ்க்கையு மடுத்த விலாரு மடுத்துப் பயனுற வருவிசீர் சுரக்கும் பரவு தாளாண்மையு முடைத்து, ஆசானுமன்னன்.

அக்குடந் தனக்கென வொருதொழி லின்மையி, னவ்விரு தன்மையை யின்று. அல்லாதானுமன்னன்.

மலை, நூலோர் மருங்கொடு தாலப் பொருளுந் தாங்க லுடைத்து. ஆசா னூலறிவொ டுலகிப லறிதலு முடையன்.

---

* குறள் ௬௧௪.

அக்குடஞ், சிறாரது விளையாட்டிற் றாய்தல்லா நிலத்தும் படலாற் பிணிதீர்க்கு மியல்புங் கெடலிற் றன்மாட்டுள்ள கழலை நாலோருங் கொள்ளாமையானு, மக்கழ லன்றி வேறு தாலப் பொருளை யின்றாதலானு, மவ்விருவகைப் பொருளு மொன்றுந் தாங்குத லிலது. அல்லாதான் றானறியாமே யொருகா லொட்ப முடையன வுரைப்பினும்,

* ''கல்லாதா னொட்பங் கழியநன் றாயினுங்
கொள்ளா ரறிவுடை யார்.''

என்றாராகலி, னவற்றை நாலோர் கொள்ளாமையானு, மூலகிய லறியிற் றன்கல்லாதுவைத்து மாசிரியனென நாலுரைத்தற் கொருப்படா னாதலானு, மவற்று ளொன்றானு மறிந்தா னல்லன்.

மலை, நிலைஇய தோற்ற முடைத்து. ஆசா ‡ னிலையிற் றிரியா தடங்கிய தோற்ற முடையன்.

அக்குடஞ் சிறார்கருதிய விடத்தெல்லாஞ் சேறலி னிலையிற் றிரித லுடைத்து. அல்லாதான் சிறுதுன்பினுந் தன்னிலைபெய ரலி னத்தன்மையன்.

மலை பொறையு நிறையு முடைத்து. ஆசானுமன்னன்.

அக்குட மவை யுடைத்தன்று. அல்லாதானுமன்னன்.

மலை, மழையும் வெய்யிலும் விழைவறக் கெடுப்பினும் வளந் தரு மாற்றா னலட்படு முயிரினை மறவாது புரத்தலை யிறவாத் தன் மைத்து. ஆசான் வறுமைமிக் குறினு முறுபவர்க் களித்தலி னச் சா விழிதகைப் பொச்சாப் பின்மையன்.

அக்குட, நிலன்றாக் குறுங்கால் வலன்றாங்க லின்றி யுடையு மியல்பா னுடைபெறு மாதலி, னுடைந்தகாலைத் துராற்குப்பையி னெய்தி முன்னட்ட சிறாரை யொரானுடைத் தாதலாற் பொச்சாப் புடைத்து. அல்லாதானுமன்னன்.

இனி மலை,

§ ''கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
எடுப்பதூஉ மெல்லா மழை.''

என்றாராகலி, னவ்வாறு கெடுப்பது மெடுப்பதும் வல்ல மழைவள னுடைத்து. ஆசான்,

---

* திருக்குறள், ௪௱௪ ‡ ஷை. ௧௨௪. § ஷை. ௧௫.

* "அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலா
ரென்னுடைய ரேனு மிலர்."

என்றாராகலிற் றன்னை யிலராயினாரைப் பிறவென்னுடைய ரேனு மிலராக்கிக் கெடுப்பதூஉம், தன்னை யுடையராயினாரை யொன்றுமிலரேனு மெல்லாமுடைய ராக்கி யெடுப்பதூஉம் வல்ல வறிவினை யுடையன்.

அக்குடம், பலகழற்கா யுடைத்தாயினும் பயனிலவெனப் பெரியாரா னிகழப்படுதலின் வளனின்று. அல்லாதான் றனக்காயினும் பிறர்க்காயினும் பயன்படாமைதலி னறிவிலன்.

மலை, புதையா வுருவுஞ் சிதையாவாற்றலுமுடைத்து. ஆசான்,

§ "வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளுங்
கீழ்ப்பா லொருவன் கற்பின்
மேற்பா லொருவனு மவன்கட் படுமே."

என்றாராகலின் மேலாதனத்து வீற்றிருப்போனாகலானும், பேராற்ற லுடையாரானும் வெல்லற் கரிய தோலாநாவின னாகலானு, மறையா வுருவுங் குறையா வாற்றலு முடையன்.

அக்குடங், கீழிருக்கு மியல்பிற் றாகலானுங் கல்லின் மெல்லென விழினு மொல்லையி னுடையுந் தன்மைத் தாகலானும் புதைதலுஞ் சிதைதலு முடைத்து. அல்லாதான், கல்விக் கழகத்துட் செல்வி னெல்லாரினுங் கீழிருத்தலானு மவன்சொல்வன குறைந்த கல்வியுடையாரானும் வெல்லப்படலானு மறையு முருவுங் குறையு மாற்றலு முடையன்.

மலை, நானமுதல நறுமணப் பொருளும் வானநீர் மண்ணீர் வகைப்படக் காட்டலுங் காண்போர் கண்கள் காமுறப் படுதலு மின்னோ ரன்ன தொன்னெறி மரபிற்று. ஆசான் பற்பல் வகைப் படப் பரவிய புகழுஞ், சொற்பொரு ளுணர்த்துஞ் சொல்வன்மையுங், கற்போர் நெஞ்சங் காமுறப் படுதலு மின்னோ ரன்ன தொன்னெறி மரபினன்.

அக்குடம், விளையாட்டுக் கருவியாகிய கழலன்றிப் பிறிதொன்று மின்மையி னேனைய வின்று. அல்லாதானு மன்னன்.

இவ்வாற்றா னாசிரியனது வேளாண் வாழ்க்கை முதலாய வேனைய தன்மையு, மவற்றின் மறுதலையாகிய வல்லாதானது தன்

* திருக்குறள் சுஉ0. § புறநானூறு, கஅ௩.

மையு முணரப்படுதலிற், கற்கப்படுவோனுக்கு மலையுங் கற்கப்பட டாதோனுக்குக் கழற்பெய்குடமு மவற்றை யுணர்த்துமிடத்துத் தனிநின் றுவமமா மென்பது. இனியுரைப்பன பிண்டவுவமம்.

இனி யீற்றி னின்ற வீதல்விகற்ப முரைக்கற் பாற்று.

இனி யீகை விகற்ப முறுமா றென்னையோவெனி, னீதற் றொழிற்கு முதனிலை யெனப்படும் ¶ வினையுஞ், செய்வதுஞ், செயப்படுபொருளு, நிலனுங், காலமுங், கருவியு, மின்னதற்கென் பது, மிதுபய னென்பதுமென, வெண்வகையு மவற்றின் விகற் பமு மாகிய காரண வகையா னவ்வாறுயிற் றென்பது.

அவற்றுண் முதலாவ தாகிய வினை யுரைக்கற் பாற்று.

அவ்வினை யீதற்கு முன்னிகழற் பாலதாகிய முதற்காரண வினையு, மீதற்க ணீவோன்காரணமாகவு, மவனளிக்கும் பொருள் காரணமாகவு, மதனைக் கொள்வோன் காரணமாகவு, மீவோன் கண் மூவகையவாக வுடனிகழற் பாலவாகிய துணைக்காரண வினை யுமென நான்குவகைய.

அவற்றுண் முதற்காரணவினை யுரைக்கற்பாற்று

அவ்வினை யீதற்பொருட் டாசிரியற் கின்றியமையாது வேண் டும் பொருளுடையனுந் தன்மையு, மவ்வுடைமைக் கின்றியமை யாது வேண்டும் வழியரா னிரக்கப்படுதலு, மதற் கின்றியமையா து வேண்டு முடனளித்தற் றுணிவு, மதற் கின்றியமையாது வேண்டற் பாலதாய தடையின்மையுமென நான்கு. அவை முன் னிகழா வாயி னீதலு நிகழாமையின் முதற்காரண மாயின.

அவற்றுண் மலை, யருவிநீ ருடைத்தாதற் றன்மையு மிரந்தபி னன்றி முன்னு மளித்தலி னிரக்கப்படுத லின்மை யென்னுங் குற் றமு முடைத்து.

நில, னுழுவ ரிரந்தபி னவர்வேண்டுவ தளித்தலின் மலையது குற்றமின்மையு மவரிரந் துழுதகாலைத் துணியாமல் வித்திட்ட பின்னரே துணிதலி னுடன்றுணி வின்மை யென்னுங் குற்றமு முடைத்து.

பூத், தன்னைச் சூடினார்க்கு நறுமண னளிப்ப வுடன் றுணி

---

¶ தொல், சொல்லதிகாரம், ககஉ-வது சூத்திரம்.

தலி னிலனது குற்ற மின்மையுந் துணிந்தபிற் காற்றசைப்பி னிர ந்த வண்டினுக்குத் தேனளியாமையிற் பிறிதொன்றாற் றடைப் படற் குற்றமு முடைத்து.

துலாக்கோ லளிக்கத் துணிந்தபிற் பிறர்தடுப்பினுங் கேளா தளித்தலிற் பூவினது குற்றமின்று.

இவ்வாற்றா னக்குற்ற மூன்று மின்மையி, னந்நான்கு தன் மையு மொருங்குடையா னாசிரியனென்பது பெறப்பட்டது.

இனி யுரைப்பாட்டு,

"உடைமை யிரக்கப் பாடு துணிவே
தடையின்மை யென்ன நடைபெறு நான்கு
மீதற் றொழின்முதற் காரண வினையே." [என்பது.]

இப்பாட்டு, சூத்திரத்தியல் பின்றி யுரையியல்பே யுடைமை யி னுரைப்பாட்டெனப் பட்டது. கற்பார்க் கினிது பயன்பட நோக்கி வேண்டுமிடத் திவ்வாறே யுரையினை யாப்பு நடையிற் பின்னு மெழுதப்படும்.

இனிக் கழற்குடஞ் சிறார்பெய்தற் றன்மைத்தன்றிக் கழலைத் தானியல்பாக வுடைத்தாகாமையுஞ், சிறாரா னிரக்கப்படற் குண மு முடையாமையான், மலையின் மறுதலைத் தன்மைத்து.

படற்பனை, காயாவியல் புடைமையின் யாவரானுங் காயுங் கனியும் வேண்டி யிரக்கப்படுத லின்மையுங், கீழ்க ளிரப்பிற் கள் ளினைத் தாழ்த்த லின்றி யளித்தலி னுடன் றுணியுங் குணமு முடைமையி னிலத்தின் மறுதலைத் தன்மைத்து.

முடத்தெங்கு, தன்னை நற்றெங்கென நினைந்து தன்கணீர் வார்த் திரந்து வேண்டினாற்குத் தான் பாளையினா வியல்புடைத் தாகலிற், காயேயன்றிக் கள்ளினையு மீதற்குத் துணியாமையி னக் குணமின்மையும், வெண்டோடு மோலையு மட்டையு மீர்க்கு மீதற் குத் தடையின்மையு முடைமையிற், பூவினது மறுதலைத் தன்மை த்து.

குண்டிகைப்பருத்தி, நீர்தடுத்தலாற் பஞ்சினை வெளிப்படுத் துக் கொடாமையாற் றுலாக்கோலின் மறுதலைத் தன்மைத்து.

இவ்வாற்றா னக்குண மூன்று மின்மையி னந்நான்கு குற்

முழமாருங்குடையா ஞசிரியனல்லாதா னென்பது பெறப்பட்டது.

இனித் துணைக்காரண வினை யுரைக்கப்படும்.

அவை, முதற்காரணவினை யீதலெனக் காரியப்படு பளவுந் தாமுடனிற்றலானுந் தாமிக்வழிக் கல்விப்பொருளை மாணுக்கர் செவ்விதி னறியாமையி னீகை யினிது நிகழாமையானு, மதற்குத் துணைக்காரண மாயின.

அவைபோல்வன பின்னும் பலவுள வாயினுஞ் சிறப்பில்லாதவற்றையுஞ் சிறப்புடையவற்றுள்ளுங் கூறியகொண்டு தாமே யுணர்தற் கெளியவாயவற்றையும் விரிவஞ்சி விடுத்துச் சிறப்புடையவற்றுட் பெரும்பாலன வீண்டுக் கொள்ளப்பட்டன. பின்னுமன்ன.

இனிச் சிறப்புடைத் துணைக்காரணவினையு ளீவோனைப்பற்றி நிகழும் வினை யுரைக்கற் பாற்று.

அவ்வினை யறிவுக்குத்தகக் கல்வி பயன்படல்கருதி மாணுக்கர்க் கொருதுறையா னன்றிப் பலதுறையா னளித்தலு, மங்ஙனமளிப்பினு மச்சத்தாற் கற்பிற் பயன்படாமையி னதுசெய்யா தளித்தலு, மங்ஙன மளிப்பினு மொருங்களிப்பிற் பயன்படாமையிற் பன்னாட் களியாம லப்பொழுது வேண்டுவ தளித்தலு, மங்ஙன மளிப்பினு மப்பொருளைய விபரீத மறியாமையென்னு முக்குற்றத்து ளொன்றான் மறையிற் பயன்படாமையி னங்ஙன மறையாமல் விளங்க வளித்தலுமென நான்கு.

அவற்றுண்மலே, யருவிநீரைப் பலதுறையா னளித்தலுஞ் சிறிதே பிழைப்பினு மிறுதிசெய்தலி னச்சுறுத்தற் குற்றமு முடைத்து.

நில, னுழவர்க் கச்சஞ்செய்யா தளித்தலி னக்குற்ற மின்மையும் பன்னாட்கு வேண்டுவ வொருங்களிக்குங் குற்றமு முடைத்து

பூ, வப்பொழுது வேண்டுமளவிற் றேனைத் தும்பிக் களித்தலி னிலனது குற்றமின்மையு மத்தேனை யத்தும்பி வெளிப்படக் காணுவண்ணங் காப்பிதழ்தாதென்னு மூன்றானு மறைத்துக்கொடுக்குங் குற்றமு முடைத்து.

துலாக்கோல், பக்கலுள்ள கயிற்றின் மறையாமல் வெளிப்படக் காட்டி விளங்கக் கொடுத்தலிற் பூவினது குற்றத்தையின்று

இவ்வாற் றுஞசிரியனது தன்மைபெறப்பட்டது.

இனி யுரைப்பாட்டு,

" கொள்வோ னுணரப் பன்னெறி குறித்த
லவனுளத் தச்சஞ் சிவணச்செய் யாமை
பன்னாட் கன்றி யந்நாட் களத்த
லையந் திரிபே யறியாமை யென்னு
முக்குற் றத்துட் புக்கொளி யாம
லவனுளங் கொள்ள வதனைக் காட்ட
லெனநான் கென்ப வீதற் றொழிற்க
ணீவோற் பற்றி யியலுந் துணைவினை." [என்பது]

இனி யக்குடங், கழற்காயினைப் பல்வழியா னளியாமலொரு வழியா னளிக்குங் குற்றமு, மச்சஞ் செய்யாம லளிக்குங் குணமு முடைமையின், மலையின் மறுதலைத் தன்மைத்து.

அப்பனை, யேறுமிடத் துடலைப் பீறலா னச்சுறுத்தற் றன்மைத்தாதலி னக்குணமின்மையும், பன்னாட் கன்றி யந்நாட் களந் தளிக்குங் குணமுமுடைமையி னிலத்தின் மறுதலைத் தன்மைத்து.

அத்தெங்கு, பானையின்மையாற் கள்ளுங் காயு மளித்த லின்றி, மட்டைமுதலாயவற்றை யந்நாட்கு வேண்டுவ தளியா தொருங்களித்தலி னக்குண மின்மையு, மறைத்துக் கொடாம லிதுமட்டை, யிஃதோலை, யிஃதீர்க்கென விளங்கக் காட்டுங் குணமு முடைமையிற், பூவினது மறுதலைத் தன்மைத்து.

அப்பருத்தி, தன்புறத்தே யுள்ள தோலான் மறைத்துப் பஞ்சாகிய பொருளை வெளிப்படக் காட்டாமையி, னக்குண மின்மையாற் றுலாக்கோலின் மறுதலைத் தன்மைத்து.

இவ்வாற்றா னல்லாதானது தன்மை பெறப்பட்டது.

இனி யீதற்பொருள் பற்றி நிகழும் வினை யுரைக்கற் பாற்று.

அப்பொருண் மாணுக்க ரினிதுணருமா றெழுத்து முப்பத்து மூன்றெனப் பட்டாற்போல வித்துணைத்தென முதற்கட்பிண்டமாகக் காணப்படுதலு, மவையெல்லா மொருதன்மைய வல்ல வேறு வேறென் றுணருமா, றவை அகரமுதலாக வாய்தவிறுவாயாக வுள்ளனவெனப் பட்டாற்போல வொன்றற்கொன்று வேறுபாடுடைமை காணப்படுதலு, மவற்றை யுயிரென்று மெய்யென்றுங்

குறினெடிலென்றும் வன்மை மென்மை யிடைமையென்றும் பகுத்தவிடத் தெழுத்தென்னும் பொதுமைசிதையாமைபோலப், பகுத்தவிடத் தப்பகுப்பிற் றன்பொதுவிலக்கணஞ் சிதையாமையு, முயிர்முதலாய பகுப்புப் பொதுமை சிதையாமையொடு தனித்தனிச் சிறப்பியல்பும் பெற்றாற்போலத், தன்பொதுமை சிதையாமையொ டப்பகுப்பு வேறு வேறு சிறப்பிலக்கணம் பெறுதலுமென நான்கு.

அவற்றுண்மலை, யருவிநீரை யிடம்பற்றித் தொகையினும் வகையினு மித்துணைத்தெனப் பிண்டமாகக் காட்டலு, மிடவேறுபாட்டா னன்றி நீரின்றன்மையா னொன்றற் கொன்று வேறுபாடுடையவெனக் காட்டாக் குற்றமு முடைத்து.

நில, னெல் கரும்பு வாழை கமுகுமுதலாய பிண்டப் பொருள்களை யொன்றற் கொன்று வேறுபா டுடையவெனக் காட்டலினக்குற்ற மின்மையு, மவற்றைப் பகுத்தவிடத்து வேரொன்றும், வையென்றும், பீளென்றுங், கதிரென்றும், பதடியென்று, முமியென்றுந், தவிடென்று, மரிசியென்று, நெற்பயிர்முதலாயின தம் பொதுவியல்பிற் சிதைதலி னக்குற்றமு முடைத்து.

பூத், தேனைப் பகுத்தவிடத்து மப்பகுப்புத் தேனின் பொதுவியல்பிற் சிதையாமையி னக்குற்ற மின்மையு, மப்பகுப் பினிமையெனும் பொதுவியல்பன்றிச் சிறப்பியல்பு பெறாமையி னக்குற்றமு முடைத்து.

துலாக்கோல், தன்கணுள்ள பொருளைப் பல்வகையாகப் பகுப்பினு, மவற்றை வேறுவேறு நிறுத்துக் காட்டி யந்நிறையா னிந்நிறையிற் றிஃதெனவ வவற்றைச் சிறப்பியல்பின வாக்கலி னக்குற்றமின்று.

இவ்வாற்றா னாசிரியனது தன்மைபெறப்பட்டது.

இனி யுரைப்பாட்டு,

"தொகையினும் வகையினு மித்துணைத் தென்னப்
பொருண்மை காட்டலும் புகன்றன தமக்குள்
வேறுபா டாதல் விளங்கக் காட்டலும்
பொதுமை சிதையாமற் பல்வகைத் தாக்கலுஞ்
சிறப்புந் தனித்தனி நிறுத்துக் காட்டலு
மெனநான் கென்ப வீதற் றெழிற்கட்
செயப்படு பொருளிற் றிகழுந் துணைவினை," [என்பது.]

இனியக்குடங் கழல்பெய்தற் கிடவிகற்பம் பெருமையிற் றுகையினும் வகையினு மித்துணைத்தெனப் பிண்டமாகக் காட்டாமையு, மவற்றை யவர்க் கொன்றற் கொன்று வேறெனக் காட்டுங் குணமு முடைத்து.

அப்பனை, முன்னர்ச் சுரந்தளித்த மதுத்துளிக்கும் பின்னர்ச் சுரந்தளிக்கு மதுத்துளிக்கும் வேறுபாடு காட்டாமையி னக் குண மின்மையு, பகுத்தவிடத்து மதுவென்னும் பொதுமைசிதையாக் குணமு முடைத்து.

அத்தெங்கு, தன்னாற் கொடுக்கப்பட்ட மட்டையைப் பகுத்தவிடத் தோலையென்று மீர்க்கென்றும் பொதுமை சிதைதலி னக்குண மின்மையும், மோலைமுதலாயின வேறுவேறு சிறப்பியல்பு பெறுதலி னக்குணமு முடைத்து.

அப்பருத்தி, தோலின்கட் பல்பகுதியவாய பஞ்சினை யுடைத்தாயினு மவற்றை வேறுபிரித்துக் காட்டாமற் பிண்டமாகக் காட்டலி னக்குண மின்று.

இவ்வாற்று னல்லாதானது தன்மை பெறப்பட்டது.

இனிக் கொள்வோனைப் பற்றி நிகழும் வினை யுரைக்கற் பாற்று.

† "ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவர்க்
கெழுமையு மேமாப்புடைத்து." எனவும்,

‡ "உற்றுழி யுதவியு முறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்ற னன்றே."

எனவுங் கூறினாராகலி, னதனைக் கொள்வோன் மேலிருந்து முடனிருந்துங் கோடலறமாகாமையி னாசிரிய னவனைத் தன்கீழிருப்பச் செயலுஞ், சித்திரப்பாவையி னடங்கிநின்று கொள்ளாவழி யப்பொருளை யவனுணரமாட்டா னாகலிற் கற்பிக்குமிடத் தவனை யாசிரியன பிறிதொருகருமத்தி னேவி யசைத்தல் செய்யாமையுந், தன்னேவலா னன்றி யவனாக வாயினும் பிறிதொரு கருமத்தா னசைதல் செய்யாமற் காத்தலுந், தான்சொல்வன பிறழுமாகலிற் றானும் பிறிதொருகரும மேற்கொண்டு மனமசைதல் செய்யாமையு மென நான்கு.

† திருக்குறள், ௩௯௮. ‡ புறநானூறு, ௧௮௩.

அவற்றுண்மலை, யருவிநீரை நிலத்துக்களிக்குமிடத் ததனைக் கீழிருத்தலும், வேகத்தா னந்நிலத்தைக் குழித்தலி னதனைத் தானசைத்தலு முடைத்து.

நில, னுழுவர்க் களிக்குமிடத் தவரைத் தானசைத்தல் செய்யாமையி னக்குற்ற மின்மையு, மவராக வசையி னவரைத் தடுத்துக் காவாமையி னக்குற்றமு முடைத்து.

பூத், தும்பிக் களிக்குமிடத் தத்தும்பி யசையி னளித்த லின்மையா னக்குற்ற மின்மையுங், காற்றாற் றானசைதலி னக் குற்றமு முடைத்து.

துலாக்கோ, லளிக்குமிடத்துத் தானசையாமற் றன்னிலையி னின் றீதலி னக்குற்ற மின்று,

இவ்வாற்றா னாசிரியனது தன்மை பெறப்பட்டது.

இனி யுரைப்பாட்டு,

"ஈவோன் கொள்வோற் றன்கீ ழிருத்த
லவனை யேவலி னசைத்த லின்மை
யவன்றா னாகவு மசையச்செய் யாமை
யீவோன் றானு மசைத லின்மை
யெனநான் கென்ப வீதற்றொழிற்கட்
கொள்வோர்ப் பற்றிக் குறிக்குந் துணிவினை." [என்பது.]

இனி, யக்குடஞ் சிறாரை மேலிருத்தித் தான் கீழிருந்து கழலீதலி னக்குண மின்மையு, மவரைத் தானசைத்தல் செய்யாக் குணமு முடைத்து.

அப்பனை, யள்ளீதற்கட் கொள்வாரை யேறலு மிறங்கலுங் கோய்கட்டலும் பாளைசீவலுமெனப் பிறதொழிற்க ணேவி யசைத்தலி னக்குணமின்மையு, மவரிவை செய்யாமற் பிறசெய்து தாமாக வசையிற் கொடாக்குணமு முடைத்து.

அத்தெங்கு, பிறி தொருவினையை மேற்கொள்ளுமிடத்துந் தானாக மட்டை யூழ்த்தலி னக்குண மின்மையு, மேனைத் தெங்கினது நெருக்கத்தாற் றன்மேற் காற்று மிகவுறாமையிற் றானசைதற் றன்மை யில்லாக் குணமு முடைத்து.

அப்பருத்தி, சிறார் விளையாடுகோலைத் தானு மசைத லுடைத்து.

இவ்வாற்றா னல்லாதானது தன்மை பெறப்பட்டது.

இனி யிரண்டாவதாகிய வீதலைச் செய்வோனதியல் புரைக்க ற்பாற்று.

அவ்வியல்பு முன்னரேயுரைக்கப்பட்ட தன்றேவெனி, ஞண் டவனது பொதுவியல்புரைத்ததன்றி யீதற்கொழிற்க ணவற் கின் றியமையாதன விவையெனச் சிறப்பியல்பு கூறாமையி, னீண் டச் சிறப்பியல் புரைக்கப்படு மென்பது.

அவ்வியல்பு குணமுந் தொழிலுமென விருவகைத்து.

அவற்று ளீகைக் கின்றியமையாக்குண முரைக்கற்பாற்று,

இனி யறத்து ளுயர்வுடைய தீகையே யாயினும்,

* "என்பி லதனை வெயில்போலக் காயுமே
யன்பி லதனை யறம்."

என்றாராகலி, னன்பில்வழி யறமு மறமாக முடிதலா னவ் வன்பே யேனைய குணங்களினு முதன்மையாகலானும்,

$ "அன்பீனு மார்வ முடைமை யதுவீனு
நண்பென்னு நாடாச் சிறப்பு."

என்றாராகலி, னவ்வன் பார்வ முடைமையு மது நண்புந் தரு தலானும்,

§ "அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்வலர்
புன்கணீர் பூச றரும்."

என்றாராகலி, னவற்று ளார்வமுடைமை தம்மா லன்புசெய் யப்பட்டாரது துன்பங்கண்டுழிப் புன்கணீர் பொழிவித் தவ்வன் பினை வெளிப்படுத்து மியல்பிற்றாகலானும்,

● "நகுதற் பொருட்டன்று நட்டன் மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு."

என்றாராகலி, னேனை நண்பு நட்டார்மாட்டுவேண்டாதசெய் கை யுளதாயவழி முற்பட்டுக் கழறுமாறு செய்தலானு, மன்பு டைமை குடிப்பிறந்தார்க் கியற்கையாமாறு முன்னரேகூறப்பட்ட மையானு, மேனைய வார்வ முடைமையு, நண்பு, மார்வலர் துன்பங் கண்டுழி யுளதாகும் வாட்டமு, நட்டாரது மிகுதிகண்டுழி யுளதா குங் கழற்றுரையுமென வக்குண நான்குவகைப்படும்.

அவற்றுண்மலை ** யன்புடையா ரேன்பு முரியர் பிறர்க்கென்ற

* திருக்குறள், ௭௭. $ ஷை ௭௪. § ஷை ௭௧. ●. ஷை. ௭அ௪. ஷை **௭௨.

வண்ண மென்பனைய சிலையாகிய தன்னுறுப்பு மீதலி ஞர்வமுடை த்து.

இனி நிலனு முறுப்பாய மண்ணீதலி னத்தன்மைத்தா மெ னி, ஞெத்த நிலன் மண்ணீயுமாயிற் பள்ளமாகிப் பயிரிடற்காகா மையானும், பள்ளமாய நிலன் பின்னு மண்வேண்டுதலானு, மே டாய நிலனென்றே தன்னுறுப்பாய மண்ணீதற்கியைதலி னத்தன் மை யவற்குச் சிறப்பியல் பாகாதென்பது.

இவ்வா றுென்றனது தன்மை பிறிதொன்றற்கு முள்ளதென வேனைய விடத்தினுள்ளு மையந்தோன்றி ஞண்டு மிப்பெற்றிநோ க்கி யமைத்துக் கொள்க.

இனி மலை யார்வ முடைத்தாயினு நண்பின்று என்னை?

* "கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை யடுங்காலை
யுள்ளினு முள்ளஞ் சுடும்."

என்றாராகலி, னம்மலை தன்மருங்குற்றார் வழுக்கிக் கீழ்வீழ் ந்து கெடுங்காலை யவரைத் தாங்காது கைவிடுதலி னென்பது.

இனி நிலன், வழுக்கிக் கீழ்விழினுந் தான் றாங்குதலா னண் புடைத்து. உழவரது பசித்துன்பங் கண்டுந் தான் றளராமையி னன்பினை வெளிப்படுத்தும் வாட்டமின்று.

பூத், தன்மருங்குற்ற தும்பியின் பசித்துன்பங்கண்டு தேனு கிய புன்கணீர் பொழிதலின் வாட்டமுடைத்து. தன்னுற் றாங்கப் பட்ட வத்தும்பி தேனுண்ணலை யன்றிக் கள்ளு முண்ணுதலாய மிகைசெயக் கண்டு, மம்மிகுதிக்கண் மேற்சென் றிடியாமையி னன்பினை வெளிப்படுத்துவதாகிய கழற்றுரை யின்று.

அக்கோல் தன்னுற் றாங்கப்பட்டபொரு ளளவின்மிகி னத் தூக்கின்மருங்குள்ள காம் பம்மிக்க பொருண்மேற் சென்றிடித் தலிற் கழற்றுரை யுடைத்து.

இவ்வாற்று ஞசானது தன்மைபெறப்பட்டது.

இனி யுரைப்பாட்டு,

"அன்பீனு மார்வமு மன்ன தினு
நண்பு மார்வலர் துன்பங் கண்டழிப்
புன்கணீர் பொழிந்து புறந்தோன்று தன்மையு
மிகுதிக் கண்ணே மேற்சென் றிடித்தலுங்

* திருக்குறள் ௭௯௯.

கல்வியளிக்கு நல்வினை யாசாற்
றின்றி யமையா தியையுங் குணனே." [என்பது.]

இனி, யக்குடஞ் சிறூர்க்குத் தீங்குறுத்தலி ஞர்வ மின்று. அப்பனை கீழ்விழிற் றாங்காமையி னண்பின்று. அத்தெங் கார்வலரது துன்பங்கண்டுழித் தளராமையின் வாட்ட மின்று. அப்பருத்தி, தன்னோடு நட்டநீர் பஞ்சினைக் கொடாதவண்ணந் தன்னைத் தடுத்துக் கொடுப்ப தழுக்கறுத்தலாகிய மிகைசெயக் கண்டு, மேற்சென் றிடியாமையிற் கழற்றுரை யின்று.

இனிச் சிறூரொடு பழகலாற் குடத்திற்கு நண்பும், பசிகண்டு புன்கணீரெனக் கள்ளுகுத்தலிற் பனைக்கு வாட்டமுந், தன்னை முடமுறச்செய்த வேனைய தெங்கின்மேற் றன்சார்ந்துநிற்றன் மேற்சென் றிடித்தலைக் காட்டலின் முடத்தெங்கிற்குக் கழற்றுரையு முளவெனத் தாமே யவை யுணரற் பால வாதலி, னின்னோரன்ன வினி யெழுதப்படா வென்பது.

இவ்வாற்றா னல்லாதானது தன்மைபெறப்பட்டது.

இனி யீவோனது தொழி லுரைக்கற்பாற்று. அத்தொழிலகத்தொழிலும் புறத்தொழிலு முரைத்தொழிலுமென மூவகைப்படும். அவற்று ளகத்தொழி லுரைக்கற்பாற்று.

இனிக் * கைம்மாறு வேண்டா கடப்பா டென்றா ராகலி னது வேண்டின், வாணிகம் போல்வ தொன்றன்றி யீகை யாகாமையானக் கைம்மாறு வேண்டாக் கடப்பாடும்,

† "வறியார்க்கொன் றீவதே யீகைமற் றெல்லாங்
குறியெதிர்ப்பை நீர துடைத்து"

என்றாராகலின் வறியார்க்கீகையும்,

‡ "நன்றாற்ற லுள்ளுந் தவறுண் டவரவர்
பண்பறிந் தாற்றாக் கடை."

என்றாராகலி, னவர்நாடிய வன்றிப் பிறவளிப்பி னஃதவர் நாடிய பொருளினு மிகநல்லவாயினு மதனருமை யறியாமையாற் பயன்கொள்ளா ராதலி னதனைக் கொடாமல்,

§ "தீயவை தீய பயத்தலாற் றீயவை
தீயினு மஞ்சப் படும்."

* திருக்குறள், உகக. † ஷை, உஉக. ‡ ஷை, சகக. § ஷை, உ0உ. தீயவை தீய பயத்தலாற் றீயவையென்பது, பரிமேலழகர் கொண்டபாடம்.

என்றாராகலிற், றாமாக விரும்பிக் கேட்பினுந் தீயவற்றை யுங் கொடாம னல்லவற்று ளவர்நாடின கொடுத்தலும், நாடின கொடுப்பினு மவர் கற்குமளவிற் குறைபக் கொடுப்பிற் காலக்கழி வொடவாவு மடங்காமையாற் பிறரிடத்து மதுவேண்டி யிரப்பா ராகலானுஞ், § சொல்லப் பயன்படுவர் சான்றோ ராகலி னவர் தாம் பயன்படாமற் பிறர்மாட்டுச் செல்ல விசையா ராகலானு, மங்ஙனஞ் செல்லாவண்ணங் கற்குமளவிற் குறையாது கொடுத்தலு மென வத்தொழி னான்கு வகைப்படும்.

அவற்றுண் மலை, கைம்மாறு வேண்டாக் கடப்பாடும் வழி தாய நிலத்துக்கே யன்றி வறுமையில்லாக் கடலுக்கு மீயுங் குற் றமு முடைத்து.

நிலை, னுடையார்மு னில்லார்போ லேக்கற் றுழுவார்க்கன்றி யுழாதார்க் களியாமையி னக்குற்ற மின்மையு, மவர் கரும்பு முத லாய வினியவன்றி வேம்புமுதலாய வினியவல்லாதன விரும்பி னுங் கொடுத்தலு, முத் தின்னவென வறியாமையா னதனை விரு ம்பாது கரும்பை விரும்பிய வுழவர்க் கக்கரும்போ டவ்வருமை யறியாமையா னவர் போகட விடுமாறு முத்தீதலுமெனக் குற்றமு முடைத்து.

பூக், தும்பி விரும்பினுந் தீயகள்ளை யளியாமலும், விரும்பா மையின் மிகநல்லவாயினு மணனை யளியாமலுந், தன்னிடத் திரு க்கு நல்லவற்று ளது நாடிய தேனொன்றே யளித்தலி னக்குற்ற மின்மையும், பசியளவிற் குறைதலாற் பிறிதொரு பூவினு மேற்கு மாறு கொடுக்குங் குற்றமு முடைத்து.

தீயபயத்தல் தீயினுக்கு மொத்த தன்மை யாதலின், அவ்வேதுவால் தீய வை தீயினு மஞ்சப்படுமென மிகுதிகூறல் கூடாமையின், அது பாடமன் மையறிக. இனித்தீயவே என்னும் பாடத்துக்குரைவருமாறு. தீய தீயவே பயத்தலான்-தீவினை நன்மை செய்யாதுதீமையே பயத்தலால், தீயவே- சினமும் பகையு மரசுமுதலாயின தீயோ டொப்ப அஞ்சப்படுதலிற் றீவி னையொன்றே, தீயினும் அஞ்சப்படும்-குமரகண்டமுதலாய சிலகொடுநோ ய்க்குச் சுட்டக்கால் நன்மையும் பயப்பதாகிய தீயினு மஞ்சப்படும். தீமை யே விளைத்து எஞ்ஞான்றும் நன்மை பயவாமையின், ஒரொருகாலத்து நன்மையும் பயப்பதாகிய தீயினும் தீவினை யஞ்சப்படுவதாயிற்று. இன் னும் இதன் விரிவெல்லாம் திருக்குறட் சண்முகவிருத்தியுட் காண்க.

§ திருக்குறள், கூகஅ.

துலாக்கோல், பிறரிடத்துஞ் செல்லாவண்ணங் கொள்வோர்க் கவருடன்பட்ட நிறையளவிற் குறையாது கொடுத்தலி னக்குற்ற மின்று.

இவ்வாற்று னாசிரியனது தன்மை பெறப்பட்டது.

இனி, யுரைப்பாட்டு,

" கைம்மாறு வேண்டாக் கடப்பா டுடைமையும்
வறியார்க் களிக்கும் வண்மையு மவர்தா
னெறியல நாடி னளியா தொழித்துக்
குறியல தாமுங் கொடுத்த லின்றி
யறநெறி வழாதவர் நாடின வளித்தலு
மிலனென்னு மெவ்வ முரையா வண்ணங்
கொள்ளு மளவிற் குறையா தளித்தலு
மாவகை நான்கு மளித்தனி னாற்
கின்றி யமையா தியையு மகத்தொழில்." [என்பது.]

அக்குடம் விளையாட்டுத் தொடக்கத்தி னளித்து முடிவின் மீண்டுந் தானளித்த கழலைப் பெறுதலிற் கைம்மாறு வேண்டலுஞ், சிறார்க்களித்தலின் வறியார்க் கீகையு முடைமையின் மலையின் மறுதலைத்தன்மைத்து.

அப்பனை, வறியார்க் களிப்பினுங் கள்ளாதலி னல்லா ரிரவாமையிற் றீயார்க் கீதலானு, மவர் நாடிய கள்ளொடு நாடாத புளிப்பையு மதனுட னியைத்துக் கொடுத்தலானு, நாடினு நல்லகொடாமையானு, நிலத்தின் மறுதலைத் தன்மைத்து.

அத்தெங்கு கள்ளை நாடினுங் காயினை நாடினுங் கொடாமற் பசிக்குப் பயன்படா மட்டையினைக் கொடுத்தலானு, மதனைப் பிறதெங்கினு மேற்குமாறு கொடாம லொருங்கே பன்னாட்கு வேண்டுவ கொடுத்தலானும், பூவின் மறுதலைத்தன்மைத்து.

அப்பருத்தி பஞ்சுவேண்டி னவர்வேண் டளவிற் குறையக் கொடுத்தலானுங், குறையக்கொடுப்பினுஞ் சொல்லப் பயன்படாமல் வெய்யிலிற் காய விட்டுக் ¶ கோல்லப் பயன்படலானுந், துலாக்கோலின் மறுதலைத்தன்மைத்து.

இவ்வாற்று னல்லாதானது தன்மை பெறப்பட்டது.

இனி யீவோனது புறத்தொழி லுரைக்கற்பாற்று. அது

¶ திருக்குறள், ௧0௭அ.

கோடல்பற்றியுங் கொள்வோர்ப்பற்றியு மிருவகைப்படும். அவ
ற்றுட் கோடல்பற்றிய புறத்தொழி லுரைக்கற்பாற்று.

அத்தொழில்,

* "இன்னசெய் தார்க்கு மினியவே செய்யாக்கா
லென்ன பயத்ததோ சால்பு"

என்றாராகலிற் பருவமுடையராகி விரும்பிற் பகைவராயினு
முடனளித்தலும்,

$ "தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க
தூங்காது செய்யும் வினை."

என்றாராகலிற் பேதைப் பருவ முடையாட்குக் காமச்சுவை
காட்டல் காமனுக்கு மொல்லாமையா னட்டாராயினும் பருவ மெ
ய்தளவுந் தாழ்த்தலும், பருவமுடையார் விரும்பினராயினும்,

¶ "நெடுநீர் மறவி மடிதுயி னான்குங்
கெடுநீரார் காமக் கலன்."

என்றாராகலி, னவை யவற்றையுடையராய்க் கல்விபோற்று
ராயி னக்கல்வி பயன்படாமையாற், பன்னாட் பழகினு மவர்க்கொ
ன்று மளியாமல்,

§ "பொறியின்மை யார்க்கும் பழியன் றறிவறிந்
தாள்வினை யின்மை பழி."

என்றாராகலிற், பருவமுடையராகி யவ்வாறு முயல்வார்க்கே
யவர் பன்னாட் பழக்கமிலராயினு மெல்லா மளித்தலு, மவ்வாறுமுய
லினும்,

‡ "வெண்மை யெனப்படுவ தியாதெனி னொண்மை
யுடையம்யா மென்னுஞ் செருக்கு"

என்றாராகலி, னச்செருக் குளதேற் பயனெய்தாமையி
னச்செருக்காற் பணியாதா ரண்மையி னிருப்பினு மளியாமல்,

"உடையார்மு னில்லார்போ லேக்கற்றுங் கற்றார்
கடையரே கல்லா தவர்."

என்றாராகலி, னவ்வாறு செருக்குமானமுமின்றிப் பணிவு
டையார் சேய்த்துளராயினு மளித்தலுமென நான்கு.

அவற்றுண்மலே, தன்னை யுளிகொண்டு பேர்க்கும் பகைவரா

* திருக்குறள் கஅள. $ ஷை கஎ௨. ¶ ஷை கூ௰௩.
§ ஷை சுகஅ. ‡ ஷை அசச. ● ஷை கூகரு

யினு மவர் நீர்வேட்கையுற்று விரும்பி னுடனளித்தலு; மவ்வே ட்கை யின்றித் தன்மருங்குறி னவர்க்கு மளிக்கும் குற்றமுமுடை த்து.

நிலன், றன்மருங் கெய்தினும் வேட்கையுற் றுழாதார்க் களி யாமையி னக்குற்ற மின்மையும், போற்றுதலின்றிக் கள்வர்முத லாயினர் கொள்ள விடுப்பார்க்கு மளிக்கும் குற்றமு முடைத்து.

பூக், தவளைமுதலாயின தன்னைப் பன்னா ளடுத்திருப்பினு மவை தேனைப் போற்றுவென வளியாம, லொருநாளே வரினுந் தேனைப் போற்றி யுண்ணுந் தும்பிக்கே யளித்தலி னக்குற்ற மி ன்மையு, மத்தும்பி தன்னடி பணியாது தன்முடிமே லதன்கால் வைத்த லறிந்து மளித்தலிற் செருக்குடையார்க் களிக்கும் குற் றமு முடைத்து.

துலாக்கோ லெண்மையராயினுந் தன்னடியினைத் தீண்டார்க் களியாமற், சேய்மையினின்று போந்தோராயினும் விலையளித்துத் தன்னடியினைத்தொட் டேற்றார்க் களித்தலி னக்குற்ற மின்று.

இவ்வாற்று ளாசிரியனது தன்மை பெறப்பட்டது.

இனி யுரைப்பாட்டு,

"பகைவ ராயினுந் தகைபெறு பருவந்
திடனுறக் கொள்ளி னுடனவர்க் களித்தலு
நட்டா ராயினும் பெட்புறு பருவ
முற்றில ராயின் வற்புறத் தாமையுஞ்
செயிரறப் பழகினு முயிரெனப் போற்றார்க்குச்
சின்னப் பொருளு முன்னிக் கொடாம
லொருநாள் வரினு மறவா தார்க்கும்
பெரிய பொருளும் வரிசையி னளித்தலுந்
தன்னடி பணியார் மன்னவ ராயினு
மன்னவர்க் களியா தின்னன்மிக் குடைய
வறிய ராயினு முறுபணி விரும்பி
னெறியி னவர்தா முறவளித் தலுமென்
வாவகை நான்குந் தாவிலா சாற்குக்
கோடல் பற்றிக் குறிக்கும் புறத்தொழில்." [என்பது.]

அக்குடந் தன்னை நட்ட சிறார்க்கன்றி யவர்க்குப் பகையா யினர் விளையாடற் பருவ முடையராகி விரும்பினுங் கொடாமை யானு, மவர்க்கு நட்பாயினர் தன்மருங் கெய்தினும் விரும்பாவு

ழிக் கொடாமையானு, மலையின் மறுதலைத் தன்மைத்து.

அப்பனை, கள்ளுண்ணும் வேட்கை யின்றி விலைப்பொருட் டுக் கொள்வார்க்கு மளிக்குங் குற்றமும், பெற்றபி னிழத்த லின் றிப் போற்றுவார்க்கே யளிக்குங் குணமு முடைமையி னிலத்தின் மறுதலைத் தன்மைத்து.

அத்தெங்கு, மட்டையினைத் தம்மகத்துட் கொண்டு போற் றுதார்க்கு மளிக்குங் குற்றமு, மதனைத் தன்னடிக்கீ ழெய்தினோர் க்குந் தன்னடித்தொட் டேறினோர்க்கு மன்றிப் பிறர்க்களியாக் குணமு முடைமையிற் பூவின் மறுதலைத் தன்மைத்து.

அப்பருத்தி, தனக்குள்ளிருக்குமபொருளைத் தன்னடியாகிய காம்பினைத் தொட்டுப் பறித்தகாலை யளியாது, தன்றலை தகர்த்த பின்னரே கொடுத்தலிற் றுலாக்கோலின் மறுதலைத் தன்மைத்து.

இவ்வாற்ற னல்லாதானது தன்மை பெறப்பட்டது.

இனிக் கொள்வோர்ப்பற்றியபுறத்தொழி லுரைக்கற்பாற்று.

அத்தொழி, லாசிரியன் மாணுக்கனிடத்துச் சென்று கற்பி த்தா லவன்விருப்பத் தளவுகாண்ட லரிதாகலி னவனைத் தன்னிட த்து வருத்தலு, மவனை மயங்கச் செய்யாது கற்பித்தலு, மவ னப்பொருளைத் தன்மருங்கிருந்து சிந்திக்கச் செயலு, மவனோ டவ்வினையாள ரேனோரு முடனிருந்து பயிலச்செயலுமென நா ன்கு.

அவற்றுண் மலை, கொள்வோரிடத்துச் செல்லாம லவரைத் தன்னிடத்து வருத்தலு, மவர் பன்முறை செலவினு நெறிமயங் கச் செயலு முடைத்து.

நில னெறிமயங்கா தளிததலு, மளித்தபொருளை யாங்கிருந் துண்ணச்செய்யாது மனையி னுய்ப்பச் செயலு முடைத்து.

பூத்தும்பிக்குத் தேனளிக்குமிடத்துத் தன்மருங்கிருந் துண் ணச் செயலி னக்குற்ற மின்மையுந், தேன்கொள்வனவாகிய பல தும்பியைத் தன்மருங்கிருத்தாக் குற்றமு முடைத்து.

துலாக்கோல், கொள்வோர்பலரைத் தன்மருங் கிருத்தலி னக்குற்றமின்று.

இவ்வாற்ற னாசிரியனது தன்மை பெறப்பட்டது.

இனி யுரைப்பாட்டு,

கொள்வோன் மருங்கிற் றூன்செல் லாம
லீவோ னவனைத் தன்மருங் குய்த்தலு
மவன்மயங் காம லரும்பொரு ளளித்தலுங்
கேட்டன நெஞ்ச நாட்டி யுசாவத்
தன்பா லவனை யன்பால் வைத்தலு
மவனுட னவ்வினை யாளர் பிறரும்
பயில்வகை யாங்கே செயலு மென்ன
வாவகை நான்குந் தாவிலா சாற்குக்
கொள்வோர்ப் பற்றிக் குறிக்கும் புறத்தொழில். [என்பது

அக் கடங் கொள்வோரிடத்துத் தான்செல்லுங் குற்றமு, நெறிமயங்கச் செய்யாதளித்தலு முடைத்து. அப்பனை யறிவு மயங்குமா றளித்தலு, மளித்தகள்ளினைத் தன்மருங்கிருநது முண்ணச் செயலுமுடைத்து. அத்தெங்கு தானளித்த மட்டையினை யாங்கிருந்தே பயன்படுத்தற் கேலாமையும், பலரைத் தன்மருங்கிருத்தலு முடைத்து. அப்பருத்தி பலரைத்தன் மருங்கேலாமையுடைத்து.

இவ்வாற்றா னல்லாதானதுதன்மை பெறப்பட்டது.

இனி யீவோன துரைத்தொழி லுரைக்கற் பாற்று.

அத்தொழி, லூலது நுண்பொருளைக் கொள்வோன் பின்னரினிதுணருமாறு கருதி யீவோன் பாயிரமுதலாயவற்றின் றன்மையைப் பருப்பொருட்டாக முன்னர்க் கூறுதல் பற்றிப், பொதுப்பாயிரத் தன்மை யுரைத்தலுஞ், சிறப்புப்பாயிரத் தனமையுரைத்தலு, நூல்வகையுரைத்தலு, நூல துறுப்பின்வகை யுரைதத லுஞ்,சூத்திரத்தின் கிடக்கை வகையுரைத்தலுஞ், சூத்திரத்தின் பயன்வகை யுரைத்தலுமென வறுவகைப்படும.

அவற்றுட் பொதுப்பாயிரவகை யுரைத்தலுரைக்கற்பாற்று.

அவ்வகை யீவொன்றன்மை முதலாக முன்னர்க்கூறிய நான்கு.

அவற்றுண் மலை, பொருள் கொள்வார் தன்மருங் கடைதற்கு முன்னரே பல்வகைப்பொருளுந் பாற்பட நிரம்பிய பான்மை காட்டலி, னீவோன்றன்மையு மிவ்வாறுமெனப் பருப்பொருட் டாக வதனை யுணர்த்துத லுடைத்து.

நில, னுழவர் வித்திட்டபின் முளையு நாற்றும் பிளுங் கதிரு

செல்லும் பிறவு மொன்றன்பி னென்றாகக் காரணகாரிய முறை
யானே காட்டலின், னீதலியல்பு மிவ்வாறுமென வதனை யுணர்த்த
லுடைத்து.

பூத் தன்னைப் பெற்று வளர்த்துத் தாங்கி யாதரித்துச் சொல்
லற்கரிய பெருநன்றி செய்த முதற்பொருளாகிய கொடிமுதலாய
வற்றுக்குந், தன்னோடு வேற்றுமை யின்றிப் பின்னிப் பழகிய
வேனைய கொடிமுதலாயவற்றுக்குந், தேனுண்ணு மியல்பின்மை
யா னந்நன்றியு நட்புங் காரணமாகத் தேனளியாமற், றனக்கொ
ரு நன்றியுஞ் செய்யாமலு முன்னர்ப் பரிசய மொன்று மில்லாம
லும் புதிதாகச் சேணின்று தன்னை யடைந்த தும்பிக் குண்ணு
மியல்பிருத்தலி னதுபற்றி யதனை யளித்தலிற், கொள்வோன்றன்
மையு மிவ்வாறுமென வதனை யுணர்த்த லுடைத்து.

துலாக்கோல், தன்மருங்குள்ள பொருளை யொருவன் பெறு
தற் கெண்ணிற் றானிருக்குமிடத் தவன்வந்து, வேண்டுப்பொரு
ளிதுவெனச் சொல்லி, யப்பொருட் குரிய விலைகாட்டித், தன்னு
டன்பாடு பெற்றபின்ன ரப்பொருளை யவன்பெறுமாறு கொடுத்த
லிற், கோடன்மரபு மிவ்வாறுமென வதனை யுணர்த்த லுடைத்து.

இவ்வாற்றா னாசிரியன் பொதுப்பாயிரத் தன்மை யுரைக்கு
மாறு பெறப்பட்டது.

அக்குடஞ், சிறார்தன்னை யடைதற்கு முன்னர்த் தானொன்று
மின்றெனக் காட்ட லுடைத்து. அப்பனை, தானளிக்குங் கள்ளி
னைக் காரணகாரிய முறையாற் காட்ட லின்று. அத்தெங், குண்
ணு மியல்புடையார்க் குண்ணத்தகாப் பொருளாகிய வோலையினை
யு, முண்ணுமியல் பில்லாத தன்பராரைக்குத் தான்பெற்றவுண்ணு
மியல்புடைய மழைநீரையு மளித்த லுடைத்து. அப்பருத்தி,
தனக்குள்ளிருக்கும் பொருளைத் தன்னுடன்பாடு பெறாமற் கொ
ள்ளக் கொடுக்கு மியல்புடைத்து.

இவ்வாற்றா னல்லாதான் பருப்பொருளு மறியானாகலிற்,
பாயிரங் கூறுமிடத்தும் பிறழ வுரைப்பானென்பது பெறப்பட்
டது.

இனிச் சிறப்புப்பாயிரவகை யுரைத்த லுரைக்கற்பாற்று.

அவ்வகை யாக்கியோன் பெயர் முதலாக முன்னர்க்கூறிய
வெட்டு.

அவற்றுண் மலை, தன்கட்பொருளைப் பிறர் வித்திடாமற் றானே படைத்தலிற் றன்னியல்பையும், வித்தொன்று மின்றி வழி தாய நிலத்துப் புதிதாகப் படைத்த லில்லாது முன்னர் வழிவழியாகத் தொன்றுதொட்டுவந்த வித்தினைக் கொண்டே படைத்தலிற் றான்படைத்த பொருட்காரணத்தையுங் காட்டலி, னாக்கியோன் பெயரும் வழியு மிவ்வாறுமென வவற்றை யுணர்த்த லுடைத்து.

நிலன், றன்னிடத்துள்ள பொருளுக்கு நாற்பக்கத்தும் வரம்பாகிய வெல்லை காட்டலு, மவ்வரம்பினுட் பட்ட பொருளை யிதுநெல் லதுகரும் புதுவாழையென வேறுவேறு பெயர்குறித்துக் காட்டலு முடைமையி, னெல்லையு நூற்பெயரு மிவ்வாறுமென வவற்றை யுணர்த்த லுடைத்து.

பூத், தன்முதற்பொரு ளாகிய கொடிமுதலாயவற்றின் வேர்முத லுனிவரைப் பரவியிருந்த சாரத்தைத் தேனெனத் தன்காம்பின்கட் டொகுத்துக் காட்டலும், பிண்டமாகிய தன்னை யரும்பெனவு நாளரும்பெனவு மலரெனவுங் காரணகாரிய முறையான் விரித்துக் காட்டலுங், காரணகாரிய முறை யின்றி யினபற்றி மகரந்தங்களை யோரிடத்துத் தொகுத்து யோரிடத் தொன்று பட்டிருந்த விதழ்களைப் பலவிடத்துப் பிரியுமாறு விரித்துங் காட்டலுந், தன்னைத் தன்னிடமாகிய கொடிமுதலாயவற்றினின்று பறித்துப் பெயர்த்து நாராற் கட்டிக் கூந்தன்முதலாய பிறிடத்து வைப்பினும் பூவென்னுந் தன்பொருண்மை கெடாமையு முடைமையிற், றொகுத்தலும் விரித்தலுந் தொகைவிரியு மொழிபெயர்த் ததாப்பட யாத்தலுமென யாப்பின்வகை யிவ்வாறுமென்பதூஉ, முன்னுமுன்னர்த் துய்ப்பிக்குந் தேனுளதென்றுஞ் சூடுமுன்னர் மக்கட்கு மணமுளதென்றுந் தன்னிடத்துக் காட்டலி னானுதலியபொருளென்ப திவ்வாறு மென்பதூஉ முணர்த்த லுடைத்து.

துலாக்கோல், தானிறுத்த பொருளை யொப்பத் தக்கதோ வொப்பத்தகாததோவென வதனை யாராய்வானொரு காரணிகற்குக் காட்டிய பின்னரோ யதனைத் தன்னினின்று வெளிப்படுத்தலி, னூலைக் கேட்டுக் குற்றமின்மை யாராயுங் காரணிகரின்னராமெனக் காட்டல்வேண்டுமென்பதூஉ, மப்பொரு ளளித்த தனக்குப்பய னதற்குரியவிலைப்பொரு ளெனவு, மப்பொருள் பெற்றார்க்

குப் பயன் பசியு நோயுந் தீர்தலும் பிறவுமாமெனவு முன்னமே காட்டலி, னாக்கியோனுக்குப்பய னறம்பொருளின்பமும் புகழும் பிறிதுமாமென்பதூஉ, மதனைக் கற்றானுக்குப்பய னிம்மைமறு மைத்துன்ப நீங்கலும் பிறவுமா மென்பதூஉ முணர்த்த லுடைத்து.

இவ்வாற்றான் மாணாக்கனுக்குப் பருப்பொருட்டாகச் சிறப் புப்பாயிரவகையை யாசிரிய னுரைக்குமாறு பெறப்பட்டது.

அக்குடங், தன்கணுள்ள கழலையாக்கியகொடி யின்னதென் றுணர்த்தாமற் பெய்தற் காரணம்பற்றி யதனை யாக்கியோன் றன் பாற் பெய்த சிறுவனென் றேனைச் சிறார்க் குணர்த்துதலு, மக்கழ லிக்காரணத்தா னின்னவிடத் தின்னராற் பறிக்கப்பட்டதெனக் காரணங்காட்டாமையு முடைத்து.

அப்பனை, தான்கொடுக்குங் கள்ளினுக் கெல்லை வெளிப்ப டக் காட்டாமற் கோய்வாயிற் காட்டலி, னாசிரியனல்லாதான் சொல்லும் பொருட்கெல்லையும் வெளிப்படக் காணலின்றிச் சிற் சில கீழோர்வாயின் மறைந்து காணப்படுமென்பதூஉ, மெஞ்ஞா ன்று கொடுப்பினுந் தீங்குபயக்குங் கள்ளன்றிப் பிறிதொன்று கொடாமையானும், பெயர்கேட்ட மாத்திரையாற் பிறர் தீதென் றுணராவண்ணந் தன்னியற்பெயரை மறைத்துத் தேனென்று மதுவென்று நற்பொருட்கு மேற்கு பிறபெயருங் கோடலானு, மல்லாதா னுரைக்கு நூற்பெயரும் வாதமாயிரம் வைத்தியமேழா யிரம் வேதகாவியம் விஞ்ஞான பூரண மென்றாற்போலும் யாதானு மொரு பெயர்பெறு மென்பதூஉ முணர்த்த லுடைத்து,

அத்தெங்கு தன்னிரதத்தைத் கள்ளாகத் தொகுத்துக் காட் டாமையும், பயன்படு பாளையை விரித்துக் காட்டாமையும், பயன் படாத மட்டையினை யினம்பற்றி யோரிடத்துத் தொகுத்தும் வீடு வேய்தற்குச் சட்டமாகப் பயன்படலிற் பராரையைப் பல்பகுப் பாக விரித்துங் காட்டாமையுந், தன்னைப்பறித்து வேறிடத் துய்த் தவழிக் கூர்தற்றாழை யென்னுந் தன்பொருண்மை சுட்டாமையு முடைமையின், யாப்பின்வகை யுணர்த்தாமையொடு காய்த்தலின் மையி னுதலியபொரு ளுணர்த்தாமையு முடைத்து.

அப்பருத்தி, பஞ்சாகிய வெளிற்றுப் பொருளைப் பிறரறியா மன் மறைத்தலிற் கேட்போரையு, மப்பொருளுடைய தனக்குக்

கேடன்றிக் கிடைப்பதொன் றின்மையானுஞ் சிறார் கல்வியிழத்த லானுங் பயனையுங் காட்ட லின்று.

இவ்வாற்றா னல்லாதான், சிறப்புப்பாயிரத்தின் பருப்பொரு ளு மறியாமையி னதுகூறுமிடத்தும் பிறழ வுரைப்பனென்பது பெறப்பட்டது.

இனி நூலென்ற சொற்குப் பொருளுரைத்த பின்றை யதன் வகை யுரைக்கப்படும்.

" இனி நூலென்ற சொற்குப் பொருள் யாதோவெனி, னூ ல்போறலி னூலென்ப; பாவைபோல்வாளைப் பாவையென்றது போல; என்னை ? நுண்ணிய பலவாய பஞ்சி னுனிகளாற் கைவன் மகடூஉத் தனது செயற்கைநலந் தோன்ற வோரிழைப்படுத்தலா முலகத்து நா னூற்ற லென்பது; அவ்வாறே சுகிர்ந்து பரந்த சொ ற்பரவைகளாற் பெரும்புலவன் றனதுணர்வு மாட்சியிற் பிண்டம் படல மோத்துச் சூத்திரமென்னும் யாப்புநடைபடக் கோத்து நூற்கப்படலி னென்பது. இனி யொருசாரார் நூல்போலச் செ ப்பஞ்செய்தலி னூலென்ப. இனித் தந்திரமென்னும் வடமொ ழிப் பொருளை நூலென வழங்குதல் தமிழ்வழக்கெனக் கொள்க. இது நூலென்ற சொற்குப் பொருள்" எனக் களவிய லுரையிற் கூறுமாற்றா னறியப்படும். நூலென்னு முதனிலைத் தொழிற்பெ யர் நூற்கப்படுவதாகிய செயப்படுபொருளை யுணர்த்தலி னது தொழிலாகு பெயர். நூல்போலச் செப்பஞ்செய்தலென்னும் பொருளி லுவமத்தின்பெயர் பொருளுக்காயிற்றெனக் கொள்க.

இனி யந்நூ லிருவகைய; முதனூலும் வழிநூலுமென. அவ ற்றுண் முதனூலு மிருவகைய; இயற்கைமுதனூலுஞ் செயற்கை முதனூலுமென.

அவற்று ளியற்கைமுதனூ லாவது,

* " வினையி னீங்கி விளங்கிய வறிவின்
முனைவன் கண்டது முதனூ லாகும்." எனவும்

$ " வரம்பி லறிவன் பயந்த தாகும்."

---

* தொல், பொருள், சசுல. $ களவியல்கக-வது பக்கம்.

எனவுங் கூறினாராகலின், னம்முனைவனாற் காணப்பட்டதாய்த் தனக்கொரு காரணமின்றித் தானே பிறநூற்குக் காரணமாகிய நூலாம். அதனாலது தனக்கொரு முதனூலையு மிணைநூலையு மின்றித் தனக்குத் தானே யிணையாய நூலெனப்படும். அது, வினையி னீங்கி விளங்கிய வறிவின் முனைவனுதிபிற் கண்டனவாகிய மாகேச்சுரசூத்திரமும் வேதாகமங்களு முதலாய வாரியமுதனூல்களு, மிசைநுணுக்கமுங் களவியலு முதலாய தமிழ் முதனூல்களும் போல்வது.

இனி யாதியின் முனைவன் றமருகத்தினின்று பதினான்கொலி தோன்றின. அவ்வொலியே மாகேச்சுரசூத்திர மெனப்படும். அவற்றுண் முதலொலி, அ இ உணு, என்பது. ஏனையவு மது போல்வன. அப்பதினான்குசூத்திரத்தையு முதனூலாகக் கொண்டு பிருகற்பதி யொருநூல் செய்தான். அதன்வழித்தாக விந்திரனைந் திரமெனும் பெயரிய நூல் செய்தான். இவ்வாறே பின்னுஞ் சில தோன்றின. அவையெல்லாங் கலியுகவாரம்பத் தழியவே யம்முனைவனருள்பெற் றம்மாகேச்சுரசூத்திரத்தின் வழித்தாக விற்றைக்கு நாலாயிரத்தியாண்டின்முன்பு காசுமிரதேயத்தரசன் காநிட்கன்காலத்திற் பாணினி தன்பெயரா னொருநூல்செய் தரங் கேற்றினன். அதுவே யிக்காலத்துள்ள வாரியவியாக்ரணம். அதற்கு வாருசியும் பதஞ்சலியு முரைசெய்தனர். பதஞ்சலியுரைக்குப் பாடியமெனப் பெயர். பாடியஞ்செய்தவாசிரியனும் வியாக்கிரபாத முனிவனோ டொருங்கெண்ணப்படும் பதஞ்சலியும் வேறுவர்.

இனி, முனைவன் றமருகத்தினின் றாரியத்திற்கு முதனூலாக மாகேச்சுரசூத்திரந் தோன்றினாற்போல வக்காலத்திற்றானே யவனது வாயினின்று தமிழிற்கு முதனூலாக முப்பத்துமூன்றுசொற் கடோன்றின. அவை நான்குசூத்திரமாகப் பகுக்கப்பட்டன. அவை நுணுகியாராய்ந்தவழி யியலிசைநாடகமெனு முத்தமிழில க்கணமு முப்பொருளு முற்றத்தோன்று மியல்பினவாதலி னச்சூத்திரங்கட் கிசைநுணுக்கமெனப்பெயர்வழங்கிற்று. இசையென்பது சொல். அதுவே தமிழிற் கியற்கைமுதனூலெனப்படும். அந்நூலின்கணுள்ள நான்குசூத்திரங்களுண்முதற்சூத்திரத்திற்கு, மெய்யறிவினராகிய வகத்தியன்முதலாயினா ருள்ளத்தின் விளங்கு முனைவனே யொன்றுமறியாக் கடையாயாருள்ளு மிறப்பக்கடைப்பட்

டேனுகிய வென்னுள்ளத்துங் கோயில்கொண் டெழுந்தருளி யிற்றிருப்பானென்பது தொன்மறைத் துணிவாதலின், அவ னென்னுள்ளத்துநின் றுணர்த்தியவளவி னியற்றமிழ்ப்பகுதியுட் பெரும்பாலன விளங்குமா றொருரையெழுதி யிசைநுணுக்கச்சிற்றுரையெனப் பெயர்தந்தேன். தவமுற்றவுடைய வாசிரிய னகத்தியன்முதலாயினோர்க் கன்றி யவமுற்றவுடைய கடையேற்கு முற்றவுணர்த்த லம்முனிவற்கு மருமையின், யானிசைநுணுக்கத் தறிந்த பொருள் கடலு ளலையெறிந்த நீர்த்துளிபோலு மாகலாற் சிற்றுரையெனப் பட்டது. அவ்வுரை யினம்பற்றி யியற்றமிழ்கூறு மிந்நூலுரையுட னிறுதியிற்சேர்க்கப்படும். இசைநுணுக்கமென்னும் பெயரான் முத்தமிழு ளிசைத்தமிழே கூறுவதாகிய நூலுமொன்றுண்டு. அது சிகண்டியாசிரியனாற் சாரகுமாரன்பொருட்டுச்செய்த விடைச்சங்கத்து வழிநூல்.

இனிச் செயற்கைமுதனூலாவது, தானே தலைவனாகிய வம்முனிவனை வழிபட்டுத் தலைவராயினா ரவனருளா லவன்கண்ட வியற்கைமுதனூலின் வழித்தாகப் பிண்டம் படல மோத்துச் சூத்திரமெனச் செயற்கைநலந்தோன்றச் செய்த நூலாம்.

அத்தலைவ ரமரமுனிவராகிய வகத்தியனுநாரதனு மேனைய முனிவராகிய மார்க்கண்டேயனும் வான்மீகியு முதலாகப்பலர்.

அவருட் கலசயோனியாகிய வாசிரியனகத்தியன் முனிவனாகிய திரிபுரமெரித்த விரிசடைக்கடவுளிடத்துத் தமிழி னியற்கைமுதனூ லுணர்ந்து பின்ன ரதன்பொருளைக் குன்றெறிந்த முருகவேளிடத்துக் கேட்டுத் தெளிந்து முத்தமி ழிலக்கணமு முப்பொருளு மாதியின்முற்றக் கூறினனாகலி னவனருளிச்செய்த சிற்றகத்தியம்பேரகத்தியமென்னு மிருநூலுந் தமிழிற்குச் செயற்கைமுதனூ லாயின. நாரதன்முதலியோரு மம்முனிவனை வழிபட்டுத் தலைவராயினாராகலி னவர்பிறிதொரு செயற்கைநூலின் வழித்தாக நூல்செய்யா ராகலானு, நாரத னிசைத்தமிழொன்றே முற்றக்கூறினனெனவு மேனையோ ரொருதமிழாயினு முற்றக்கூறாது சிற்சில பகுதியே கூறினரெனவும் பிறநூல்களானறியப்படலானு, மவ்வாசிரியர் செய்த நூலெல்லா மகத்தியத்துக் கிணையாகிய செயற்கை முதனூலெனப்படும்,

இவ்வாற்றாற் செயற்கைமுதனூலெல்லா முனைவன்கண்ட வியற்கைமுதனூலின் வழியவே யாதலி னவற்றுண் முடிந்தநூலுக் கேனைய வினைநூலாயின. இனி,

* "தந்திரஞ் சூத்திரம் விருத்திமூன் றற்கு
முந்துநூ லில்லது முதனூ லாகும்."

எனவுங் கூறினாராகலி னியற்கைமுதனூ, றந்திர முதலாய வகை காணப்படாப் பிண்டமாதலிற் செயற்கைநலந் தோன்றாமை யானுஞ், செயற்கைமுதனூ லெல்லாம் பிறிதொரு செயற்கைநூ லின் வழியவாகாமன் முனைவனை வழிபட்டுத் தலைவராயினாராற் செயற்கைநலந் தோன்றச் செய்யப்பட்டமையானு, மவை யியற் கைநூலின் வழியவாயினுந் தந்திரஞ்சூத்திரம்விருத்தியென்னும் வேறுபாட்டான் முதன்மையவாகலின் முதனூலெனப்பட்டன.

இனித் தானே தலைவனாகிய முனைவனாற் செயற்கைநலந் தோன்றச் செய்யப்பட்ட நூலுமுள. அவை யாலவாய்ப் பெரு மானடிகள் செய்த களவியல் போல்வன. களவிய லகத்தியமுந் தொல்காப்பியமு முதலாய நூல்பல தோன்றிய பிற்காலத்துச் செய்யப்படினு மியற்கைநூலின் வழித்தாகவாயினுஞ் செயற்கை நூலின் வழித்தாகவாயினுஞ் செய்யாமையின் முனைவன்கண்ட முதனூலெனவே சான்றோராற் கொள்ளப்பட்டது.

இனி முத்தமிழகத்திய முதனூலாசிரியனை யமரமுனிவ னென்றதென்னையெனின்,

* " துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
திறந்தாரை யெண்ணிக்கொண் டற்று."

என்றாராகலி, னவன் † பொருள்சேர் புகழ்த்துணை கூறல் புத் தேனாட்டுப் புலவர்க்கு மரிதாகலி னாலா னறிந்தவற்றுட் சில கூறுதும்.

ஆசிரியனகத்தியற்குக் குடத்தி னுற்பவமாயகாரணத்தாற் கும்பமுனி கும்பசம்பவன் முதலாய பெயர் வழங்கின. பிறகாரண ங்களாற் குறுமுனி தமிழ்முனி முதலாய பிறபெயரும் வழங்கும். அவனேதேவவிருடிகளுட் சிறந்தானெனப்புராணங்கூறும். அவன்

---

* களவியல், கக-வது பக்கம். * திருக்குறள், உ௨. † ஷை ஞ.

புகழ் கூறுத புராணமு மில்லை; இதிகாசமு மில்லை; தேவரு மில்லை: முனிவரு மில்லை. நிலவுலகத் தரசனொருவ னிந்திரபதம் பெறி னதனைத் தேவர்க ளறிதற்பொருட் டகத்தியன்முதலாய விருடிகளெழுவ ரொருநா ளவன்சிவிகை சுமத்தல் வழக்கு. ஆதி யூழியி லொருகாலத்துப் புரூரவச்சக்கிரவர்த்திபேரனு மாயுவின் மகனும் யயாதியின்றந்தையுமாகிய நகுடன் றுரங்கவேள்வி நூ றுமுடித் திந்திரபதம் பெற்றுச் செல்லுழிச், சிவிகைதாங்கிச் செ ன்ற முனிவரரைச் செருக்கான் மதியாளுகி விரைந்துசெல்லுக வென் றேவுவான் சர்ப்பசர்ப்பவெனக் கூற, வவனை யம்முனிவரரு ளகத்தியனே யிந்திரபதத்தினின்று மிழிந்து பூமியிற் சர்ப்பமாகு மாறு சபித்தான். பின்னொருகாலத்தில் வேதத்திற் கூறு மசமெ ன்பது யாடெனப் பிறரெல்லாங் கூற, வுயிர்க்கொலை புரிந்து வேட் டல் கூடாதென மறுத்து, வேதங்கூறியசொற்கு மூவாட்டை நெ ல்லையாமெனப் பொருளுரைத், தவ்வாறே பன்னீரியாண்டு பொ தியிலின்க ணிருந்து வேள்விசெய், திந்திரன்முதலாயதேவ ரவி யேலாராகி மழைவளந்தடுப்பத், தன்றவவலியாற் பல்வளனும் படைத்து, நான்முகப்புத்தேண்முதலாய மூவர்க்கும் வித்தினைக் கொண்டவியளித், தேலாதாரை வெகுண்டு சபித்தற் கெண்ண, வஃதறிந் தவரஞ்சி யெதிர்வந்து வரங்கிடப்ப, வுயிர்க்கொலை வேள்வி புலைவினையாகா வறவினையே யாயினுங் கடையாயவேள்வி யென்று மல்லாதவேள்வியே யுத்தமவேள்வியென்றுங் கூறித் தே வர்க்குவரமளித்த வருந்தவக்கொள்கை யுடையானு மகத்தியனே. இவ்வாறு வேதவியாச னிதிகாசமு மைந்தாம்வேதமுமாகிய பார தத்துட் கூறினன்.

இன்னும் வியாசன் காந்தமுதலாய புராணத்துண், முனிவர் களை வஞ்சனையாற் கோறலை தொழிலாகக் கொண்ட வாதாபி யில்வலனென்னு மசுரரிருவரைத் தனது தவமகிமையா லழித்த னனென்றுந், தேவர்கள்பொருட்டுக் கடனீரை யாசமனஞ்செ ய்து வற்றச்செய்தனனென்று, மொருகாலத்துத் தேவரு முனி வரு மேருவிற்கூடியபோழ்து மேருத்தாழ்ந்து தெற்குயரவே யத னைச் சமன்செயற்பொருட்டுத் தேவர்கள்வேண்ட வகத்தியனே தென்றிசைப்போந்து சமஞ்செய்தானென்றும் பிறவுங் கூறினன். தென்றிசையைச் சமஞ்செய்தானென்னுஞ் சரித்திரத்தா லெல்

லாத்தேவரு மெல்லாமுனிவரு மொருங்குகூடியவழி யகத்தியற்
கிணையாதலன்றி யெத்தேவராயினு மெம்முனிவராயினு மவற்
கிணையாகாரென்பது போதரும். தென்றிசைப்போந்தபின்னரே
யப்பெரியோன் றமிழ்முதனூ லியற்றியதுந் தென்மதுரையிற் றலை
ச்சங்க மிருந்ததும் பொதியிலைத் தனக்காச்சிரமமாகக் கொண்ட
மையு மாயின.

இனி யாரியமொழியுண் முதற்கவியென்றுபலராலும் புகழ
ப்பட்ட விருடியாகிய வான்மீகி தானியற்றிய விதிகாசமாகிய விரா
மாயணத்து "ஏகத்திய இதி விக்யாதோ லோகே சுவேனைவ கர்
மணா" எனத்தொடங்கிக் குடிலமாகிய அகத்தைப் போக்கின
காரணத்தாலகத்தியனென்னும் பெயரிய முனிவரனை யிராமனவ
னாச்சிரமத்திற் சென்று தரிசித் தருள்பெற்றுப்போயினனெனக்
கூறுதலானும், பரசுராம னரசர்குலத்தை யழித்து வந்தனனெ
ன்று மிராமற்குத் தோற்றபின்ன ரவன் சினமொழிந்து தவத்திற்
புக்கானென்றுங் கூறுதலானும், கடைச்சங்கத்து நல்லிசைப்புல
வரு ளொருவராகிய கூலவாணிகன் சாத்தனார் மணிமேகலைக்கண்,

* "செங்கதிர்ச் செல்வன் றிருக்குலம் விளக்குங்
கஞ்ச வேட்கையிற் காந்தமன் வேண்ட
வமர முனிவ னகத்தியன் றனாது
கரகங் கவிழ்த்த காவிரிப் பாவை." எனவும்,

‡ "ஓங்குயர் மலயத் தருந்தவ னுரைப்பத்
தூங்கெயி லெறிந்த தொடித்தோட் செம்பியன்." எனவும்,

† "மன்மருங் கறுத்த மழுவா ணெடியோன்
றன்முன் றோன்ற றகாதொழி நீயெனக்
கன்னி யேவலிற் காந்த மன்னவ
னிந்நகர் காப்போர் யாரென நினைஇ
நாவலந் தண்பொழி னண்ணார் நடுக்குறக்
காவற் கணிகை தனக்காங் காதல
னிகழ்ந்தோர் காயினு மெஞ்சுத லில்லோன்
ககந்த னாமெனக் காதலிற் கூஉ
யரசா ளுரிமை நின்பா லின்மையிற்
பரசு ராமனின் பால்வந் தணுகா
னமர முனிவ னகத்தியன் றனாது
துயர்நீங்கு கிளவியின் யான்றோன் றளவுங்
ககந்தன் காத்தல்."

* பதிகம் கூ-வது அடி. ‡ விழாவறைகாதை கூ-௪ து அடி.
† சிறைசெய்காதை உகு-வது அடி.

எனவுங் கூறுதலானும், பரசுராமன் றவவலியாற் கார்த்தவீ ரியன் முதலாகப் பலதலைமுறை யரசர்குலத்தை வேரறுத்து வந் தானென்பதூஉ, மிராமன்காலத்தி லவனுக்குத் தோற்றுப் பின் னர்ப் போரொழிந்தானென்பதூஉங், காவிரிப்பூம்பட்டினத்தர சன் காந்தனென்பானொடு பரசுராமன் போர்குறித்துவரச் சயமக ளாகிய கன்னி யவ்வரசன்முன்பு தோன்றி, நீமழுவோனொடு போர்செய்யாமன் மறைதியென் றேவினளென்பதூஉ,மவனச்சொ ற்படி தன்னகரைக்காக்குமாறு ககந்தனைவைத்துப் பின்ன ரகத் தியன்பா லவனருள்பெற் றுய்யுமாறு சென்றனனென்பதூஉ, மவ்வரசன்பொருட்டே யகத்தியன் கரகங் கவிழ்த்துக் காவிரி யை யளித்தானென்பதூஉம் பிறவும் பெறப்படலி, னிராம னில ங்கைசென்ற காலத்திற்கு முன்னும் பரசுராமனை யஞ்சி யொளித் தமைபா லிராமனுக்கு முற்காலத்தானென்று கருதப்படுங் காந் தன்காலத்திற்கு முன்னுங் காவிரிநதி யுற்பத்திக்கு முன்னுமெ னக் கருதப்படும் பண்டைக்காலத்தே, யாசிரியன் றென்றிசை மலயத்துப் போந்தமையுந் தமிழ்முதனூ லளித்தமையும் பெறப் படும்.

இன்னும் வான்மீகி பொருநைநதியைக் கண்டபி னதற்குத் தென்பாலுள்ள பாண்டியனது பொன்மயமாகிய கபாடமுங் காண் பீரெனவானரவீரர்க்குச் சுக்கிரீவனுரைத்ததாகக் கூறலி, னாயி ரத்து நானூற்று நாற்பத்தொன்பதிற்றியாண்டு தலைச்சங்க மிரீ இய தென்மதுரையைக் கடல்கொண்டபின்னர்ப் பொற்கதவமு டைமையாற் கபாடபுரமென்னும்பெயரிய விடைச்சங்க மிரிஇய நகரந் தோன்றியகாலத்திற்கு னிராம னகத்தியனைத் தரிசித்தா னென்பதூஉம் பெறப்படும்.

இனிச் செயற்கைமுதனூலோ டொத்த மரபிற்று யாசிரிய மத விகற்பப்படக் கிடப்பது வழிநூலெனப்படும்; என்னை?

§ "முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப்
பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி
யழியா மரபினது வழிநூ லாகும்." என்றாராகலின்.

அது தொல்காப்பிய மிசைநுணுக்க மாபுராணம் பூதபுராண முதலாயின போல்வது.

§ இறையனார் களவியல், ௩௨-வது பக்கம்.

செயற்கைமுதனூலுக் கிணைநூலுண்மையி னதன்வழித்தாகத்தோன்று நூலு ளாசிரியமத விகற்பமுறலியல்பாயிற்று. அவ்வழிநூலு மதன்வழித்தாக வொருநூ லுளதாயி னந்நூலுக்கு முதனூலாம்.

இவ்வாற்றா னொருவற்குத் தந்தையாயினான் பிறனொருவனுக்கு மகனு மாயினாற்போல முனைவன்கண்ட வியற்கை முதனூலொழிந்த வேனைய நூலெல்லா முதனூலும் வழிநூலுமென வீரியல்பு முடையவாயின; என்னை,

§ "மரபுநிலை திரியா மாட்சிய வாகி
யுரைபடு நூறா மிருவகை யியல
முதலும் வழியுமென நுதலிய நெறியின." என்றாகராகலின்.

இனிவழிநூலுட் சிலவற்றைச் சிறிது வேறுபாடு நோக்கிச் சார்புநூ லெதிர்நூலெனவு மொருசாரார் வேண்டுப; என்னை,

† "இருவர் நூற்கு மொருசிறை தொடங்கித்
திரிபுவே றுடையது புடைநூ லாகும்." எனவும்,

† "தன்கோ ணிறீஇப் பிறன்கோண் மறுப்ப
தெதிர நூ லென்ப வொருசாரோரே." எனவுங் கூறினாராகலின்.

இனிச் சார்புநூலென்ப தியாதோவெனிற், செய்யுளிலக்கண மகத்தியத்துண் மிகவும் பரந்து கிடத்தலானுந் தொல்காப்பியத்துண் மிகவுஞ் சுருங்கி யிருத்தலானு மவ்விருவர் நூலுள்ளு மொருவழிமுடிந்த வதனை யோருபகார நோக்கி யோருகோவைப் படப் பல்காப்பியனார் பல்காயனார் சிறுகாக்கைபாடினியார் முதலியோர்செய்த நூன்முதலியன போல்வது.

அது தனக்கு முதனூலைநோக்க வழிநூலே யாயினு மவற்று ளொன்றன்வழியானே முற்றுங் கூறா திரண்டன் வழியானு மொருபுடையே கூறலா னதனை யொருசாராசிரியர் சார்புநூலெனக் கூறலு மமையுமென்பது.

இனி யெதிர்நூலென்ப தியாதோவெனின், முதனூலின் முடிந்தபொருளை யொருவன் யாதானுமொரு காரணத்தாற் பிறழவைத்தா லதனை யுலக மெய்யெனக்கொண்டு மயங்காமைப் பொருட்டுக் கருவியாற் றிரிவு காட்டி யவன்கோண் மறுத்து முதனூற்

---

§ தொல், பொருளதிகாரம், சுசக. † களவியல், கஉ-வது பக்கம்.

பொருளையே தன்கோளாக நிறுத்தி யொள்ளியாளொருபுலவ னால்செய்யுமாயி னந்நூ லப்பெயர்பெறு மென்பது. அதுவு முதனூலைநோக்க வழிநூலாயினும் பிறன்கோண்மறுக்கும் வேறுபாடுடைமையா னெதிர்நூலெனக் கூறலு மமையுமென்பது.

அவ்விருநூலு மிவ்வேறுபா டுடையவாயினு முதனூலின் முடிந்தபொருளை முரணாதுகூறு மழியாமரபினவாகலி னவற்றை யாசிரியர் தொல்காப்பியனார் வழிநூலு ளடக்கினார். அல்லதூஉம்,

* “அவற்று, ணூலெனப் படுவது நுவலுங் காலை
நுதலிய பொருளை முதலிற் கூறி
முதனடு விறுதி மாறுகோ ளின்றித்
தொகையினும் வகையினும் பொருண்மை காட்டி
யுண்ணின் றமைந்த வுரையொடு பொருந்தி
நுண்ணிதின் விளக்க லதுவதன் பண்பே.” எனவும்,

‘ “ஒத்த சூத்திர முரைப்பிற் காண்டிகை
மெய்ப்படக் கிளந்த வகைய தாகி
யீரைங் குற்றமு மின்றி நேரிதின்
முப்பத் திருவகை யுத்தியொடு புணரி
னூலென மொழிப நுணங்குமொழிப் புலவர்.” எனவும்,

$ “நூலெனப் படுவது நுதலிய பொருளை
யாதிக் கண்ணே யறியச் சுட்டி
யோத்துமுறை நிறுத்துச் சூத்திர நிரைஇ
முதல்வழி சார்பென மூவகை மரபிற்
றொகைவகை விரியின் வகையறத் தெரிந்து
ஞாபகஞ் செம்பொரு ளாயிரு வகையிற்
பாவமைந் தொழுகும் பண்பிற் றாகிப்
புணர்ச்சியி னமைந்து பொருளகத் தடக்கித்
தனக்குவரம் பாகித் தன்முடி வதுவே.” எனவும்,

§ “ஈரைங் குற்றமு மின்றி நேரிதி
னெண்வகைப் புணர்ப்பின தென்மனார் புலவர்”

எனவுங்கூறினாராகலி, னவ்வகை சொல்லப்பட்டது நூலென்ப.

இனி யாசிரியனகத்தியற்கு மாணாக்கர் பன்னிருவர்; சமதக்

* தொல், பொருள், சஎக. நூலெனப்படுவது நுதலியபொருளை முதலு முடிவு மாறுகோளின்றி யென்பது, பேராசிரியர் கொண்டபாடம்.
● ஷை சுஇச. $ களவியல் கஉ-ம் பக்கம். § ஷை கக-வது பக்கம்.

கினியிருடியின் புதல்வருளொருவனும் பரசுராமன்சோதரனுமா கிய திரணதூமாக்கினியென்னு மியற்பெயருடைய தொல்காப்பி யனு, மதங்கோட்டாசானுந், துராலிங்கனுஞ், செம்பூட்சேயும், வையாபிகனும், வாய்ப்பியனும், பனம்பாரனுங், கழாரம்பனு, மவிநயனுங், காக்கைபாடினியு, நற்றத்தனும், வாமனனுமென. அவருள்ளே தொல்காப்பிய னவிநயன் முதலாயினோர் முத்தமிழும் விரவக்கூறிய முதனூலாகிய வகத்தியத்தினின் றியற்றமிழை வே றுபிரித்து வழிநூல் செய்தார். அவ்வழிநூ லெல்லாவற்றுள்ளுந் தொல்காப்பியமே சிறந்தமையி னிடைச்சங்கத்தா ரதனை யகத் தியத்தோ டொப்பக்கொண்டு போற்றினர். அந்நாண்முத லின் றுகாறு மேனைய நூற்பரப்பெல்லா மழியத் தொல்காப்பியமே நிலை பெற்று வழங்க லதற்குத்தக்க சான்றும். பெருநாரை பெருங்கு ருகுமுதலாய நூலுடையா ரிசைத்தமிழை வேறுபிரித்து வழிநூல் செய்தார். அவ்வழிநூ லெல்லாவற்றினுஞ் சிறந்தது சிகண்டி செய்த விசைநுணுக்கம். அச்சிகண்டி நாரதன்மாணாக்கருட் சிறந்தோன். முறுவல் சயந்தங் குணநூல் செயிற்றிய முதலாய நூலுடையார் நாடகத்தமிழை வேறுபிரித்து வழிநூல் செய்தார். இசைநுணுக்கம்போலவே தொல்காப்பியத்தின் முன்னர்த்தோன் றிய வழிநூல்கள் பூதபுராணமு மாபுராணமுமாம். அவை யின்ன வாசிரியராற் செய்யப்பட்டனவென வறித லிக்காலத்திற் கூடாதா யிற்று. ஆயினு மவை யகத்தியம்போல விரவக்கூறாமல் வேறுபி ரித்து முத்தமிழு முற்றக் கூறிய விரிந்த வழிநூ லென்பதுமாத்திர முன்னுரைகளான் விளங்குகின்றது. தொல்காப்பியன்முதற் பன் னிருவரு மோரொருவ ரோரொருபடலமாகப் பன்னிருபடலமெ ன்னும் வழிநூலு மொன்றுசெய்தனர். ஈண்டுக்கூறிய முதல்வழி யென்னு மிருவகைநூலின் சார்பாகப் பல்காப்பியமுதலாய சார்பு நூலுந் தோன்றின. கபிலமுதலாய வெதிர்நூலுந் தோன்றின. அவையெல்லா மழியா மரபினவே யாதலிற் பிரமாணநூல்க ளா யின. கடைச்சங்கத்தின் பின்னர்த் தொல்காப்பிய மொழிந்த நூலுண் மிகப்பல விறப்பத் தொல்காப்பியத்தின் வழித்தாக்ச் செய்யினு மாசிரியன் கருத்துணராமன் மரபுநிலைதிரியச் செய்த மையாற் பிரமாணமாகாத நூலும் பலதோன்றின. அவை சின் னூ னன்னூல் வீரசோழிய மிலக்கணக்கொத்துப் பிரயோகவிவே

கஞ் சூத்திரவிருத்தி யிலக்கணவிளக்கச்சூறாவளி யிலக்கணவிள க்கமுதலாகப்பல.

இனி யகத்தியனார்வழித் தோன்றிய வாசிரிய ரெல்லாருள்ளுந் தொல்காப்பியனாரே தலைவரென்ப தெல்லாவாசிரியர்க்கு மொத்த துணிவு. என்னை?

* " கூறிய குன்றினு முதனூல் கூட்டித்
தோமின் றுணர்த லொல்காப் பியன்ற
னானையின் றமிழறிந் தோர்க்குக் கடனே."

எனப் பல்காப்பியனார் கூறினமையானும்,

" வீங்குகட லுடுத்த வியன்கண் ஞாலத்துத்
தாங்கா நல்லிசைத் தமிழ்க்குவிளக் காகென
வானோ ரேத்தும் வாய்மொழிப் பல்புக
ழானாப் பெருமை யகத்திய னென்னு
மருந்தவ முனிவ னாக்கிய முதனூல்
பொருந்தக் கற்றுப் புரைதப வுணர்ந்தோர்
நல்லிசை சிறுத்த தொல்காப் பியனும்."

என்பதனா லகத்தியனார் செய்த வகத்தியத்தினை முதனூலெனவு மவர் வானோரேத்தும் வாய்மொழிப்பல்புக ழானாப்பெருமையுடையாரெனவு மவர்செய்த முதனூலைப் பொருந்தக்கற்றுப் புரைதப வுணர்ந்தோருட் டலைவராயினார் தொல்காப்பியனாரெனவும் பன்னிருபடலத்துக்குப் பாயிரங் கூறியதை யப்பன்னிருவரு முடம்பட்டமையானும், பன்னிருபடல முதனூலாக வழிநூல் செய்த வெண்பாமாலை யையனாரிதனாரும்,

"மன்னிய சிறப்பின் வானோர் வேண்டத்
தென்மலை யிருந்த சீர்சான் முனிவரன்
றன்பாற் றண்டமிழ் தாவின் றுணர்ந்த
துன்னருஞ் சீர்த்தித் தொல்காப் பியன்முதற்
பன்னிரு புலவரும் பாங்குறப் பகர்ந்த"

எனப் பாயிரஞ் செய்தற் குடம்பட்டமையானுங், கடைச்சங்கத்தாருட் களவியற்பொருள் கண்ட கணக்காயனார் மகனார் நக்கீரனா "ரிடைச்சங்கத்தார்க்குங் கடைச்சங்கத்தார்க்கு நூலாயிற்றுத் தொல்காப்பிய" மெனக் கூறினமையானு மென்பது.

இனி நச்சினார்க்கினியர், "பாண்டியன் மாகீர்த்தி யிருப்பத்து

---

* இது பல்காப்பியப் புறனடைச் சூத்திரம்.

நாலாயிரம் யாண்டு வீற்றிருந்தானாகலி னவனு மவனவையிலுள்ளோரு மறிவு மிக்கிருத்தலி, னவர்கள்கேட்டிருப்ப வதங்கோட்டாசிரியர் கூறிய கடாவிற்கு விடைகூறினார். அகத்தியனா ரதங்கோட்டாசிரியரை நோக்கி நீர் தொல்காப்பியன் செய்த நூலைக் கேளற்கவென்று கூறுதலானுந், தொல்காப்பியனாரும் பல்காலுஞ் சென்று யான்செய்த நூலை நீர் கேட்டல் வேண்டுமென்று கூறுதலானு, மிவ்விருவரும் வெகுளாமை யிந்நூற்குக் குற்றங்கூறி விடுவலெனக் கருதி யவர்கூறிய கடாவிற் கெல்லாம் விடைகூறுதலி னரிறப வென்றார். அவர் கேளன்மி னென்றற்குக் காரண மென்னையெனிற், றேவரெல்லாருங் கூடி யாஞ்சேர விருத்தலின் மேருத்தாழ்ந்து தென்றிசை யுயர்ந்தது; இதற் ககத்தியனாரே யாண்டிருத்தற் குரியரென் றவரை வேண்டிக் கொள்ள வவருந் தென்றிசைக்கட் போதுகின்றவர்; கங்கையாருழைச் சென்று காவிரியாரை வாங்கிக்கொண்டு, பின்னர் யமதக்கினியாருழைச் சென் றவர்மகனார் திரணதூமாக்கினியாரை வாங்கிக் கொண்டு புலத்தியனாருழைச்சென் றவருடன்பிறந்த குமரியா ருலோபா முத்திரையாரை யவர் கொடுப்ப நீரேற் றிரீஇப் பெயர்ந்து, துவாரவதிப் போந்து நிலங்கடந்த நெடுமுடியண்ணல் வழிக்கண்ணரசர் பதினென்மரையும் பதினெண்கோடி வேளிருள்ளிட்டாரையு மருவாளரையுங் கொண்டு போந்து, காடுகெடுத்து நாடாக்கிப் பொதியிலின்கணிருந், திராவணனைக் கந்தருவத்தாற் பிணித், திராக்கதரை யாண்டியங்காமை விலக்கித், திரணதூமாக்கினியாராகிய தொல்காப்பியனாரை நோக்கி, நீர்சென்று குமரியாரைக் கொண்டு வருகவெனக் கூற, வவரு மெம்பெருமாட்டியை யெங்ஙனங் கொண்டு வருவலென்றார்க்கு, முன்னாகப்பின்னாக நாற்கோனீள மகலநின்று கொண்டுவருகவென்றார்க்,கவரு மங்ஙனங் கொண்டுவருவழி வையைநீர்கடுகிக் குமரியாரை யீர்த்துக் கொண்டு போயவழித் தொல்காப்பியனார் கட்டளை யிறந்து சென், றோர்வெதிர்ங்கோலை முறித்து நீட்ட வதுபற்றியேறினார்; அது குற்றமென் றகத்தியனார் குமரியாரையுந் தொல்காப்பியனாரையுஞ் சுவர்க்கம் புகாதிரெனச் சபித்தார்; யாங்க ளொருகுற்றமுஞ் செய்யாதிருக்க வெங்களைச் சபித்தமையா னெம்பெருமானுஞ் சுவர்க்கம் புகாதிரென வகத்தியனாரையுஞ் சபித்தார்; அதனா

னவர் வெருண்டாராகலி, னவன்செய்தநூலைக் கேளற்க வென்றார்." எனப்பாயிரத்துளுரைத்தார். அவரின்னநூற்பிரமாணங் கொண் டெழுதினாரெனவறிதல் பன்னூ லிறந்துபட்டமையி னிக் காலத்தரிதாயிற்று. நமக்கு மேற்கோள் கிட்டாமைகொண் டவருரைத்தன கொள்ளாமென லமையாது என்னை, பாண்டியன் மாகீர்த்தி யிருபத்துநாலாயிரம் யாண்டு வீற்றிருந்தா னென்றாற்போலப் புனைந்துரைவகையாற் கூறுவவு மாசிரியர் கருத்தை மாறாக வுணர்ந்தமையாற் கூறுவவுமன்றி, யவர் பன்னூல் பயின்ற செந்நெறிச் செல்வராகலிற் றாமே யொன்றைப் படைத்திட்டுப் பொய் கூறா ராகலானு, மகத்தியனாருந் தொல்காப்பியனாரு நகுடற்குப் பின் றென்றிசைப் போந்தபின் சுவர்க்கம்போய் மீண்டாரென லெந்நூலகத்து மின்மையானு மென்பது.

இனிக் குரவனைச் சபித்தமை தொல்காப்பியனார்க்குக் கூடுமோவெனிற், கீழோயினார்போ லன்றிப் பெரியார்க்கு யாதானுமொரு நீதிபற்றி வெகுளிகோட லறமாம்; அன்றே லது குற்றமாம். அது பிழைத்த கந்தருவ னொருவனைச் சபிக்குமாற்றலிருந்தும் சபியாமற் பொறுத்த குற்றத்துக்காகச் சமதக்கினியைப் பிதிரர் நகுலமாமாறு சபித்தாரெனப் பாரதங் கூறுயாற்றானு முணரப்படும். இவ்வாற்றாற் கட்டளை யிறந்து சென்ற குற்றத்தை யேதுவாகக்கொண் டகத்தியனார் சபித்தமையுங், கட்டளை யிறந்ததுங் குரவன்பண்ணியின் பொருட்டாதலிற் கூடுமெனக்கொண்டு தொல்காப்பியனார் சபித்தமையு, மவரது தவவன்மையையும் யாவர்மாட்டு மொப்பநிற்கு நடுவுநிலையையும் புலப்படுத்தும் புகழ்ச்செய்தியே யன்றி யிழிவாகாது. இவ்வாறே பிற்காலத்துங் கன்னியைக் காத்தற்பொருட்டுப் பரசுராமனு, நோன்பினைக் காத்தற்பொருட் டவன்மாணாக்கனாகிய வீடுமனும், பன்னாட் போர்புரிந்தமை பனுவலாற் புகழப்பட்டன வன்றோ; இன்னுமிக் கருத்து நோக்கி யன்றே தெய்வப்புலமைத் திருவள்ளுவனாரும்,

"குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்த லரிது." என்றார்.

இனி நச்சினார்க்கினியர் சொற்பற்றி யிச்சரித மாராய்வுழித் தொல்காப்பியனா ரகத்தியனார் மாணாக்கருள் முதன்மை யுடையா

ரென்ப தொன்றே யன்றி யவ்வகத் தியனூரோ டொத்த தவவாற் றலு முடையாரென்பதும் போதரும்.

இனி யந்நால்வகைநூலுண் மலை, பல்வகைப் பொருளையுந் தனக்கு ளடக்கிப் பிண்டமாகத் தோற்றலா னியற்கைமுதனூலு, மின்னவிடத் தின்னபொருளை வைத்தல் வேண்டுமென்னு முறையின்றிப் பல்வகைப்பொருளையுந் தோன்றிய முறையானே விரவக் காட்டலி, னின்னவிடத் தின்னபொருளை வைத்து முறைட் படக் காட்டல் வேண்டுமென்னு நியமமின்றி யியற்கைமுதனூலின் பொருளினை யுணர்ந்தமுறையா னப்பல்வகைப் பொருளையும் விரவக் கூறுஞ் செயற்கைமுதனூலு மிவ்வாறுமென் வுணர்த்துத லுடைத்து.

நிலன், பல்வகைப் பொருளையும் பிறவிடத்திற் கண்டு தமக்கு வேண்டும்பொருளு ளிப்பொரு ளின்னவிடத் திருத்தல் வேண்டுமென நினைந்து பல்வகைப்பட வேறுபிரித்து முறைப்படுத்துப் பயிரிட்ட வுழவர் கருத்தொப்ப நெல கரும்பு வாழை தென்னைமுதலாயவற்றைக் காட்டலின், முதனூலின் முறையின்றி விரவிக் கிடந்த பொருளை வேறுவேறு வகைப்படுத்து, முறைப்படக் கூறிய வழிநூலு மிவ்வாறுமென வுணர்த்த லுடைத்து.

பூ, மலையினுள்ள தேன் வெளிப்படத் தோன்றினு மலைவாழ் வார்க் கன்றிப் பிறர்க்குப் பயன்பட லரிதாகிப் பரந்து கிடத்தலானு, நில னேனையவற்றை வேறுபிரித்து முறைப்படுத்துக் காட்டினுந் தேனை வேறுபிரித்துத் தனித்துக் காட்டாமற் கொடிமுதலாயவற்றுள் வேர்முத னுனிவரை யியைத்துக் காட்டலின் மிகவுஞ் சுருங்கி மறைதலிற் பயன்படாமையானும் பிறர்க்கும் பயன்பட லொனறேகருதியு, மலையினு நிலத்தினு முள்ள வகிலுஞ் சந்தும் வெட்டுவேருமு பிறவு நறுமணனை வெளிக்காட்டாது மறைத்துவிடலி னது வெளித்தோன்ற லொன்றே கருதியு, மம்மலையினு நிலத்தினு முள்ள பல்வகைப்பொருளு ளேனைய விடுத்துத் தேனு மணனுமென விரண்டே தொகுத்தும் விரித்துங் காட்டலின், முதனூல் வழிநூலென்னு மிருவகைநூலு ளொருநூற் பொருளையாவது முற்றுங் கூறுது மதிநுட்ப நன்கமையார்க்கும் பயன்படுமாறவ்விருநூலு நோக்கி, யவற்றுட் சிலவற்றைத் தொகுத்தாயினும்

விரித்தாயினுங் கூறுஞ் சார்புநூலு மிவ்வாறுமென வுணர்த்த லுடைத்து.

துலாக்கோல், கருவிகொண்டுநிறுத் தாராயுமுன்னர்ப் பிற னொருவன் றன்மனஞ் சென்றவாறே மெய்யெனநினைந் தொரு பொருளி னிறை யித்துணைத்தெனக் கூறிற், றனதனைத் தன்னு வின் வரையாகிய கருவியா னறிந் தவன்கூற்று மாறின்றேற் சம னிலை காட்டி யுடன்பட்டு, மாறுகிற் சாய்ந் துடன்படாமற் கருவி யாற் றிரிவுகாட்டி மறுத்து மெய்யாகிய தன் றுணிவு காட்டலின், முதனூலின் முடிந்த பொருளை யொருவன் யாதானுமொரு கார ணத்தாற் பிறழவைத்தா லதனைக் கருவியாற் றிரிவுகாட்டித் தன் கோணிறீஇப் பிறன்கோண்மறுக்கு மெதிர் நூலு மிவ்வாறுமென வுணர்த்துத லுடைத்து.

இவ்வாற்று னாசிரிய னூல்வகை யுரைக்குமாறுபெறப்பட்டது

அக்குடங் கழற்காய் தன்னிடத்துத் தோன்றாது பிறிதிடத் துத்தோன்றிப் பின்னர்ப் பெய்யப்பட்டமையானும், பெய்தமுறை மாறிக் கீழுள்ளது மேலு மேலுள்ளது கீழுமாகக் கிடத்தலானுங், காரணகாரிய முறையாற் காட்டாமையே யனறித், தோற்ற முறை யாற் காட்டாமையு முடைத்து.

அப்பனை, யெஞ்ஞான்று கொடுப்பினுங் கள்ளன்றிப் பிற வின்மையிற் பல்வகைப்பொருளை முறைப்பட வேறுபிரித்துக் காட்டாமை யுடைத்து.

அத்தெங் கக்குடத்தினு மப்பனையினுஞ் சுருங்கியபொருளை விரித்தாயினு மவற்றுள் விரிந்த பொருளைச் சுருக்கியாயினுங் காட்டாமை யுடைத்து.

அப்பருத்தி, யத னுட்பொருளை யின்னநிறையுடைத்தெனப் பிறர்கூறிற் றன்னிடத்துக் கருவியின்மையி னதனை யுடன்படலா வது மறுத்தலாவது செய்யாமையுடைத்து.

இவ்வாற்று னல்லாதா னூல்வகையின் பருப்பொருளு மறிந் துரையானென்பது பெறப்பட்டது.

இனி நூலதுறுப்பின்வகை யுரைத்த லுரைக்கற்பாற்று.

அதுதா னான்குவகைத்து; சூத்திரத்தானு மோத்தினானும் படலத்தானும் பிண்டத்தானு மியலுதல்பற்றி. என்னை?

* "அதுவே தானு மீரிரு வகைத்தே
யொருபொரு ளுதலிய சூத்திரத்தானு
மினமொழி கிளந்த வோத்தி னானும்
பொதுமொழி கிளந்த படலத் தானு
மூன்றுறுப் படக்கிய பிண்டத் தானுமென்
றாங்கனை மரபி னியலு மென்ப." [என்றாராகலின்.]

இனிச் சூத்திரமாவ தியாதோ வெனின்,

$ "அவற்றுட், சூத்திரந் தானே,
யாடி நிழலி னறியத் தோன்றி
நாடுத லின்றிப் பொருணனி விளங்க
யாப்பினுட் டோன்ற யாத்தமைப் பதுவே." எனவும்,

"மேற்கிளந் தெடுத்த யாப்பினுட் பொருளொடு
சில்வகை யெழுத்தின் செய்யுட் டாகிச்
சொல்லுங் காலை யுரையகத் தடக்கி
நுண்மையொடு புணர்ந்த வொண்மைத் தாகித்
துளக்க லாகாத் துணைமை யெய்தி
யளக்க லாகா வரும்பொருட் டாகிப்
பல்வகை யானும் பயன்றெரி புடையது
சூத்திரத் தியல்பென யாத்தனர் புலவர்." எனவும்,

‡ "நுட்ப மொட்பந் திட்பஞ் சொல்லிற்
சுருக்கங் கருத்துப் பகுதியொடு தொகைஇ
வருத்தமில் பொருட்பய னிகழ்ச்சி சூத்திரம்." எனவும்,

§ 'பொதுவினுஞ் சிறப்பினும் போற்றுங் காலைப்
பெறுதல் பெற்றவை காத்தல் காப்பொடு
பிறிதுபெற நிகழ்த்த லதர்க்கரூத் தாகும்." எனவும்,

|| "அதுவே, பிண்டந் தொகைவகை குறியே செய்கை
கொண்டியல் புறனடை யென்றதன் விகற்பமோ
டொன்றிய குறியே யொன்று மென்ப."

எனவுங்கூறுமாற்றாற், சூத்திரத்தியல்பு மதன்கருத்து மதன் குறியு முணரப்படும்.

இனி யோத்தும் படலமும் பிண்டமுமாவன வென்னையெனின்;

---

* தொல், பொருள், சஅ௦-வது சூத்திரம். இதனை இரண்டு சூத்திரமாக்கினர் பேராசிரியர். $ டை சஅ௨. ● டை கருசு. ‡ § || தொல், பாயிரம், இளம்பூரணருரை மேற்கோள்.

* "நேரின மணியை நிரல்பட வைத்தாங்
கோரினப் பொருளை யொருவழி வைப்ப
தோத்தென மொழிப வுயர்மொழிப் புலவர்". எனவும்,

† "ஒருநெறி யின்றி விரவிய பொருளாற்
பொதுமொழி தொடரி னதுபட லாகும்." எனவும்,

$ "மூன்றுறுப் படக்கிய தன்மைத் தாயிற்
றோன்றுமொழிப் புலவ ரது பிண்ட மென்ப."

எனவுங்கூறினாராகலி, னவ்வகை சொல்லப்பட்டனவா மென்பது.

அவற்றுட் சூத்திரத்தா னியன்றநூ லாரியத்துண் மாகேச்சுர சூத்திரமுந் தமிழின்க ணிறையனாராகத்தியனுக்குரைத்த விசைநுணுக்கமும் போல்வது. ஓத்தினா னியன்ற நூ லிறையனார் களவியல் போல்வது. படலத்தா னியன்றநூல் பன்னிரு படலம் போல்வது. பிண்டத்தா னியன்றநூல் தொல்காப்பியம் போல்வது.

இனி நூல்வகைத்தாக்காது சிறுநூல் பெருநூ லிடைநூலென மூவகைத்தாக்கி யாசிரியர்க்கு மாறாகச் சிலர் கூறுப. அது பொருந்தாமை பின்னர்க் காண்க.

இனி யகத்திய மவிநயமுதலாயின வியற்றமிழிசைத்தமிழ் நாடகத்தமிழென்னு மூன்றுபிண்டத்தையடக்கிய நூலெனச் சொல்லப்படலானவை பிண்டத்தினை யடக்கிய வேறொரு பிண்டமென்றார் நச்சினார்க்கினியர்.

இனி நூல்செய்தற் குரியான் யாவ னூல்செய்யுமா றியாதோ வெனின்,

* "அப்புல மரிறப வறிந்து முதனூற்
பக்கம் போற்றும் பயந்தெரிந் துலகத்
திட்ப முடைய தெளிவர வுடையோ
னப்புலம் படைத்தற் கமையு மென்ப." எனவும்,

‡ "சூத்திர முறையென் றுயிரு திறத்தினும்
பாற்படத் தோற்றல் படைத்த லென்ப
நூற்பய னுணர்ந்த நுண்ணி யோரே."

---

* தொல் பொருள் சஅ௬. † ஷை சஃச. $ ஷை சஅரு.
* ‡ தொல், பாயிரம், இளம்பூரணருரை மேற்கோள்.

எனவுங் கூறுமாற்றானும் பிறவாற்றானு மறிக.

அவற்றுண் மலை, யெல்லாவிடத்தும் வளமுடைமையி னோ ருறுப் புடைத்து. நிலன், வளந்தரு மிடனும் வரம்புமென விரண் டுறுப் புடைத்து. பூத், தேனுடைத்தாகிய காம்பு மிதழு மக ரந்தமுமென மூன்றுறுப் புடைத்து. துலாக்கோ, னிறுக்கும் பொருளைத் தாங்குந் தூக்கு, மதனைத் தாங்கிய தூங்குகயிறு, மத னைத் தாங்கிய கோலு, மதனைத்தாங்கிய பிடிகயிறுமென நான் குறுப் புடைத்து.

இவ்வாற்றா னாசிரிய னூலது நான்குறுப்பு முரைப்பானென் பது பெறப்படலின், னூலினொருபகுதியாய சிலசூத்திரங் கற் றுஞ் சிலவோத்தே கற்றும் படலத்துட் சில கற்றுங் குன்றவு ரைப்பா னல்லன்; முற்றக் கற்றே னாதலிற் குன்றா துரைப்ப னென் றுணரப்படும்.

அக்குடங் கழலுங் குடமுமென விருவகைத் தாகலின் மலைக்கு மறுதலைத்தன்மைத்து. அப்பனை, பாளையு மோலையு மரனு மென மூவகைத்தாகவு மதன்மேலாகவும் பகுக்கப்படலி னிலத் தின் மறுதலைத் தன்மைத்து. அத்தெங்கு, மட்டையு மோலைய மீர்க்கு மரனுமென நான்குவகைத்தாகவு மதன்மேலாகவும் பகுக் கப்படுதலிற் பூவின் மறுதலைத் தன்மைத்து. அப்பருத்தி, முத் தோலு முட்பொருளுங் காம்புமென வைவகைத்தாகவு மதன்மே லாகவும்பகுக்கப்படுதலிற் றுலாக்கோலின் மறுதலைத்தன்மைத்து.

இவ்வாற்றா னக்குடமுதலாயநான்கு மொருவகைத்தாதலைக் காட்டாம லேனைய விரண்டுமுதலாய பல்வகையே காட்டலி, னாசி ரியனல்லாதா னொருபொரு ளுதலிய சூத்திரத்தை யாண்டு முணரா னாகி யச்சூத்திர வுறுப்பைத் தன்னுளடக்கிப் பெயர்மாத்திரை யான் வேறுபடநின்ற வோத்தின்பெயர்களு மவற்றைத் தன்னு ளடக்கிநின்ற படலத்தின் பெயர்களும் பாடத்தாற் கொண், டப்படலப் பன்மையை வேறுவேறு நூலெனக்கருதிக், கல்லார் முன்னர்த் தான் வேண்டியவாறு கூறுவனென்பது பெறப்பட் டது.

இனிக் கிடக்கைப்பயன்வகை யுரைத்த லுரைக்கற் பாற்று.

அவ்வகை யாற்றொழுக்குந், தேரைப்பாய்வுஞ், சீயநோக்கும், பருந்தின்வீழ்வுமென நான்கு. என்னை,

* "யாற்ற தொழுக்கே தேரைப் பாய்வே
சீய நோக்கே $ பருந்தின் வீழ்வென்
றுவகை நான்கே கிடக்கைப் பயனே." என்றாராகலின்.

அவற்றுள் மலை, யாற்றொழுக்கி னருவிநீரைக் காட்டலு மொழுக்கின்க ணிலனிடையிட்டுக் காட்டாமையிற் றேரைப் பாய் வின்மையு முடைத்து.

நிலன், றன்வளனை யிடனிடையிட்டுக் காட்டுதலிற் றேரைப் பாய்வு, தென்முதலாயவற்றை முன்னாகிய மேலிடத்துங் கிழங்கு முதலாயவற்றைப் பின்னாகிய கீழிடத்துங் காட்டலன்றி, யவற்று ளொருபொருளையே முன்னும் பின்னுமென விரண்டிடத்துங் காட்டாமையிற் சீயநோக் கின்மையு முடைத்து.

பூக், காம்பாகிய கீழிடத்திலிருக்குந் தேனைத் தும்பிக் கிதழாகிய மேலிடத்துக் காட்டலிற் சீயநோக்குந் தன்னைத் தாங்கிய முதலி னடியினாவது நுனியினாவது பிறிதிடத்தாவது காட்டாமையிற் பருந்தின்வீழ் வின்மையு முடைத்து.

துலாக்கோல், கொள்வோன் வேண்டும்பொருள் பல்பொருட்கு நடுவட் சேய்த்தாகக் கிடப்பினும் பருந்தின் வீழ்வெனப் பாய்ந்துகொணர்ந் தளித்த லுடைத்து.

இவ்வாற்றா னந்நான்கியல்பு முடைய சூத்திரக்கிடக்கை யுரைத்த லாசிரியன துரைத்தொழில் விகற்பமென்பது பெறப்பட்டது.

அக்குடந், தன்கட்கழ லொன்றற் கொன்று தொடர்தலின் மையின் யாற்றொழுக் கின்று.

அப்பனை, பாளையி னடிக்கணுள்ள கள்ளினை நுனிக்கட் கொணர்ந்துகொடுக்குமிடத் திடனிடையிட்டுக்கொடாமையிற் றேரைப் பாய் வின்று.

அத்தெங், கொருபொருளையே முன்னும் பின்னுங் காட்டாமையிற் சீயநோக் கின்று.

---

* தொல், பாயிரம், இளம்பூரணநூர் மேற்கோள்.
$ கிடக்கைமுறையே என்பதூஉம் பாடம்.

அப்பாறந்தி, பொருளை வெளிக்காட்டாது தன்னகத்தே மறைத்திருத்தலிற் பருந்தின்வீழ்வெனப் பாய்தலைக் காட்டலின்று.

இவ்வாற்றானந்நான்குதன்மையு முறையாமை யல்லாதானியல்பென்பது பெறப்பட்டது.

இனிச் சூத்திரப்பயன்வகை யுரைத்த லுரைக்கற்பாற்று.

அவ்வகை, பொழிப்பு மகலமு நுட்பமு மெச்சமுமென நான்கு. என்னை?

* "பொழிப்பே யகல நுட்ப மெச்சமெனப்
பழிப்பில் † சூத்திரப் பயனான் கென்ப." என்றாராகலின்.

இனிப் பொழிப்பென்ப தென்னையெனின்?

$ "பாடங் கண்ணழி வுதா ரண மென்றிவை
நாடிற் றிரிபில வாகுதல் பொழிப்பே." எனவும்,

‡ "பொழிப்பெனப் படுவது பொருந்திய பொருளைப்
பிண்ட மாகக் கொண்டுரைப் பதுவே." எனவுங் கூறுமாற்றானறிக.

இனி யகலமென்ப தென்னையெனின்?

§ "தன்னூன் மருங்கினும் பிறநூன் மருங்கினுந்
துன்னிய கடாவின் புறத்தோன்று விகற்பம்
பன்னிய வகல மென்மனார் புலவர்." என்பதனானறிக.

இனி நுட்பமென்ப தென்னையெனின்?

¶ "ஏதுவி னாங்கவை துடைத்த னுட்பம்." என்பதனானறிக.

இனி யெச்சமென்ப தென்னையெனின்?

● "துடைத்துக்கொள் பொருளை யெச்ச மென்ப." என்பதனானறிக.

இனி யிந்நால்வகையினையு மிவ்வாசிரியன் காண்டிகைவகை யிரண்டுரைவகையிரண்டென விருவகையு ளடக்கிக்கூறும்.

அவற்றுண் மலை, பன்னெறியாற் பெற்ற நீரைப் பாடங் கண்ணழி வுதாரணமென்றிவை நாடிற் றிரிபிலவாய பொழிப்புரையென மழைநீ ரூற்றுநீர் சுனைநீரென்றிவை நாடிற் றிரிபிலவாய வருவி நீரெனக் காட்டலும், மவற்றை யாற்றதொழுக்கிற் செல்லவிடா

* $ § ¶ ● தொல், மரபியல், இளம்பூரணருரை மேற்கோள்.
‡ நேமிநாதவுரைமேற்கோள்.
† சூத்திரம் பன்னானுன்கே, என்பதூஉம் பாடம்.

தாங்காங் கிடையிடை யணைகொண்டு தடைச்செய் தகலஞ்செய் யாமையு முடைத்து.

நிலன், றன்னிடத்திட்ட நென்முதலாய வித்தினை யொன்று பலவாமாறுவிரித் தொவ்வொன் றினு முமி தவிடுமுதலாய தடைப் பெய் தகலஞ்செய் தரிசிமுதலாய பொருளை வெளிப்படுத்தாது மறைத்தலு, மத்தடைதுடைத்தற்குத் தன்னிடத் தேதுவின் மையு முடைத்து.

பூத், தேனைக்காம்பாகிய தடையுட் படுத் தத்தடை துடைத் தத்தேனைக்கோடற் கிதழ்விரிதலாகிய வேதுவுடைமையு, மவ் வேதுவாற் றானே யத்தடை துடைத்துக் கொடாமையு முடைத்து.

துலாக்கோல், கொள்வோர்க் களவுதெரியாமையாகிய தடை யை நிறைதெரிக்குந் தன்வரையாகிய வேதுவாற் றானே துடைத் தெச்சமாகிய பொருளளித்த லுடைத்து.

இவ்வாற்றா னந்நான்கியல்பு மொருங்குடைய சூத்திரப்பய னுரைத்த லவன்றொழி லென்பது பெறப்பட்டது.

அக்குடங், கழற்காயைத் திரிபின்றித் திரட்டிக் காட்டா மல் வேறுவேறு காட்டலு,மதன் பருப்பைத் தோலான் மூடித் தடைச்செயலு முடைத்து.

அப்பனை, மூடியபாளையைத் தானே விரித்தலிற் றடைச் செய்யாமையும், பாளைவிரிதற்கு வெடித்தலாகிய வேதுவையு மு டைத்து.

அத்தெங்கு, பாளையின்மையின் விரிதற்கேதுவுமின்மையும், பழுத்தலாகிய வேதுவிற் பற்றுவிடாமையாகிய தடையினைத் தா னே துடைத்து மட்டைமுதலாய வெச்சப்பொருளைக்கொடுத்தலு முடைத்து.

அப்பருத்தி, வெடித்தலின்மையாகிய தடையினைத் தானே துடைத் தெச்சமாகிய வுட்பொருளைக் கொடாமை யுடைத்து.

இவ்வாற்றா னல்லாதா னந்நான்குவகையுரையு ளொன்றுமறி யானென்பது பெறப்பட்டது.

இனி மூன்றாவதாகிய செயப்படுபொருளெனுங் கல்வியி னியல் புரைக்கற்பாற்று.

அக்கல்வி, களவு நூன் முதலாயவாயி னிம்மைமறுமை யிரண்டினுந் தீயபயத்தலானுஞ், சொன்னயம் பொருணயமின்றிக் காலங்கழிப்பி யாரவாரம்பயக்குங் கதைமுதலாயினவாயி னிம்மைமறுமை யிரண்டினும் பயனிலவாக முடிதலானு, மறத்தொடு படாப்பொருணூலு மறத்தொடும் பொருளொடும்படா வின்பநூலுமாயி னறத்தாற்றி னன்றிப் புறத்தாற்றிற் செலுத்தலிற் றீயவற்றொடுகூடி யவற்றியல்பாகித் தீயபயத்தலானு, நன்னூன் முதலாயின பயன்படு மிலக்கணங் கூறப்புகினும் பயனிலவாய போக்குடைமையி, னப்போக்கினைக் களைந்து தன்னியல் பாக்காமையானுந், தொல்காப்பிய முதலாயின போக்கறு நூலாயினுங்;

* "கற்றதூஉ மின்றிக் கணக்காயர் பாடத்தாற்
பெற்றதாம் பேதையோர் சூத்திர—மற்றதனை
நல்லா ரிடைப்புக்கு நாணாது சொல்லித்தன்
புல்லறிவு காட்டி விடும்"

என்றாராகலி னவ்வாறு பெற்றவாயி, னவனது புல்லறிவு காட்டிப் பின்னு மவனை யீவோனுகச் செய்யாது வறியனாக்குதலானு, மவையெல்லா மறம்பயவாமையி னீகைக்குரிய பொருளாகாமையா, னேனைய வறநூலு மறத்தொடுபட்ட பொருணூலு மறத்தொடும் பொருளொடும்பட்ட வின்பநூலுந் தீயவும் பயனிலவுமாகாம லறப்பொருளின்பம் பயக்குங் கருவிநூலுமென வவை, கணக்காயர் பாடத்தாற் பெறாது தான்கற்றறிந்த நூலாயி னீதற்குரிய பொருளெனப்படும்.

இவ்வாற்றா னப்பொருட்குக் குற்றமின்மை நான்குவகைப்படும்; தீயவும் பயனிலவுமாகாம னன்மைபயத்தலு, மினத்தியல்பாற் றன்னியல்பு கெடாமையு, மினத்தியல்பைத் தன்னியல்பாக்கலு, மீவோனைப் பின்னுமீவோனாக்கலுமென.

அவற்றுண் மலையா னளிக்கப்படு மருவிநீர், தீயவும் பயனிலவு மாகாம னன்மைபயத்தற்குணமுநச்சுப் பொய்கையின் விழினஞ்சாகித் தீங்குபயத்தலானுங்,கடலின் விழி னுவர்நீராகிப் பயன்

* நாலடி.

படாமையானு, மினத்தியல்பாற் றன்னியல்பு கெடற் குற்றமு முடைத்து.

நிலத்தா னளிக்கப்படுநெல், தீங்குபயக்குங் களைமுதலாயவற் றொடு கூடியவழியுந் தீங்கு செய்யாமையானும், பயனிலவாய பதடிமுதலாயவற்றொடு கூடியவழியும் பயனிலவாகாமையானு மக்குற்றமின்மையு, மக்களைமுதலாயவற்றைத் தன்னியல்பாக்காக் குற்றமு முடைத்து.

பூவா னளிக்கப்படுந் தேன், மகரந்தமுதலாயவற்றொடு கூடி யவழி யவற்றையு மினிமை யுடையவாகச் செய்தலி னக்குற்ற மின்மையுந், தன்னை யளித்த பூவைப் பின்னுந் தேனீயாவண்ணம் வறிதாகச் செய்தலு முடைத்து.

துலாக்கோலா னளிக்கப்படும்பொருள், தன்னை யளித்தபின் னரு மத்துலாக்கோலை யீதலுடைத்தாகச் செய்தலி னக்குற்ற மின்று.

இனி யைபவிபரீதமறக் கற்ற தொல்காப்பிய முதலாயின தீங்கு பயத்தலும் பயனில்வாதலு மின்றி, யறம்பொருளின் பம் வீடென்னு நன்மை பயத்தலு, மிவை தீயவை யிவை பயனி லவென விடையிடை வேறுசில கூறினு மவற்றாற் றம்மியல்பு கெடாமையு, மவற்றையுமிங் தொழித்தற்குத் தான் கருவியாக முடி தலி னவற்றையுந் தம்மியல்பாக்கலுந், தம்மை யளித்தபின்னு மேலுமேலும் பொருள்பெருகிக் காட்டலி, னீவோனைப் பின்னு மீவோனாக்கலுமென நான்கியல்பு முடையவென் றுணரப்படும்.

இவ்வாற்றா னிலன்முதலாயின வக்குற்றங் களைதலி, னே னைய நான்கியல்பு மநுவிமுதலாகிய நால்வகைப்பொருளையும் பிண் டமாகக் கருதியவிடத் தவற்றின்க ணமைதலி, னப்பொருளை யுடைய வவைநான்கு மந்நான்கியல்பு மொருங்குடைத்தாகிய கல் வியுடையானுக் குவமமாயினவென்பது

இனி யுரைப்பாட்டு,

"தீய பயனில செய்த லின்றித்
தூய வறம்பொரு ளின்பந் தோற்றலு
மேய வினத்தாற் றன்னியல் விடாமையு
மாயி னினத்தைத் தன்னியல் பாக்கலு
மேய நான்குங் கல்வியி னியல்பே." என்பது.

அக்குடத்தா னளிக்கப்படுங்கழல், நன்மைபயவாமற் பயனில வுந் தீங்குபயப்பனவுமாகித் தேற்குடத்துள் வீழினு மினிமை யுடைத்தாகாமையிற் றன்னியல்பு கெடாமை யுடைத்து.

அப்பனை யளிக்குங்கள், பாலொடு கலந்தவழியு நன்மைபய வாம லப்பாலையுந் தன்னியல் பாக்க லுடைத்து.

அத்தெங்கா னளிக்கப்படுமட்டை, காப்முதலாய நற்பொரு ளோடு கலவாமையுந் தன்னையளித்த தெங்கினைப் பின்னு மட்டை யினை யீதலுடைத்தாக்கலு முடைத்து.

அப்பருத்தியா னளிக்கப்படும்பொருள், தன்னையளித்தபினக் காய்கெடலி னதனைப் பின்னு மீதலுடைத் தாக்காமை யுடைத்து.

இவ்வாற்றா னல்லாதா னளிக்குங் கல்விப்பொருளியல்புணரப் படுமென்பது.

இனி நான்காவதாகிய நிலத்தியல் புரைக்கற்பாற்று.

அந்நில னீவோன் காரணமாகவுங், கொள்வோன் காரணமா கவு, மிருவர்க்கும் பொதுமை காரணமாகவு மூவகைப்படும்.

அவற்று ளீவோனைப்பற்றிக் கொள்ளுநில னுரைக்கற்பாற்று.

அஃதைய விபரீதமுறி னக்காலேயே கொள்வோ ராசானை வினைவற்பொருட் டவனிருக்கை நிலைபெயராமையு, மவனளிக்கு மிட னிலைபெயராமையு, மெதிர்நோக்கற்பொருட் டவன்முக மவர்க்கு மறையாமையு, மவர்முக மவனுக்கு மறையாமையுமென நான்கியல் புடைத்து.

அவற்றுண் மலையினிருக்கை நிலையுடைத்து. அருவியளிக்கு மிட னீளச்செல்லலி னிலையின்று.

நிலன் வளனளிக்கு மிடனுந் தானு நிலையுடைமையி னக் குற்ற மின்மையு மக்காலை நெற்பயிர்முதலாயின மூடலிற் றன்முக முழவர்க்கு மறைதலு முடைத்து.

பூத், தும்பிக்குத் தன்முக மறையாமை யளித்தலி னக்குற்ற மின்மையுந் தும்பி தேனை யிதழகத்துட் புக்குண்ணலிற் றனக்குத் தும்பியின்முக மறைதலு முடைத்து.

துலாக்கோ லளிக்குமிடத்துத் தன்சமநிலை பார்த்த பின்னரே பொருள்கொள்வராகலி, னவர்முகந் தனக்குமறையாமையி னக் குற்ற மின்று.

இவ்வாற்று னம்மூக்குற்றமு மின்மையி னந்நான்கியல்பு மொருங்குடைய நிலத்திருந்தளித்த லவனியல்பென்பது பெறப் பட்டது.

இனி யுரைப்பாட்டு,

"ஈவோ னிருக்கை யிடனு மளித்தன்
மேவ லிடனு நிலையின வாகலு
மவன்முகங் கொள்வோர்க் கமைவ தாகலு
மவர்முக மவனுக் கமைவ தாகலு
மாவகை நான்கு மேவிய தென்ப
வீவோற் பற்றி யிசையு மிடனே." என்பது.

அக்குடஞ், சிறார்விரும்பு மிடத்திருந் தளித்தலி னிருக்கையு மளிக்குமிடனு நிலையாமை யுடைத்து.

ஆசிரியனல்லாதான், சிறிதுபொருள் கொடுப்பினு நியம மின்றி, மாணாக்கர் விரும்புமிடன் யாதாயினு மாங்குச்செல்லு மியல்பினன்.

அப்பனை, கள்ளீயுமிடத்துத் தன்முக மறையாதாயினு மட் டையா னவர்முக மறைத லுடைத்து.

அத்தெங்கு, மட்டையூழ்க்குமிடத்துக் கொள்வோர் முகத் தை மறையாவிடினு மவர்மேனோக்கிப் பாராமையிற் றன்முக மவர்க்கு மறைத லுடைத்து.

அப்பருத்தி, யளிக்குமிடத்துச் சிறார் விரலாற்பற்றிச் சிதைத் தலி, னவர்முகந் தனக்கு மறைதலுடைத்து.

இவ்வாற்று னல்லாதான திடத்தின் றன்மை யறியப்படு மென்பது.

இனிக் கொள்வோனைப்பற்றிக் கொள்ளுநிலை னுரைக்கற் பாற்று.

அது கொள்வோரை வரையாமையு, மல்லாதானை வரை வுங், கொள்வோ ருடன்பாடு பெறினு மல்லாதாரை வரைவுங்,

கொள்வோ ருடன்பாடு பெறுவிடத்து மவருள் யாவரையும் வரை யாமையுமென நான்கியல் புடைத்து.

அவற்றுண் மலை, கொள்வோரை வரையாமையுட னல்லாதா ரையும் வரையாமை யுடைத்து. நில, னல்லாதாரை வரைவுங் கொள் வோருடன்படி னல்லாதாரை வரையாமையு முடைத்து. பூத் தேனளிக்குமிடத்துத் தும்பி விலக்கா துடன்பட்டவிடத்து மீமு தலாய பிறவற்றை விலங்கலி னக்குற்ற மின்மையு, மஃதுள்ளி ருக்குமிடந் தேனைத்தும்பியை விலக்கலி, னதனுடன்பாடு பெறு மிடந் தேனைத்தும்பியை வரையுங் குற்றமு முடைத்து. துலாக் கோல், கொள்வோ ருடன்பாடு பெறுவிடத்தும் வணிக னுடன் படினும், யாவர்க்கு முரிமை யுடைமையி னக்குற்ற மின்று.

இவ்வாற்று னம்முக்குற்றமு மின்மையி னந்நான்கியல்பு மொருங்குடைய நிலத்திருந்தளித்த லவனியல்பென்பது பெறப் பட்டது.

இனி யுரைப்பாட்டு,

"கொள்வோர் தம்மை வரையா வியல்பு
மல்லா தாரை வரையு மியல்புங்
கொள்வோ ரிணங்கிக் கூட்டி வரினு
மல்லா தார்வந் தணுகா வியல்புங்
கொள்வோ ரிணங்காது தள்ளின ராயினு
மவருள் யாரையு மகற்று வியல்புமென
வாவகை நான்கு மேவிய தென்ப
கொள்வோர்க் குறித்துக் கொள்ளு மிடனே." என்பது.

அந்குடங், கொள்ளுஞ் சிறுரு ளொருவன் செல்லு மிடத் திருத்தலு, மேனைய சிறுரையு மல்லாதாரையும் வரைதலு முடைத்து. அப்பனை நல்லோ ரணுகாமையிற் கொள்வோ ருடன் படினு மேலோரை வரைத லுடைத்து. அத்தெங்கு, கொள்வோ ருடன்பட்டவிடத் தல்லாதாரை வரையாமை யுடைத்து. அப்ப ருத்தி சிறுருடன்படாவிடத் தேனோரை வரைத லுடைத்து.

இவ்வாற்று னாசிரியனல்லாதா னிருக்குமிட னுணரப்படும்.

இனிப் பொதுமைபற்றிக் கொள்ளுநில னுரைக்கற்பாற்று.

அந்நிலன் றூய்மையு மரச்செறிவு நற்காற்றும் வெப்பமின் மையு முடைமையு, நான்குபக்கமு மடைப்புடைமையு, முரைக் கும்பொருளை யீவோ னுள்ளத் தமைத்தற்குங் கேட்டபொருளைக் கொள்வோர் சிந்தனை செய்தற்கும் வேறுவேறிடமு மவ்விருவ ரும் போதல்வருதற்கு வேறுவேறுவழியு முடைமையு, நூல்வைத் தற் கதனை யடுத்தூன்றி விதானந் தாங்கிநிற்குங் காலுடைமையு மென நான்கியல்புடைத்து.

அவற்றுண் மலை, தூய்மைமுதலாயின வுடைத்து. நாற்பக் கத்து மடைப்பின்று. நில னாற்பக்கத்தும் வரம்புடைத்து. தனக் குங் கொள்வோர்க்கும் வேறுவேறிடனும் வழியு மின்று. பூந், தும்பி யிருத்தற் கிதழாகிய விடத்தையு மதற்களிக்குந் தேனிருந் தற்குக் காம்பாகிய விடத்தையும் வேறுவே றுடைமையுந், தும்பி நுழைதற்குந் தேனூறுதற்குங் காம்புமுகமுமென விருபக்கத் தும் வழியு முடைத்து. அத்தேனிருக்கு மிடனாகிய காம்பை யடுத் தூன்றிக் கீழரும்பாகிய காணிற்பினு மக்கால் விதானந்தாங்கு லின்று, துலாக்கோல், தானளிக்கும் பொருளை யடுத்தூன்றி விதானமன்ன தூக்கினைத் தாங்கி நிற்குங் காலன்ன நாங்கு கயிற்றை யுடைமையி னக்குற்றமின்று.

இவ்வாற்று னம்முக்குற்றமு மின்மையி னந்நான்கியல்பு மொருங்குடைய நிலத்திருந்தளித்த லவனியல்பென்பது பெறப் பட்டது.

இனி யுரைப்பாட்டு,

"தூய்மைநற் காற்றுச் சுடர்வெம்மை யின்மை
மரச்செறி வின்ன வுறப்பெறு தன்மையு
நான்குபக் கத்து மோங்கிய வடைப்பு
மீவோன் கொள்வோ னிருவரும் போதல்
வருதற்கு வேறு வழியிரண் டாத
னூலுங்கொள் வோரும் வாலிதி னிருத்தற்
கிடனிரண் டாதல் கடனென வுடைமையும்
வெயின்மழை தடுப்ப விதானந் தாங்கி
யடுத்தூன்று கால்பல தொடுத்து நிற்றலு
மாகைக நான்கு மேவிய தென்ப
பொதுமை குறித்துப் புகலு மிடனே." என்பது.

அக்குடந் தூய்மைமுதலாயின வில்லாவிடத்திருக்குங் குற்ற முடைத்து. அப்பலகை நான்குபக்கத்து மடைப்பில்லாத குற்ற முடைத்து. அத்தெங்கு, கொடுக்கும்வழிப் பாளையி னடியினூறிய கள்ளினை நுனிக்கட் கொடுக்கும் பனைபோலன்றி மட்டையை யஃதுள்ள விடத்தே யூழ்க்குங் குற்றமுடைத்து. அப்பருத்தி, விதானந்தாங்கி யடுத்தூன்றிநிற்குங் காலில்லாத குற்றமுடைத்து.

இவ்வாற்று னல்லாதா னிருக்குமிடன் யாதானுமொரு குற்ற முடைத்தா மென்பது பெறப்பட்டது. இப்பொருட்கு மலைமுத லாயின பிண்டவுவமம். கழற்குடமுதலாயின தனியுவமம்.

இனி யைந்தாவதாகிய காலத்தியல் புரைக்கற்பாற்று.

அக்கால, மாசிரிய னென்றுமுரைக்கு மியல்பின னாயினும் பிறகாரணங்களா லீத னிகழாமைபற்றி வரைவுடைத்து.

அவ்வரைவு * வேண்டியகல்வி யாண்டுமூன்றிறவா தென்பது உம் பிறவுங் குறித்துக் கொள்வோனும், வேள்வியும் பிறவுங் குறித் தீவோனு, நோய்முதலாயின குறித் திருவரும் பிரிதலி னீகையொழிதற் பாலதாய பிரிவுவரைவும், வேனிலு நண்பகலு முதலாய காலத்துக் கூரியர் சிந்தையுங் கூம்புமாற்றானும் வைக றை யெற்பா டிடையாமமென்னுஞ் சிறுபொழுது நித்தகருமத் துக்கு முலகியற்கு முறக்கத்துக்கு மின்றியமையாது வேண்டப் படலானு மீகையொழிதற் பாலவாய பெரும்பொழுதுவரைவுஞ், சிறுபொழுதுவரைவு, மளித்தற் குரிய வேனைப்பெரும்பொழுது சிறுபொழுதினு முவாமுதலிய காலத்தை நூல்விலக்கலி, னீகை யொழிதற்பாலதாய விலக்குவரைவுமென நான்கு.

அவற்றுண் மலை, யருவியை யென்றுமளிக்கு மியல்பிற்று யினு முடற்குப் பொருந்தாமையாற் கொள்வோர் பிரிதலு முண் மையி னஃதன்ன பலகாரணத்தாற் பிரியும் பிரிவுவரைவு, மிது வெம்மைக்கால மாகலி னளித்தலாகாதென்று நீக்காமையிற் பெரும்பொழுது வரையாமையு முடைத்து.

நிலன், வேனிற் பெரும்பொழுது வளனீயாது காய்தலி னக்

* தொல், பொருளதிகாரம், கஅஅ.

குற்ற மின்மையு, மளிக்குங்காலத்து நண்பகன்முதலாய சிறுபொ ழுது மளித்தலிற், சிறுபொழுது வரையாமையு முடைத்து.

பூ, நண்பகன் முதலாயபொழுதி னளியாது காலையினு மாலை யினு மளித்தலி னக்குற்ற மின்மையு, மஃதளிக்குங் காலத்தைப் பிறர்விலக்கிற் கேளாமையு முடைத்து.

துலாக்கோல், கோடற்குங் கொடுத்தற்கு முரிய காலத்தும் விழாமுதலாய குறித் தரசன்விலக்கி னளியாமையி னக்குற்ற மின்று.

இவ்வாற்று னம்முக்குற்றமு மின்மையா னந்நான்குவரைவு மொருங்குடைய காலத்தா லவைநான்கு மவனுக்குப் பிண்ட வுவம மாயினவென்பது.

இனி யுரைப்பாட்டு,

"பிரிவின் வரைவும் பெரும்பொழுது வரைவுஞ்
சிறுபொழுது வரைவுந் தெள்ளியோர் விலக்கலின்
வரைவு மென்ன வுரைபெறு நான்குங்
கால முடைத்தெனன் மேலையோர் துணிவே." என்பது.

அக்குட, நோயுறினுஞ் சிறார் விளையாட்டை மறவாமையிற் பிரிவுவரைவை யின்று. அப்பனே, வேனிற் பெரும்பொழுதின் மிகவளித்தலி னவ்வரைவை யின்று. அத்தெங்கு, நண்பகலினு மூழ்த்தலி னவ்வரைவை யின்று. அப்பருத்தி, யுவாமுதலாய காலத்தையும் விலக்காமையி னவ்வரை வின்று.

இவ்வாற்று னல்லாதா னிக்காலத்தீகை தக்க திக்காலத்துத் தக்கின்றென வறியாம லீவானென்பது பெறப்பட்டது.

இனி யாறுவதாகிய கருவி யுரைக்கற்பாற்று.

ஈண்டுக் கருவியெனப்படுவ தேதுப்பொருண்மை யாகலிற், பிறகாரண மெல்லாமிருப்பினு மீவோன தருளின்றே லீகை நிக ழாமையி னவ்வரு ளவ்வீகைக்குக் கருவியாமென்பது.

அக்கருவி காரணமின்மையானுய வியற்கையருளுங், குறிப் பறிந் தொழுகன்முதலாய பணிசெயலானும், பொருண்முதலாய கொடுத்தலானு, மின்சொற் கூறலானு, மொன்றற் கொன்று மிகுதற்பாலவாய மூவகைச் செயற்கையருளுமென நான்கு.

அவற்று ளியற்கையருளின்றேற் பணிசெயன்முதலாய கார ணமில்வழிக் காரியமாய செயற்கையருளு மின்மையா னீத னிக ழாமையானுஞ், செயற்கையரு ளின்றேன் மாணுக்கர் செய்யும் பணிமுதலாயின பயன்படாம லவர்க் கறமளியாமையானு, மாசி ரிய னியற்கை யருளொடு மூவகைச் செயற்கையருளு முடைய னுத லுணரப்படும்.

அவற்றுண் மலை, யியற்கை யருளா னருவிநீ ரீதலுடைத்து. பணிமுதலாயின செய்யி னதுபற்றி முன்னினு மிகக்கொடுத்த லில்லாக் குற்றமு முடைத்து.

நிலை, னுழவுமுதலாய பணி நன்குசெய்யி னதற்குத்தக வியற் கையருளாற் கொடுத்தலினு மிகக்கொடுத்தலி னக்குற்றமின்மையு மின்சொற்கூறி னதற்குத்தகக் கொடுத்தலின்மையு முடைத்து.

பூத், தும்பிக்குத் தன்னைத் தலையான் வணங்கிப் புறந்தை வரலாகிய பணிசெயலினு மிசைபாடி யுட்புகின் மிகக்கொடுத்தலி னக்குற்ற மின்மையு, மத்தும்பி பிறிதொரு பூவிற்பெற்றுச் சிறக ரிற் பொதிந்த மகரந்தங் கொடுத்தவிடத்து மிகக்கொடாமையி னக்குற்றமு முடைத்து.

துலாக்கோலையந்திரல்குறித் தின்சொற் கூறி வேண்டினுர்க் கவர்தருபொருளை நிறுத்தளித்தலினும், விலைகொடுத்தார்க்குத் தன்பொருளை யினிது நிறுத்தளித்த லுடைத்து.

இவ்வாற்று னம்முக்குற்றமு மின்மையி னந்நான்கியல்பு மொருங்குடைய கருவி பெறப்படலி, னவை யவனுக்குப் பிண்ட வுவம மாயின வென்பது.

இனி யுரைப்பாட்டு,

"இயற்கை யருளும் பணியின்மிகு மருளு
மின்சொலின் மிகுத லியல்புறு மருளும்
பொருள்பெறு வகையின் விரிவுறு மருளுமென
நல்கலின் கருவி நால்வகைத் தென்ப." என்பது.

அக்குடம், பெய்தபின்னரே கொடுத்தலி னியற்கையி னரு ளின்று. அப்பனை தன்னடிதொட்டுப் பணிந்தகாலை யளியாது

மேலேறிக் கருவியான் மடல்சீவிய பின்னரே யளித்தலிற் பணி செயலி னருளின்று. அத்தெங்கு, தன்பக்கனின் றின்சொற் கூறினு பலராமையி னின்சொலி னருளலே யின்று, அப்பருத்தி தனக்கு நீர்பெய் துபசரித்தகாலே யளியாது தன்றலே தகர்த்தபின் னரே யளித்தலிற் பொருள்பெறி னருளலே யின்று.

இவ்வாற்ரு னல்லாதா னவாவு மச்சமுங் காரணமாக வளிப்பி னன்றி யறங்காரணமாக வளியாமை பெறப்பட்டது.

இனி யேழாவதாகிய வின்னதற்கென்னுங் கொள்வோரியல் புரைக்கற் பாற்று.

அது கொள்வோன் றன்மையென்பதன்க ணுரைக்கற்பாற் றெனி, ஞண்டுக் கோடற்ருெழில்பற்றி மாணுக்கனுக்கு வேண்டு மியல் புரைக்கப்படு மாகலி னாசிரியன தீதற்ருெழிற்கண் வேண்டு மியல் பீண்டுரைக்கப்படு மென்பது.

இனிக் கொள்வோர் யாவராயினு மாசிரியன் வரையாது கொடுக்கு மியல்பினனாயினு, முயற்சியின்மை முதலாய காரணத் தா னீகை பயன்படாமைபற்றிக் கொள்வோரை யவன் வரைத லுடையன்.

அவ்வரைவு முயற்சியின்மையான் வரைவுங், காலமின்மை யான் வரைவுந், தீவினையுடைமையான் வரைவு, மறிவின்மையான் வரைவுமென நான்கு.

அவற்றுண் மலே, முயலாதார்க் களியாமையி னவ்வரைவுங் காலந்தப்பி முயலினு மளித்தலி, னவ்வரைவின்மையு முடைத்து.

நிலன், காலந்தப்பி முயலி னளியாது பருவத்தே யளித்தலி னக்குற்ற மின்மையுந், தீயார்முயலினு மளித்தலி னவ்வரைவின் மையு முடைத்து.

பூ, நெய்த்தோர்முதலாயவு முண்ணுந் தீவினையுடைய வீமுத லாயவற்றுக்குத் தேனுண்ணு மியல்பு மிருப்பினு மதனையளியாம லிசைபாடிப் புறந்தைவந்து பின்னிலேமுனியாது நன்னிலே நின்ற தும்பிக்கே யீதலி னக்குற்ற மின்மையு, நறுமண முடைமையாற்

றலைமிசைச் சூடற்பாற்றென வறியாத வத்தும்பிக் கத்தேனுடன் மகரந்தமு மளித்தலி னறியாமை கண்டு வரைதலின்மையு முடைத்து.

துலாக்கோல், பூவைபோல வறியாதார்க் களித்தலின்றி, நிறையும் விலையும் பொருளு மறிந் துடன்பட்டார்க்கே யளித்தலி னறியாதாரை வரைத லுடைத்து.

இவ்வாற்று னக்குற்ற மூன்றுமின்மையா னந்நான்குவரைவு மொருங்குகருதுத லாசிரியன தியல்பென்பது பெறப்பட்டது.

இனி, யுரைப்பாட்டு,

" முயற்சி யின்மையின் வரைவுங் கால
மன்மையின் வரைவு மல்லசெயலின் வரைவு
மறியாமை நாடி யப்பொருள் வரைவெனத்
தள்ளா நான்குங் கொள்வோர் வரையே." என்பது.

அக்குடங், கல்வி செல்வமென்னு மிருவகைப்பொருளுள் யாதானு மொன்றுபெற முயலாச்சிறுவர்க் களித்த லுடைத்து.

அப்பனை, கற்றற்குரிய காலமாகாத வேனிலின் மிகக்கொடுத்தலுடைத்து.

அத்தெங்கு, தீவினையோம்புமா றடுதொழி லுடையார்க் களித்தலுடைத்து. தீவினையோம்பல், தீயா லூணடுதொழி லோம்பலுந், தீவினையாகிய கொலைத்தொழி லோம்பலுமாம்.

அப்பருத்தி, பஞ்சினை யாடைக்காமென் றுணராது கோதென் றெறிந்துவிடுஞ் சிறார்க்களித்த லுடைத்து.

இவ்வாற்று னல்லாதான் முயற்சியின்மை முதலாயின கருதிக் கொள்வோரை வரையாமை பெறப்பட்டது.

இனி யீற்றினின்ற பயனுரைக்கற் பாற்று.

அப்பய, னளித்தபி னவ்வீகை யெல்லாரானு நன்குமதிக்கப்படுதலுங், கொள்வோனு னன்குமதிக்கப்படுதலு, மதனை யவன்பெற்றடைந்த பயன் காரணமாக வீவோனுக் கிம்மையி லுளதாய பயனு, மீதல் காரணமாக விம்மை மறுமை யிரண்டினு முளதாய பயனுமென நான்குவகைப்படும்,

அவற்றுண் மலை, நிலையிற் றிரியா தளிக்குந் தோற்றத்தா னெல்லாராலுங் காணப்படுங் காட்சியுடைத்தாயினு படங்கா துயர்ந்து நிற்றலுங் கண்செல்லு மளவினன்றிக் கண்செல்லா விடத்துக் காணப்படாமையு முடைத்து. அஃதல்லாம லருவிநீ ரளித்துக் கொள்வோரைத் தாகந் தீர்த்துக் காப்பினுந், தன்மு னன்றித் தன்னிற் பிரிந்துபோயபி னவரைக் காவாமையு முடைத்து.

ஆசிரிய, னிலையிற்றிரியாமையோ டடங்கி யளித்தலானுங் கண்செல்லு மளவுகடந் தறிவுசெல்லுந்துணை யுலகமெல்லா நன்கு மதிக்கும் புகழுடைய னாதலானுந், தானிருக்குமிடத் தன்றித் தன்னிற் பிரிந்து போயபின்னு மாணாக்கனைத் தான் கற்பித்த வண்ண நிற்கவைத்துக் காத்தலானு † மலையினு மாணப் பெரிய னுவன்.

நில, னுழவர்க்குக் காலத்தினாற் செய்தவளன் சிறிதேயெனி னு மவ்வளன் மலைவளன்போ லன்றி யடங்கிச் சேமித்து வைக் கப்படுதலி னது கண்செல்லா விடமாயினுங் காணப்படுதலுந், தானிருக்கு மிடத்திற் காத்தலே யன்றி யவர்செல்லு மிடத்துஞ் சென்று காத்தலுமுடைத்து. அத்தன்மையோ டொருபிறப்பா யினு முற்றக்காவாமற் சிலயாண்டே காத்தலுந், தன்னைத் தாங்கி யளிக்கும் வானத்துக்குக் கைம்மாறு செய்யாமையு முடைத்து.

ஆசிரியன் மாணாக்கர்க்குக் ‡ காலத்தினாற்செய்த நன்றி சிறிதே யெனினு மந்நன்றி,யோருமைக்கட் சிலயாண்டே யன்றி முற்றக் காத்தலு, மப்பிறப்பே யன்றி யவர்க் § கேழுமையு மேமாப்புடைத் தாகலு முடைமையானுங், கல்விபளித்த தன்னைப் பணிமுதல செய்து தாங்கி யாதரித்த மாணாக்கர்க் கறமும் புகழுமாகிய கைம் மாறளித்தலானு ‡ ஞாலத்தினு மாணப்பெரிய னுவன்.

பூ, நிலன்போலன்றித் தாங்கிய கூந்தற் கறமெனத் தானினை யும் புகழெ னநறுமணனையு மளித்தலுந், தானழிந்த பின்ன ரவை நில்பகலே நிலையலி னக்கூந்த லிருக்குந்துணை யளியாமை யுந், தும்பிக்குத் தேனை யளிப்பினு மவ்வினைகையாற் றான்பயன் பெறா மையு முடைத்து.

---

† திருக்குறள், ௯௨௪, ‡ ஷை ௯0௨, § ஷை ௬௪௮.

ஆசிரியன், பூதவுடல் பொன்றினுந் தாங்கிய வையமிருக்குந் துணைப் புகழுடலை நிறுத்தலுங், கல்வியை யளித்தலின் பயனாக வறம்பொருளின்பமும் வீடும் பெறுதலு முடையனாகலி னப் பூவினு மாணப்பெரிய னவன்.

துலாக்கோல், பூப்போலன்றித் தன்னைத்தூக்கி நிறுத்த வணிகனுக்குத் தானழிந்தபின்னு மூதியப் பொருளையும் வணிக னென்னும்பெயரையு நிலைபெறச் செயலு, மளிக்குமிடத்து விலைப் பொருளைப் பயனாகப் பெறுதலு முடைத்து. அப்பெற்றித்தாய வக்கோலாற் கிடைத்த வூதியமும் விலையுமாகிய பொரு ளழிதன் மாலையவாய்க் குறைதலு, மக்கோலா னெய்திய வணிகனென்னும் பெயர் பிறிதொரு தொழிலை மேற்கொள்ளுமிடத்துக் கெடுதலு முடைய.

ஆசிரிய னூதியமாகவும் விலையாகவும் பெற்ற வறமும் புகழு மின்பமுங் கல்வியு மழிதலின்றி மேன்மேலும் வளர்தலானு, மவ னளித்தற் றொழிலி னீங்கித் தவத்தினை மேற்கொண்டு செல்லினு மப்புகழ் நிலைத்தலானுந் துலாக்கோலினு மாணப்பெரிய னவன்.

இவ்வாற்றாற் பயன்பற்றி யவைநான்கு மொருங்குகூடி யவனுக் கொருவகையாற் பிண்டவுவம மாயின வென்பது.

இனி யுரைப்பாட்டு,

" உயர்நன் மதிப்பு முவந்தடைந் தாரை
யுறுதி யுறுத்தலு முயர்புகழ் நிறுத்தலு
மறம்பொரு ளின்பம்வீ டடைதலு மென்னத்
திறன்படு நான்கு முரன்பட வளித்தற்
கெய்திய பயனெனன் மெய்பெறத் தோன்றும்." என்பது.

அக்குடங், கழலளித்தல்பற்றி நன்குமதிக்கப்பட லின்று. அப்பனை, கள்ளாற் பசிதீர்ப்பினு மறிவுமயங்கலி னடைந்தாரை யுறுதியுறுத்த லின்று. அத்தெங்கு, தானழிந்தபின்னர்ப் பாளை யீனுமையாற் றன் வித்தினின்று பிறிதொருதெங்குளதாகச்செய்து தன்பெயர் நாட்டலின்று. அப்பருத்தி, தனக்குள்ளிருக்கும் பொருளைத் தானளித்தற்குப் பயனாகக் கேடன்றிப் பிறிதொன் றும் பெறலின்று.

இவ்வாற்றா னஃலாதானதுபய னறியப்படு மென்பது.

இனி யீண்டுக்கூறிய மடன்முதலாயவற்றின் பொருளு மவற்றின் றன்மையு மொக்குமாயினு மடற்பனைக்கு முடத்தெங்கிற்கு நன்னூலார் முதலாயினோர் கூறிய பொருளை மறுத்தல் கூடாது. என்னை? பெரும்பாணாற்றுப்படையுள் †வண்டோட்டுத் தெங்கின் வாடுமடல் வேய்ந்த மஞ்சண் முன்றில் எனவும், புறநானூற்றுள் ‡நெல்லின கழனிப் படுபுள் ளோப்புந, ரொழிமடல் விறகிற் கழிமீன் சுட்டு எனவு, மடலோச்சி யெனவுங் கூறுமாற்றான், மடல்; தென்னம் பழுத்தலையும் பனங்கருக்கினையும் பிறவற்றையு முணர்த்தும் பலபொரு ளொருசொல்லாகலானெனின்; அது பொருந்தாது. என்னை? புலர்ந்த தென்னம்பாளையை யார்கைக்குக் கருவியாமாறு வார்போலக் கிழித்துப் பனையோலை தெங்கினோலை யீத்திலை முதலாயவற்றைப் பிணித்துக் குடின்முதலாயின வேய்தலும், படுபுள்ளோப்புஞ் சிறாருஞ் சிறுமியரும் கழனிக்கட் பனைமேலேறி யக்கருக்கினைக் கொள்ளாமற் றானே கழிதற்பாலதாகிய பனம்பூவென்னு மடலிற் கனல்கொளுத்தி யக்கனலின் மீன்சுடலும் வழக்காகலின், வாடுமட லென்றமையா னுலர்ந்த பாளையம்பூவானுந் தெங்கின் வண்டோட்டானும் வேய்ந்த முன்றிலெனவு, மொழிமடலென்றமையாற் றானே கழிவதாகிய பனம்பூவெனவும் பொருள்கோடலே சிறக்குமாகலானு, முன்னரு மவ்வாறே கொழுமடலானு மீத்திலையானும் வேய்ந்த குரம்பையெனப் பொருள்படுமாறு கொழுமட லீத்திலை வேய்ந்த வெய்ப்புறக் குரம்பையென்றமையானு, மொழிமட லென்றிற் பனங்கருக்குத் தானே கழிதலின்மையிற் றானே கழியும் பனம்பூவாகிய மடலையே யுணர்த்துமாகலானு, மீன்சுடற்குப் பனங்கருக்கினைக் கொள்ளினது மிக்கெரியுமாகலின் மீன்சுடுபத நன்கறியப் படாமையானும், பனம்பூவாயிற் பொற்கொல்லர திருந்தைத்தீப்போலெரியுமாகலின் மீன்சுடல்வினை செவ்வன நடைபெறுமாகலானு, மாண்டு மடல் பாளையேயாகலு, மடலோச்சியென்னுமிடத்துப்பாளையை யுணர்த்தாமன் மட்டையை யுணர்த்தினு மஃதாகுபெயராக லன்றி யியற்பெயராகாமையு, மாகுபெயரான் வாடுமட லொழிமடன் முதலாய வற்றுக் கவ்வுரையாள ராண்டுக்கூறியவு மொக்குமாயினு மீண்டுக் கூறி னுவமம் பொருந்தாமையு, மாகுபெயரன்று பிறவற்றுக்கு

† ௩௫௪ வது அடி. ‡ ௨௯ வது பாட்டு.

மிபற்பெயராகிய பலபொரு ளொருசொல்லெனக் கொள்ளினு மீண்டுப் பிறபொரு ளேலாமையு முணரப்படுமாகலி னென்பது.

இன்னுஞ் சிந்தாமணியின் * மடற்பனைக் குழாத்திற் பிச்ச நிரைத் தன மன்னர் சூழ்ந்து எனவுங், † கோடிபெழுங் தலமருங் கோயில்வா யில்கண் மடலெழுங் தலமருங் கமுகும் வாழையு மெனவும், § பொன் மடலங் கமுகி னூச லெனவும பலவிடத்துக் கூறுமாற்றானும், பிறாண்டும் பலவிடத்து மடல் பாளையே யுணர்த்தலானும், பெரும் பாணாற்றுப் படையுட் $ பரியரைக் கமுகின் பாளையம் பசும்பூக் கரு விருந்தன்ன வென்றமையாற் பாளையென்பது கமுகு தென்னை பனை யீந்து முதலாயவற்றின் பூவாமென் றுணரப்படுமாகலானு, மீண்டுப் பாளையெனக்கோட லிழுக்கின் றாகலு முணர்க.

இனிப் பொருநராற்றுப்படையுண் ‡ முடக்காஞ்சிச் செம்மருதின் மடக்கண்ண மயிலால வென்னுமிடத்து வளைந்த காஞ்சி யெனப்படு மன்றி முடம்பட்ட காஞ்சியெனல் கூடாமையி, னது வினையை யுணர்த்தாதென்றமை பொருந்தாதாம் பிறவெனின்; அங்ஙனங் கூறலமையாது. என்னை; சிந்தாமணிக்கட் டழங்கு குரலென்பது || தழங்குரற் பம்பையிற் சாற்றியெனவு, மிடுங்குகண் ணென்ப திடுக்கணெனவுங், குறளி லிரக்கத்தக்காரென்ப ¶ திரத் தக்காரெனவும் வந்தாற்போல முடங்கென்னும வினைச்சொல்லே காஞ்சியொடு புணர்ந்து முடக்காஞ்சி யென்றாயதல்லது முடம் வினைச்சொற் பொருள்பட் டாங்குவாராமையா னென்பது.

இனி யீண்டுமவ்வாறு முடங்குதெங்கென்பதே முடத்தெங் காயிற்றெனக் கோடுமெனி, னுவமத்திற் கேலாமையி னது பொருந்தா தென்பது.

இனிக் குடவென்னுஞ் சொல் குடங்கையெனவுங் குடா வடியெனவுங் குடவுக்கோடெனவுங் குடமெனவும் வருதலி னவ் வாறே முடவென்பதூஉ முடமெனவு முடங்கெனவு முடவுக்கோ டெனவு முடக்காஞ்சியெனவும் வந்ததெனக் கோடுமெனி, னது பொருந்தாது. என்னை? குடவென்பது குடவென்னு முரிச்சொற்

---

* இலக்கணையாரிலம்பகம். † ஷை. § கனகமாலையாரிலம்பகம். $ ௭-வது அடி. ‡ ௧௮௯-வது அடி. || நாமகளிலம்பகம். ¶ ௧௦௫௧.

போன்று * கோட்டஞ்செய்யு முரிச்சொல்லாகலி, ௩௦ ‡ திசையினுங் குறிப்பினும் பண்பினுந் தோன்றிப் பெயரினும் வினையினு மெய்தடுமாற வினையுமன்றி முடமென்பது வளைவுபற்றிய காரணப்பெயராகாமற் சிதடு செவிடென்றாற்போல வோர் குற்றமுடைய சினைப்பெயராகவே வழங்கலினென்பது. அல்லதூஉஞ் சங்கஞ்செடியினை யாஞ்சிலென்று மாஞ்சியென்றும் பிடகநூல் வழங்குமாகலின், மணிச்ச ரணுகாவண்ண முடக்கினையுடைய ஆஞ்சில்சூழ்ந்த செம்மருதெனப் பொருள்கோடலே சிறத்தலுமுணர்க. ஆஞ்சி சிறியதளிக்கிளையுமாம். இனி யஞ்சப்படுவதனை யாஞ்சியென்பதூஉ நூல்வழக்காகலி னஞ்சிச்செம்மருதெனக் கோடலே தக்கது. இதனைப் பொருளதிகாரத்திற் † பேஎத்த மனைவி காஞ்சியானு மென்புழி மனைவியஞ்சின ஆஞ்சிக் காஞ்சியென நச்சினார்க்கினியருரைத்தமையானு முணர்க.

இனிப் பல்வகைப்பொருளு மடங்குமாறு மலை நிலம் பூவே துலாக்கோலெனவுங், கழற்பெய்குடமே மடற்பனை முடத்தெங்கு குண்டிகைப்பருத்தியெனவு, நிரனிறைவகையா னொன்றற்கொன்று மறுதலையாகப் பிண்டவுவமங் கூறிய முதனூலாசிரியன் கருத்தினை நோக்காது, நச்சினார்க்கினியர் முதலாயினார் கூறிய வுரையினைத் தழுவி, நன்னூலார் சொற்பொரு ளுணராமையேயன்றி * நில மலை நிறைகோன் மலர்நிகர் மாட்சி யெனவுங், $ கழற்குட மடற்பனை பருத்திக்குண்டிகை முடத்தெங்கொப்பெனவு நிரனிறை சிதைத்துத், தன்மையுந் தாம்வேண்டியவாறே கூறித் தனியுவம மாக்கினார்; அது பொருந்தாமை காட்டுதும். அவர்,

* "குலனரு டெய்வங் கொள்கை மேன்மை
கலைபயி றெளிவு கட்டுரை வன்மை
நிலமலை நிறைகோன் மலர்நிகர் மாட்சியு
முலகிய லறிவோ டுயர்குண மினையவு
மமைபவ னூலுரை யாசிரி யன்னே." எனவும்,

$ "மொழிகுண மின்மையு மிழிகுண வியல்பு
மழுக்கா றவாவஞ்ச மச்ச மாடலுங்
கழற்குட மடற்பனை பருத்திக் குண்டிகை
முடத்தெங் கொப்பென முரண்கொள் சிந்தையு
முடையோ ரிலரா சிரியரா குதலே."

எனவுங்கூறினார்; அது பொருந்தாது. என்னை? ஆத்திரையன் பேராசிரியனுரைத்தாங்குத், தன்மைமாத்திர மெடுத்துக்கூறி

* தொல், சொல்லதிகாரம், ௬௨௧. ‡ ஷை ௨௧௯. † ௭௧.
* பொதுப்பாயிரம் ௨௬. $ ஷை ௩௧.

யிவற்றை யுடையோ னிவனெனல் வேண்டும்; அன்றேன் முதனூ லாசிரிய னுரைத்தாங்கு மலைமுதலாய வுவமமாத்திரங் கூறி யவற் றை யின்னின்ன தன்மையானொப்பா னிவனெனச் சுட்டியாயினுஞ் சுட்டாம லாயினுங் கூறல்வேண்டும்; அவ்வாறன்றிக் குலன்முத லாகச் சிலதன்மை விதந்துகூறி யுவமமு முடன்கூறினமையின் விதந்து கூறியவன்றிப் பிறதன்மையே யுவமையாற்பெறவைத்தல் வேண்டும்; அவ்வாறுமின்றிச் சில விதந்துகூறி யுவமையுங்கூறி விதந்துகூறியவற்றுட் சில வுவமத்திற் பெறவைத்தமையானு மங் ஙனங் கூறினு மீவேறன்றன்மை முற்ற வுணரப்படாமையானு மென்பது. இன்னுமவர்,

§ "தெரிவரும் பெருமையுந் திண்மையும் பொறையும்
பருவ முயற்சி யளவிற் பயத்தலு
மருவிய நன்னில மாண்பா கும்மே." எனவும்,

‡ "அளக்க லாகா வளவும் பொருளுந்
துளக்க லாகா நிலையுந் தோற்றமும்
வறப்பினும் வளந்தரும் வண்மையு மலைக்கே." எனவுங் கூறினர்.

அதுவும் பொருந்தாது. என்னை? தெரிவரும் பெருமை முதலாயின மலைக்கு, மளக்கலாகா வளவுமுதலாயின நிலத்துக்கு மொத்தலி, னவர்கூறியன வொவ்வொன்றற்கே யுரியவாகாமையா னென் பது. இன்னுமவர்,

|| "ஐயந் தீரப் பொருளை யுணர்த்தலு
மெய்ந்நடு நிலையு மிருநிறை கோற்கே." என்றார்.

அதுவும்பொருந்தாது. என்னை? நடுநிற்றலே, யையந்தீர்த் தலாகமுடிதலி னவை யிருவேறு குணமாகாமையி னென்பது. இன்னுமவர்,

‡ " மங்கல மாகி யின்றி யமையா
தியாவரு மகிழ்ந்து மேற்கொள மெல்கிப்
பொழுதின் முகமலர் வுடையது பூவே." என்றார்.

அதுவும் பொருந்தாது. என்னை? மங்கலவினைக்கே யன்றி மங்கலமாகாப் பிணவினைமுதலாயவற்றுக்கும் பூக்கோடலானும், பூவின்றியே யடைகாயுஞ் சாந்து மஞ்சளு முதலாயினகொண்டுஞ் சிலமங்கலவினை நடைபெறலானுங், † துறந்தார் வேண்டுங்கழுத்தர் முத

§ போதப்பாயிரம், உஎ. ‡ ஷை உஅ. || ஷை உகூ. ‡ ஷை ௩0.
† ஜினேந்திரமாலை மாநிமித்தகாண்டம்.

லாயினும் மகிழ்ந்து மேற்கோட லின்மையானு மென்பது. இன்னு மவர்,

* "பெய்தமுறை யன்றிப் பிறழ வுடன்றருஞ்
செய்தி கழற்பெய் குடத்தின் சீரே." என்றார்.

அதுவும் பொருந்தாது. என்னை? குடத்து ளெப்பொருள் பெய்யினு மப்பொருளை யக்குடந் தருமிடத்துப் பிறழக் கொடுத்த லியல்பாகலிற், பொருட்பெய்த குடமெனப் பொதுப்படக் கூறாது கழற்பெய் குடமென வொன்றனைச் சுட்டிக்கூற வேண்டாமை யானு, நல்லாசிரியனுந் தான்கற்ற முறையானன்றி மாணுக்க ரறிவுக்கேற்றவாறு வேறுமுறையாற் பிறழவுரைத்தலுங் கூடுமாகலானு மென்பது. இன்னுமவர்,

‡ "தானே தரக்கொளி னன்றித் தன்பால்
மேவிக் கொளக்கொடா விடத்தது மடற்பனை." என்றார்.

அதுவும் பொருந்தாது. என்னை? மடற்பனை காயுடைத்தன்றென மேற்கூறினுமாகலானு, மாணுக்கர்விரும்பிய தியாதாயினுங் கொடாம லவர்தகுதிநோக்கித் தானே தருவது நல்லாசிரியன்றன்மை யாதலன்றி யல்லாதான்றன்மை யாகாமையானு மென்பது. இன்னுமவர்,

§ "அரிதிற் பெயக்கொண் டப்பொரு டான்பிறர்க்
கெளிதீ வில்லது பருத்திக் குண்டிகை." என்றார்.

அதுவும் பொருந்தாது. என்னை? பருத்திக்குண்டிகைக் கது பொருளன்றென மேற் கூறினுமாகலானுங், கல்விப்பொரு ளறிவின் விகற்பத்துக் கேற்றவா றரிதாகவாயினு மெளிதாக வாயினுங் கொள்ளப்படுதலுங் கொடுக்கப்படுதலு முடைமையி, னரிதிற்கோடலுங் கொடுத்தலுங் குற்றமாகாமையானு மென்பது. இன்னுமவர்,

‡ "பல்வகை யுதவி வழிபடு பண்பி
னல்லோர்க் களிக்கு மதுமுடத் தெங்கே." என்றார்.

அதுவும் பொருந்தாது. என்னை? முடத்தெங்கிற் கது பொருளன்றென மேற் கூறினு மாகலானு, மவர் கூறிய வனைத்தெங்கும் வழிபடுவோர்க்கு மளித்தலானு, மல்லாதார்க் களித்தல்

* பொதுப்பாயிரம், கூ௨. ‡ ஷை கூகூ. § ஷை கூ௪. ‡ ஷை கூ௫.

சிறுபான்மையே யாகலானும், வளையாத தெங்கு மத்தன்மைத் தேயாகலின் வளைந்ததெங்கெனக் கோடலாற் பயனின்மை யானும், வழிபடுவோன் கொள்ளு மியல்பின னாகாவிடி னவற்களி யாமையு மல்லாதா னவ்வியல்புடையனாகி னவற்களித்தலு நல்லா சிரியற்கு மியல்பாகலானு மென்பது.

இத்துணையு மீவோன்றன்மை கூறப்பட்டது. இனி யீத லியற்கை யுரைக்கப்படும். ஈதலியற்கை யீவோன்றன்மையு ளடங் காதோவெனின், னத்தன்மையு ளீதற்பொருளியல்பு விளங்கித் தோன்றியாங் கீதற்சிறப்பியல்பு தோன்றாமையின் விளங்கற் பொருட்டு வேறுகூறினா ரென்பது.

இனிப் பிரமசரிய முதலாய நால்வகை நிலைபற்றிநிற்கு மாசி ரியனியல்பு கூறாமை யென்னையெனின்; அந்நிலை முற்கூறிய வின் னில்வகையினுந் துறவுநிலைவகையினு மடங்கலானு, மின்னோரன்ன விகற்பமுங் கூறப்புகின் வரம்பின்றியோடலானும், பிரமசரிய மலையானு மேனைய வேனைபவற்றானு முறைபானே யெளிதினுணர் தற்பால வாகலானு, மவைபோல்வன விண்டுக்கூறாவிடினுங் கூறி யகொண் டுய்த்துணர்ந்து கொள்ளப்படு மென்பது.

இனி யீதலியற்கை யென்னை யெனின்;

§ "ஈத லியல்பே யியல்புறக் கிளப்பிற்
பொழிப்பே யகல நுட்ப மெச்சமெனப்
பழிப்பில் பல்லுரை பயின்ற நாவினன்
புகழ்ந்த மதியிற் பொருந்து மோரையிற்
றிகழ்ந்த வறிவினன் றெய்வம் வாழ்த்திக்
கொள்வோ னுணர்வகை யறிந்தவன் கொள்வரக்
கொடுத்தன் மரபெனக் கூறினர் புலவர்" எனக் கூறுமாற்று [னறிக.

இனி யீவோன், றன்மகன்முதலாய வறுவகையாரு ளொரு வராகிச் செவ்வன் றெரிதன் முதலாய வறுவகைமாண்பு முடை யார்க்கே நூலினையீதல் வேண்டுமென லான்றோர் மரபு. என்னை?

‡ "தன்மக னாசான் மகனே மன்மகன்
பொருணனி கொடுப்போன் வழிபடு வோனே
யுரைகோ ளாளனோ டிவரென மொழிப." எனவும்,

§ ‡ தொல், பாயிரம், இளம்பூரணருரை மேற்கோள்.
* புகழ்ந்தநாவெனவும் பாடம்.

● " செவ்வன் றெரிகிற்பான் மெய்ந்நோக்கிக் காண்கிற்பான்
பல்லுரையுங் கேட்பான் மிகப்பெரிதுங் காதலான்
றெய்வத்தைப் போல மதிப்பான் றிரிபில்லா
னிவ்வாறு மாண்பு முடையார்க் குரைப்பவே
செவ்விதி னூலைத் தெரிந்து." எனவுங் கூறலானென்பது.

இனித் தந்தைக்கே முற்றுமுரிய கடப்பாடு மகற்குக் கல்வி பயிற்ற லென்பது,

* " தந்தை மகற்காற்று நன்றி யவையத்து
முந்தி யிருப்பச் செயல்."

என வள்ளுவனார் கூறலாற் பெறப்படலிற் றன்மகனைமுற் கூறினார்.

$ " எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லைச்
செய்ந்நன்றி கொன்ற மகற்கு."

என்றாராகலி னாசிரியன் செய்த நன்றி மறவாம லவன்மகற்குங் கற்பித்தல் வேண்டுமாகலானும், மக்கட்பாடு தன்மகன் பொருட்டாங் கடப்பாடுபோலத், தனக்கே முற்றுமுரித்தாகாமற் றன் னாசிரியன்மருங்கு தன்னொடுகற்ற வேனோர்க்கு முரித்தாகலானுந், தன்மகற்குப்பின்ன ராசான்மகனைக் கூறினார்.

|| " முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப் படும்."

என்றாராகலானு, மம்மன்னவன் கல்லானாகின் முறைசெய்து காப்பாற்றல் கூடாமையானு, மவனைக் கற்பித்தல் கற்றோர்க்கெல் லாங் கடப்பாடாகலானு, மக்கட்பாடு தனக்குந் தன்னொடு கற் றோர்க்குமன்றிப் பிறர்க்கு முரித்தாகலானு, மாசான்மகற்குப் பின்னர் மன்மகனைக் கூறினார்.

இனிக் கல்விக்குச் செல்வ மோராற்றானுந் தினைத்துணையு மிகரன்றாயினும்,

§ " தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்றெரி வார்"

என்றாராகலி, னதனைப் பனைத்துணையாக் கோடல் பெரி

---

● தொல்காப்பியம், பாயிரம், இளம்பூரணருரை மேற்கோள்.
* திருக்குறள் ௬எ. $ ஷை ௧௧0. || ஷை ௫௪௮. § ஷை ௧0௪.

யார்க் கியல்பாகலானும், பிறிதொரு கரும மேற்கொண்டுழியுந் தன்மகன்முதலாய மூவகையாரை மறுத்தல் கூடாமையானும், பொருணனிகொடுப்பானைத் துரோணனேகலவனை மறுத்தாங் கியாதானுமொரு காரணம்பற்றி மறுத்தலுங் கூடு மாகலானு, மம்மூவர்க்குப் பின்னர்ப் பொருணனிகொடுப்போனைக் கூறினார். அந்நால்வகையார்க்குங் கற்பித்த லாசாற்குக் கடப்பாடாகலொன் றேயன்றி, யவர் முற்றவறிந்தாராத லொருதலையன்றாகலானும், வழிபடுவோன் முற்றவறித லொருதலையாதலை யுதங்க னேகலவன் முதலானோர் சரிதத்தாலு முரைகோளாளன் முற்றவறித லொருதலையாதலை யிருக்குவேதத்துட் கூறிய வுத்தாலகன்மகன் சுவேதகேதுவு மருச்சுனனு முதலானோர் சரிதத்தாலு முணரப்படு மாகலானு, மவ்விருவகையாருள்ளும் வழிபடுவோனுக் குரைகோளாள னிகராகாமை யருச்சுனவேகலவர் சரிதத்தா லுணரப்படு மாகலானுங், கற்பிக்குங் கடப்பாட்டினேற்றக்குறைவுபற்றித் தன்மகன்முதலாய நால்வகையாரை முதலிற்கூறிக், கற்பித்தலின் றியும் வழிபாட்டின் பயனாகக் கல்வி தானே யுளதாதல் பற்றி, யவர்க்குப்பின் வழிபடுவோனைக்கூறிச், சிறப்புடைப் பொருளை முற்படக் கிளத்த லென்றாராகலி, னவற்குப்பின்ன ருரைகோளாளனையு முறையாற் கூறினார்.

இனிச் செவ்வன் றெரிதலே மெய்ந்நோக்கிற்கு மந்நோக்கே பல்லுரைகேட்டற்கு, மக்கேள்வியே காதலுக்கு, மக்காதலே தெய்வத்தைப்போல மதித்தற்கு, மம்மதிப்பே திரிபின்மைக்குங் காரணமாகலி, னம்முறையானே யவற்றைக் கூறினார்.

இனியாசிரியன் மாணாக்கர்க்காயினு மவையிலாயினு முரைக்கு மிடத்துக் கடியப்படுவா ரறுவகையர். என்னை?

|| "மொழிவ துணராதார் முன்னிருந்து காய்வார்
படிறு பலவுரைப்பார் பல்கா னகுவார்
திரிதரு நெஞ்சத்தார் தீயவை யோர்ப்பார்
கடியப்பட் டாரவையின் கண்." என்றாராகலின்.

இனி மொழிவதுணரு மாற்றலில்வழி, மனஞ்சென்றவாறே சொன்னிகழ்ந் திடர்விளைத்தலி னவரைமுன்னு, மாற்றலிருப்பி

|| தொல், பாயிரவுரை மேற்கோள், நச்சினார்க்கினியம்.

னுங் காய்வோராயிற் கலாங்கமுமாகலி னவரை யவர்பின்னுங், கா யாராயினும் படிறுளதே லவைக்கிழிவாகலி னவரை யவர்பின்னும், படிறின்றாயினு நகை யவமதிப்பைக்காட்டலினவரை யவர்பின்னு, நகாராயினு நிலையில்லா நெஞ்சத்தார் முற்றுங்கேளா திடையினுந் தாமினைத்தாங்குச்சென்று கட்டளையிறப்பராகலி னவரை யவர்பின் னுந், திரியாநெஞ் சுடையராயினுந் தீயவையெண்ணிற் கேள்வியா னும் பயனெய்தா ராகலி, னவரை யவர்பின்னு முறையானே கூறினார்.

இனியாசிரியனா லீதலைச்செய்யாது தள்ளப்படுவோ ரெண்மர். என்னை?

‖ "மடிமானி பொச்சாப்பன் காமுகன் கள்வ
னடுநோய்ப் பிணியாள னாறாச் சினத்தன்
றடுமாறு நெஞ்சத் தவனுள்ளிட் டெண்மர்
நெடுநூலைக் கற்கலா தார்." என்றாராகலின்.

இனிக் † குடியென்னுங் குன்றா விளக்க மவித், ‡ திடிபுரிந் தெள்ளுஞ்சொற் கேட்பித்துத் ¶ தன்னொன்னார்க் கடிமை புகுத்திவிடு மடியுடையாற் கெத்துணைக் கற்பித்தாலு மவன் கற்றற்கு முயலானாகலானுந்,

§ "தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு."

என்றாராகலின் முயலாதாற் கறிவூறாமையானு, மடியை முற் கூறினார். மடியிலனாயினு ‖ மாண்பிறந்த மானமுளதே லந்தணர் முதலாயினாரை வணங்காமையு முடிக்கப்படாதாயினுங் கருதியது முடித்தேவிடுதற்கருத்து முடையனாய்க் கல்விப்பயனை யிழத்தலி னவனைப் பிற்கூறினார். மடிமானமெனு மிவை யிலவராயினும் பொச் சாப்புளதேல்,

‖‖ "பொச்சாப்பார்க் கில்லை புகழ்மை யதுவுலகத்
தெப்பானூ லோர்க்குந் துணிவு."

என்றாராகலி, னதுபுகழைக் கொல்லுமாகலி னவனை யவர்க் குப் பிற்கூறினார். மடிமானம்பொச்சாப் பிலனாயினுங் காமுக னாயின்,

---

‖ தொல், பாயிரவுரை மேற்கோள், இளம்பூரணம்.
† குறள் ௬0௧. ‡ ஷை ௬0எ. ¶ ஷை ௬0அ.
§ ஷை ௩௯௬. ‖ ஷை [illegible]. ‖‖ ஷை ௫௩௩.

** "அறவினையு மான்ற பொருளும் பிறவினையும்
பெண்ணேவல் செய்வார்க ணில்."

என்றாராகலி, னவன்மாட் டறமுதலாயின வழிதலி னவனை யவர்க்குப் பிறகூறினார். அக்காமமு மில்லானாயினுங் கள்ளனுள் வழி,

¶ "அருள்கருதி யன்புடைய ராதல் பொருள்கருதிப்
பொச்சாப்புப் பார்ப்பார்க ணில்."

எனவும் ‡ கள்வார்க்குத் தள்ளு முயிர்நிலை யெனவுங்கூறினா ராகலி, னவனருளின்றி மறுமைப்பயனு மன்பின்றித்தன்னுடம்பு மிழப்பானாகலா னவனை யவர்க்குப் பிறகூறினார். அவையெல்லா மிலனாயினு மடுநோய்ப்பிணி யுள்வழி, † யறிவினை நீச்ச நிரப்புக் கோல்லு மெனவும், || வறியாரிருமை யறியாரெனவும், ¶ கொடிது கொடிது வறுமை கொடிதே, யதனினுங் கொடிதே யிளமையில் வறுமை, யதனினுங் கொடிதே யாற்றொணுக் கொடுநோ யெனவுங் கூறினாராகலிற், கற்பதன்கணூக்க மழித்தலேயன்றிக் கற்றனவு மழித்து மிக்க துன்புறுத்துமாகலி, னவனை யவர்க்குப் பிறகூறி னார். தனக்கேயன்றி யினத்துக்குக் கேடுபயவாமையுந் தனக்கு மொருதலையாகக் கேடுபயவாமையு முடைய நோயுமிலனாயினு மாறாச்சினமுள்வழி,

† "சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி யினமென்னு
மேமப் புணையைச் சுடும்." எனவும்,

§ "சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு
நிலத்தறைந்தான் கைபிழையா தற்று." எனவுங்,

§ காவாக்காற் றன்னையே கோல்லுஞ் சினமெனவுங் கூறினா ராகலி, னச்சின மினத்தையுஞ் சுட்டுத் தனக்குந்தப்பாது கேடுபயத் தலி, னவனை யவர்க்குப் பிறகூறினார். ஒருகாலைச் சுடப்பட்டார் பின்னருஞ்சுடாமற் காத்துக்கோடற்குரிய வச்சினத்தீயு மில்லா யினுந் தடுமாறுநெஞ்ச முள்வழிச், சினமுடையாரைப் போன்று

** திருக்குறள், கூ0௧. ¶ ஷை ௨௪௫. ‡ ஷை ௨௯0. † ஷை ௫௨௯.
† ஷை ௩0௬. § ஷை ௩0௭. § ஷை ௩0௫.
|| சிற்றம்பலக்கோவை. ¶ ஔவையார்பாடல்.

கடிதின் விலக்கக்கூடாமையாற் பன்னூலுந் தனக்கேயன்றித் தன்னோடு கற்பார்க்குந் தன்னாசிரியற்குங் கற்றோர் பிறர்க்கு மின்னல் விளைத்தலி னவரை யவர்க்குப் பிற்கூறினார்.

இனிக் கொள்வோன்றன்மை யுரைக்கற்பாற்று.

அது பயன்படலும் படாமையும் பற்றிக், கற்பித்தற்குத் தகுதியுடைத் தாகலானு மாகாமையானுங், கற்பிக்கப்படு தன்மையும் படாத்தன்மையுமென விருவகைப்படும்.

அவற்றுட், கற்பிக்கப்படு தன்மையுடையான் மாணாக்கனெனப்படுவான்; அத்தன்மை யில்லாதான் மாணாக்க னாகாதானெனப்படுவான்.

அவருட் கற்பிக்கப்படுவோ னாறுவமத்தா னுணரப்படுவான். என்னை?

‡ "அன்னங் கிளியே நன்னீர நெய்யரி
யானை யானே றென்றிவை போலக்
கூறிக் கொள்ப குணமாண் டோரே." என்றாராகலின்.

இனிக் கற்பிக்கப்படாதோனு மாறுவமத்தா னுணரப்படுவான். என்னை?

§ "குரங்கெரி விலங்கா யெருமை யாடே
தோணி யென்றாங் கிவையென மொழிப." என்றாராகலின்.

இனி நன்னீர மென்பது, நல்லநீர். நன்மையென்னுமடையீண்டுவர்நீரை யினஞ்சுட்டி விலக்கி யினியநீரை யுணர்த்திற்று.

இனி நெய்யரியென்பது வினைத்தொகைநிலைக்களத்துப்பிறந்த வன்மொழித்தொகை. நெய்தலென்பது, மயிர்போல்வனபல வைம்மைப்பொருளை யிணைத்தல். அரியென்பது, ஐம்மையையு மிரேகைமுதலாய பிறவற்றையு முணர்த்தும் பலபொருளொரு சொல். ஐம்மையை யுணர்த்தலை † யரிமயிர்த் திரண்முன்கை யெனப் பேய்மகளு மிவ்வாசிரிய னுரிச்சொல்லியலினுங் கூறுமாற்றானு மறிக. ஈண்டைம்மையுடைப் பொருளை யுணர்த்தலா னரியென்பதாகுபெயர். வெண்மையதாகிய வரியிணையுடையது வெள்

‡ தொல், பாயிரம் இளம்பூரணருரை மேற்கோள். † புறம் ௩௩.

ளரியெனப்பட்டாற்போல, செய்த வரியினை யுடையது செய்யரி யெனப் பட்டது. இவ்வாறே புறத்திலும் *கோவேரி வழங்குங் கோடு யர் நெடுவரை யென்புழிக் கொடுவரி புலியையுணர்த்திற்று. செய் யரியென்றது பன்னடையை. ஊற்றுக்கோ லூன்றப்படுவதாகிய கோலென விரிந்தாற்போலப் பன்னடையும் பன்னியதாகிய வா டையென விரிதலி னிருபெயரொட்டு; வினைத்தொகையன்று. மின்னென்னு முதனிலை மின்னும் பொருளை யுணர்த்தியாங்குப் பன்னென்னு முதனிலையும் பன்னிய பொருளை யுணர்த்தலி னொரு பெயர். பன்னல் பின்னல் செய்தலென்பன வொருபொருள. ஆடையென்னு முவமப்பெய ராடைபோல மரத்தி னரையினைச் சுற்றும் பொருளை யுணர்த்திற்று.

இனி யானேறென்பது, ஆனாகிய வேறென விரியும். பெற் றத்தினாண்பால் பெண்பாலுக்குப் பொதுவாய ஆவென்பது, முத னிரிந்த இன்சாரியையொடு புணர்ந்து, ஆனென்றாயிற்று. ஏறென் பது, பெற்றமுதலாயவற்றி னாண்பாற்பெயர்.

இனிக்குரங்கெரி விலங்கா யெருமை யென்பது, குரங்கு மெரியும் விலங்கு மாயெருமையுமெனப் பொருள்படும். எரியென் றது, தீயினை. விலங்கென்றது, வேந்த னாணையாற் குற்றஞ்செய் தாரது காலினுங் கையினும் பூணும் பூணை. ஆயெருமை யென் றது, கன்றீன் றிழந்த தாயெருமையை. ஆய்தாயென்பன வொரு பொருள. அப்பெய ரஃறிணைக்கு முரிமையாதலைப் ¶பல்லாவு ளுய்த்து விடினுங் குழக்கன்று வல்லதாந் தாய்நாடிக் கோடலை யென்ற மையானு முணர்க. கற்று வென்றாற் போலக் கன்றொடு புணர்க் காம லாயெருமை யென்றமையாற் கன்றின்றித் தாயென்னுந் தன்மையொன்றே யுடைய வெருமையெனப் பொருளுணர்த் திற்று.

இனிப் பிறரெல்லா நன்னீரத்தை நன்னிறமெனப் பாடமோ தினார். இலக்கணவிளக்கநூலா ரெங்கிறந் தோய்தற்கு மேற்பது நன்னிறமெனத் தன்மையுங் கூறினார். அஃதாசிரியர் கருத்தன்று. என்னை?

---

* கூடு. ¶ நாலடி.

‡ " வினைபயன் மெய்யுரு வென்ற நான்கே
வகைபெற வந்த வுவமத் தோற்றம்." எனவும்,

§ " சிறப்பே நலனே காதல் வலியோ
டந்நாற் பண்பு நிலைக்கள மென்ப." எனவும்,

|| "கிழக்கிடு பொருளோ டைந்து மாகும்." எனவும்,

* " முதலுஞ் சினையுமென் றாயிரு பொருட்கு
நுதலிய மரபி னுரியவை யுரிய."

எனவுங் கூறினாராகலின், வினைமுதலாய நால்வகை யுவமமுஞ் சிறப்புமுதலாய வைவகை நிலைக்களத்து ளொன்றுபற்றி வருங்கா லவ்வுவமமும் பொருளும், முதலு முதலுஞ் சினையுஞ் சினையுமென வாயினு முதலுஞ் சினையுஞ் சினையு முதலுமென மாறியாயினும் வருதலன்றி, நன்னிறம் பண்பு மாணாக்கன் முதலுமாகலிற் பண்பு முதலுமென மயங்கல் கூடாமையானு, முவமத்திற்கும் பொருட்கும் பொதுவாகிய வொப்புமைக்குணம் யாதானு மொன்றில்வழி யுவமமும், பண்பிற்குப் பண்பு மில்லையாகலி, னன்னிறமென்னும் பண்பிற் கொப்புமைக்குண மொன்று கோட லிலக்கண மாகாமையா னஃதுவமமென வாராமையானும், பண்பிற்குப் பண்பின்றாயினுங் காதல்பற்றி யுளதெனக் கோடுமெனிற் காதலும் யாதானுமொரு பொருளைப்பற்றி யப்பொருளது பண்பிற் றோன்றுமன்றிப், பொருளைச்சுட்டாது பண்புமாத்திரையிற் றோன்றாமையானு, நன்னிற மன்று; நன்னிறமுடைப் பொருளே யுவமமாயிற்றெனி, னப்பண்புடைப் பொரு ளொன்றென லின்றிப் பல்கோடியுண்மையி னவற்று ளிஃதெனச் சுட்டாமையா னொப்புமைக்குண மின்னதென் றுணர லெவ்வாற்றானு மியையாமையானு, நல்வினை தீவினை யென்றாற்போல யாண்டு நியதமாக வின்றிக் கூறுவான் குறிப்பின்வண்ணம் வெண்மைமுதலாய நிற நல்லன தீயனவெனப்படு மன்றி, யிது நன்னிற மிது தீயநிறமென்னும் வழக் கியாண்டு மின்மையி, னன்னிறமெனப் பொதுமைகூறி யெந்நிறந் தோய்தற்கு மேற்குமென லேலாமையானு மென்பது.

இனிக் குரங்கெரி விலங்கா யெருமையென்றதனைப் பிறரெல்லாங் குரங்கெறி விளங்கா யெருமையெனப் பாடமோதினார்.

‡ தொல், பொருள், உஎக. § ஷை உஎஉ. || ஷை உஅ0. * ஷை உஅக.

இலக்கணவிளக்கநூலார் கல்லா லெறிந்து கருதுபயன் கொள்வோன் குரங்கெறி விளங்காயாமெனத் தன்மையுங் கூறிக், குரங்கெறிவிளங்காயு மெருமையும் பாடுந் தோணியுமென வுவமத்தை நான்காக்கினர்; அது பொருந்தாது. என்னை? மலைமுதலாய நான்குவமத்தா னாசிரியன்றன்மை கூறி, யவற்றின் மறுதலையாக நான்குவம மல்லாதாற்குக் கூறியாங்கு, மாணாக்கன் றன்மையை யன்னமுதலாய வாறுவமத்தாற் கூறிய முதனூலாசிரியற் கவற்றின் மறுதலையாக மாணாக்க னல்லாதாற்கு மாறுவமங் கூறலே கருத்தாகலானும், குரங்கெறிகாய் பிறவற்றை நீக்கி விளங்காயென வொருகாயினைச் சுட்டற்குச் சிறப்பியல்பு வேண்டுமாகலானும், மங்ஙனஞ் சிறப்பியல்பே யன்றிக் காயின்பொதுவியல்பாவதுகூறுமற் கல்லாலெறிந்து கருதுபயன் கோட லென்றமையா னத்தன்மை பெக்காய்க்காயினு மொப்புமைக்குண மாகாமற் காய்கொள்வோர் குணமாகவே முடிதலின், விளங்காயை யுவமைகூறி யதன்றன்மையை யொப்புமைக்குண பாக்கா மலக்காயினைக் கொள்வார் தன்மையை யொப்புமைக்குண மாக்கல் கூடாமையானு மென்பது.

இனி யன்னமுதலாய வப்பன்னிரண்டுவமமு மலைமுதலாய வவ்வெட்டே போலத் தன்மை சுட்டாமையின் முன்னுரைத்தாங் குரைக்கப்படும்.

இனி யுவமத்திற்கும் பொருட்கு முரிய பொதுத்தன்மை, கொள்வோன்றன்மை பலவற்றுக்குப் பொதுவாகலிற் பொதுவியல்பெனவுங் கொள்வோன்றன்மையுட் கோடல்வினை யொன்றற்கே யுரிமையாகலிற் சிறப்பியல்பெனவு மிருவகைப்படும்.

அவற்றுட் பொதுவியல் பென்னையெனின்; ஞத்திரையன் பேராசிரியன் முன்னர்க்கூறிய வெண்வகை யுறப்பினு ளேற்பனவுடையராகி யென்றனைகலிற், கல்வியுங் கல்வியா னெய்தற்பாலவாய பிறவு மன்றி யேனைய குடிப்பிறப்பு முதலாயினவே மாணாக்கர்க் கேற்பனவாகலா னன்னவா மென்பது.

இனிக் குடிப்பிறப்பின் வகை யெட்டனு ளந்தணரியல்புமுதலாய பிறவுங், குடிப்பிறப்பின் பொதுவியல்புட் கொடையுநாணும்,

கற்றபின்னரே நிரம்பற்பாலவாகலி னவையொழிந்த விசைமுத லாய வாறுகுணமு மாணாக்கர்க்கேற்பனவாம். என்னை? * நீடுந் தலையுந் தோழமையும் பிறவிக்குணமெனவு † நலஞ்சுடு நாணின்மை நின்றக்கடையெனவுங் கூறினாராயினுந் தக்கார் தகாரென வறியா வழிக் கொடையும், பழிபாவ மறியாவழி நாணும் புலப்பாடின்மை யானு, மவ்வறிவு முந்தன ரறுதொழின்முதலாய பிறவுங் கல்வி யாற் பெறல்வேண்டு மாகலானு மென்பது.

இனிக் குடிப்பிறப்புங் கல்வியு மொழிந்த தூய்மைமுதலாய வாறுவகை யுறுப்புள்ளுங் கல்வியா னெய்தற்பாலவாகிய சிறப்பி யல்பொழிந்த பொதுவியல்பே கொள்ளப்படும். என்னை? கல்வி யான் வாய்மையிலக்கண முணர்ந்தொழுகிய பின்னரே யகந் தூய்தாமாகலி னஃதொழிந்த புறந்தூய்மையுங், கல்லாமலே தந்தை முதலாய வுலகத்தைக் கண்டொழுகு மொழுக்கமும், பொய்மையும் வாய்மையிடத்த வாதல் புரைதபக் கற்றபி னறியப் படுமாகலா னஃதின்றி,

‡ "அற்றன் ருத லறுதான் மனஞ்செய்தல்
சொற்றன் மாட்டு விகழ்த்தல் பிறனேர்த்தன்
மற்றித் தன்மை படுமாயின் மாண்பிலாக்
குற்றப் பொய்யென் றுரைப்பர் குணமிக்கார்."

எனக்கூறினராகலி னொருவன் பிறர்கேட்பச் சொல்லுழிச் சொல்லியவா றன்றுதலை யவ னுணர்தலாகிய பொய்யுரையில்லா வாய்மையுங், கற்றோர்க்கன்றி முற்றும் விலக்கலருமையிற் பிறரது மேன்மையுங் கொடையுங்கண் டழுக்கறுத்த லின்மையும், பிற வெஃகாமை கல்வியான் வரற்பாலவாகலிற் பிறன்பொருள் வெஃ காமையும், பிறநடுவுநிலைவகை யறிவுமிக்க பின்னர்த் தாமே யெய்துமாகலி னன்பு நண்பன்மையென்னும் பகுதிபற்றியுளதாகு நடுவுநிலையுமென, வவ்வறுவகை யுறுப்பின் பொதுவியல்பே மாணாக்கர்க்கேற்பன வாகலினென்பது.

இனிக் கோடல்பற்றிய சிறப்பியல்பு மீதல்விகற்பமே போ லக் காரணவகையா னெண்வகைப்படு மாயினும், வினையுஞ் செய்

* ஔவையார் பாட்டு † திருக்குறள், ௯௦௩௪. ‡ நீலகேசியுரை மேற்கோள்.

வதுங் கருவியுமொழிந்த செயப்படுபொருண்முதலாய வைந்து மீவோற்குச் சொல்லியவன்றிக் கொள்வோர்க்கு வேறுக லின்மை யானும், கோடலைச் செய்வோனது சிறப்பியல் பீதலைச்செய்வோனது சிறப்பியல்பு மீதலியற்கையு முரைத்தவழிப் பெறப்பட்டமை யானும், கோடற் கின்றியமையாக் கருவியாகிய வழிபாடு முதற் காரணவினையு ளடங்கலானுஞ், செல்வ மிளமை முதலாய துணைக் காரணஞ் சிறப்பின்மையா னுரைக்கப்படாமையானு, மவை மேலுரைத்தன கொண்டு தாமே யுய்த்துணரலுங் கூடுமாகலானுங், கோடற்காரண மெட்டனுண் முதலாவதாகிய வினையின் பகுதி பலவற்றுண் முதற்காரணவினை யொன்றே யீண்டுக் கொள்ளப்படுமென்பது.

இனிக் கொள்வோனது பொதுவியல்புட் குடிமை யுரைக் கற்பாற்று. அன்னம் வெண்ணிறத்ததாகலி னகையுடைத்து. பெருங்குர லுடைமையி னின்சொலின்று. கிளியின்சொ லுடைத்து. வளர்ப்போருரைத்த மொழியினைக்கேட் டிறுத்தல்செய் யாம லதனையே சொல்லலி னிகழ்தலுடைத்து. நன்னீரந் தன் மருங் கெந்நீர்தோயினு மவர்மாசு போக்கலி னிகழ வின்று. நீத்தறியாதார் தோயி னவரை யமிழ்த்தலி னன்பின்று. நெய்யரி மரனைவிடாது பற்றி நிற்றலி னன்புடைத்து. மரத்தி னடிக்கட் டங்காது மேனிற்றலிற் பணிவின்று. யானை $ பரியது கூர்ங் கோட்ட தாயினும் பாகற் கடங்கி நடத்தலிற் பணிவுடைத்து. பலநன்றி செய்யினு மதனைக் கொள்ளாம லொருதீங்கு செய்யி னதனை மறவாது மனத்துண் மறைத்துச் சமயநோர்ந்துழிக் கொல்லு மியல்பிற்றாகலிற் செப்ப மின்று. ஆனேறு வெகுளி தோன்றிற் கோடுமுதலாயவற்றானு முவகை தோன்றின் முக் காரமுதலாயவற்றானு மகத்துள்ளவற்றையே புறத்துங் காட்டு மியல்பிற்றாகலிற் செப்பமுடைத்து.

இவ்வாற்றா னன்னமுதலாய வாறு மாணாக்கற்குப் பிண்ட வுவம மாகலிற் கிளிமுதலாய வைந்து மின்சொலின்மை முதலாய வைந்து குற்றத்தைக் களைதலி, னகைமுதலாய வவ்வாறு குணமு மொருங்குடையான் மாணாக்கனென்பது பெறப்பட்டது.

---

$ திருக்குறள் ருகக.

இனிக் குரங்கு வலிமுகத்ததாகலி னகையின்று. சிறுகுர லுடைமையி னின்சொலுடைத்து. எரி கடுஞ்சொலென்னச் சுடுமியல்பிற்றாகலி னின்சொ லின்று. உணவாக யாதிட்டாலு மேற்றலி னிகழுலின்று. விலங்கு வேந்தனொலொறுக்கப்பட்டாரை யிவர் குற்றஞ்செய்தோரெனக் காட்டலி னிகழ வுடைத்து. பிறர் விலக்கினன்றித் தானாக நீங்காமையி னன்புடைத்து. எருமை கன்றிறந்தபின்னும் பால்கறக்கு மியல்பிற்றாகலாற் கன்றின்மேல் வைத்த வன்பாற் பால்சுரத்த லின்மையி னஃதின்று. ஆவுமத் தன்மைத்தாமெனி னது கன்றின்பொருட்டன்றிப் பால்கறவா தென்பது § தோற்கன்று காட்டிக் கறவார் கறந்தபால் பாற்பட்டா ருண்ணாரெனச் சான்றோர் கூறுமாற்றா னுணரப்படும். மேய்ப் போர்க் கடங்கி யவன்குறிப்பி னொழுகி யிரைகோடலிற் பணி வுடைத்து. யாடு மேய்ப்போர்க் கடங்காது தானினைத்தாங்குச் சென் றிரைகோடலிற் பணிவின்று. அகமும் புறமு மாறின்மை யிற் செப்பமுடைத்து. தோணி கரைச்செல்லு மியல்பிற்றெனத் தன்னைப் புறத்தே காட்டிச் சமயநேர்ந்துழிக் கடலு ளாழ்த்து மியல்பிற்றாகலி னகமும் புறமு மாறாயவாற்றாற் செப்பமின்று.

இவ்வாற்றாற் குரங்குமுதலாய வாறு மாணாக்கனல்லாதாற் குப் பிண்டவுவமமாகலி னெரிமுதலாய வைந்து மின்சொன்முத லாய வைந்துகுணத்தைக் களைதலி னகையின்மை முதலாய வாறு குற்றமு மொருங்குடையான் மாணாக்க னாகாதானென்பது பெறப் பட்டது.

இனித் தூய்மைமுதலாய பிறபொதுவியல் புரைக்கற்பால. அன்ன நீர்வாழ்பறவையாதலிற் புறந்தூய்மையுடைத்து. தன்றாய் தந்தை வாசஞ்செய் தொழுகிய தடாகத்திற் றானு மொழுகலின் றிப் பறக்குமியல்பு கைவந்தபின்னர்த் தன்கருத்தொப்பப் பிறிதி டஞ் சேறலி னவ்வொழுக்க மின்று. கிளி தன்றாய்தந்தை யொழு கியவாறே யவைவாழ்ந்த மரனைத் தானு நீங்காதொழுகலி னஃது டைத்து. பயிற்றுவார் சொல்லியவண்ணங் கள்வனல்லாதானையுங் கள்வனெனவுங் கள்வனையு நல்லனெனவுங் கூயழைத்தலின் வாய்மை யின்று. நன்னீரந் தனக்கியற்கையாகிய வின்சுவையே

§ சிறுபஞ்சமூலம்,

காட்டலின் வாய்மை யுடைத்து. மிதக்குமியல்புடைப் பொருளை வெளிக்காட்டி யாழுமியல்புடைப் பொருளைக்காட்டாது மறைத்து விடலி னழுக்காறுடைத்து. செய்யரி தான்பற்றிய மரன் காயுங் கனியு முடையவாகிச் செல்வமுறக் கண்டு மதனை யழுக்காற்றான் மறையாமற் றான் முன்னிருந்தபடியே கிடத்தலி னஃதின்று. பழுத் ததிர்த்த பாலவாகிய பயனில்லாத பட்டையினைத் தான்பற் றிக் கிடத்தலின், வெஃகு முள்ள் முடைத்து. யானை கவளங் கண்ட மாத்திரையான் வாய்திறவாமற் பாகன் பல்கா லுபசரித் தளித்தகாலையே யேற்றலின் வெஃகாவுள்ள முடைத்து. பன்றாட்கு முன்னரறியாம லொருவ னொருதீங் கியற்றிப் பின்ன ரவன் பல நன்மை செய்தானாயினு மத்தீங்கையே நினைந் தவற்குக் கேடுசூழ் தலி னடுவுநிலை யின்று. ஆனேறு நின்வலியிற் குறைந்தாரது கைப் படற்கவெனத் தன்றலைவன் றொழுவத்தினின்று துரப்பிற் றன் னைத் தழுவற் கெண்ணினோர் தன்றலைவற்கு நட்டாராயினும் பகைவராயினு மப்பகுதிநோக்காது தன்னு னியலுந்துணை யிடர்ப் படுத்துப் போகலி னடுவுநிலை யுடைத்து.

இவ்வாற்றாற் றன்னிற்பெரியா ரொழுகியாங் கொழுகாமைமுத லாய குற்றத்தைக் கிளிமுதலாயின களைதலிற் புறந்தூய்மைமுத லாகிய வத்தன்மையாறு முடையான் மாணாக்கனென்பது பெறப் பட்டது.

இனிக் குரங்கு நீரிற்படியாமையிற் புறந்தூய்மை யின்று. தன்றாய்தந்தை வாழ்ந்தவிடத்தே தானும் வாழ்தலி னவ்வொழுக் குடைத்து. எரி தானெத்தீயினின்று பிறந்ததோ வத்தீ நின்ற விடத் தின்றிப் பிறிதிடத்துச் சேறலி னவ்வொழுக் கின்று. தான் யாண்டும் பிறிதொருபொருளாற் றன்னியற்கையாகிய சூட்டினீங் கித் தட்பங்காட்டாமையின் வாய்மையுடைத்து. விலங்கு கோவ லனைப்போற் குற்றமின்றி யரசதண்ட முற்றாரையு மிவர் குற்றமு டையாரெனக் காட்டலின் வாய்மை யின்று. ஓரந்தணன் மர னிற் றாங்கிக் காற்றான் வீழ்ந்த கணையாலிறந்த தன்மனையாளை வேடனே கொன்றானென் றுவழுதிபால் முறையிட்டாங்கு முறை யிடிற் குற்றமில்லாதாரையுங் காலிற்றளைபூட்டிச் சிறைச்செய்து விசாரித் துண்மையறிந்தபின்னர்ச் சிறைநீக்கிப் பரிசிலுமளித்த

லரசற்குரித்தாகலி, னங்ஙனந் தன்னைப்பூண்டார் பின்னர்ப் பரிசில் பெறினு மழுக்காறுற்றுக் கெடாமையி னஃதின்று. ஆயெருமை தனக்கிரை குறையின்றிக் கிடப்பினும் பக்கலுள்ள பிறவற்றிற் கிரையளிப்பி னதுகண் டவற்றை முட்டற்குச் செல்லுமாகலி னழுக்கா றுடைத்து. பசிதீரிற் பின்னு மிரையினைக் காவாமை யின் வெஃகலின்று. யாடு தன்பசிக்கு வேண்டள வோரிடத்தே யிரையுளதாயினும் பலபக்கலுஞ்சென் றிரைகோடலின் வெஃகு முள்ள முடைத்து. தன்பொறுமைநிலையினைத் தனக்குத் தீங்கு செய்தார்மாட்டு நன்மைசெய்தார்மாட்டு மொப்பக்கோடலி னடுவு நிலைமை யுடைத்து. தோணி பொத்தபாரமுறிற் றன்னியற்கையி னின் றெவ்வாதபார முறி னவ்வியற்கையி னீங்கிச் சாய்தலி னடு வுநிலை யின்று.

இவ்வாற்றா னொழுக்கமுதலாய குணத்தை யெரிமுதலாயின கனிதலி, னொழுக்கமின்மை முதலாய வாறுகுற்றமு முடையான் மாணாக்க னாகானென்பது பெறப்பட்டது.

இனிச் சிறப்பியல்பாகிய கோடல்விகற்பத்துண் மேலு ரைத்த காரணத்தான் முதற்காரணவினை யொன்றே யுரைக்கற் பாற்று.

அவ்வினை யாறுவகைப்படும்; என்னை?

* "யாதானு நாடாமா லூராமா லென்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு."

என்றாராகலின் வினைபாட்டிற் காலங்கழியாமற் பசித்தா ருணவைவேட்டாங்குக் கல்வியை வேட்டலு, மவ்வேட்கை யோடு § கற்றுரைச் சார்ந்தொழுக னன்று என்றாராகலி னவரைச் சார்ந்தகலா மையு, மதனொடு ‡ உற்றுழி யுதவியு முறுபொருள் கொடுத்தும் பிற்றை நிலை முனியாமையு மதனொடு,

§ "குணனடங்கக் குற்ற முளானு மொருவன்
கணனடங்கக் கற்றானு மில்." எனவும்,

* குறள் ௩௯௭. § நான் மணிக்கடிகை. ‡ புறம் ௧௮௩.

§ "குணநாடிக் குற்றமு நாடி யவற்றுண்
மிகைநாடி மிக்க கொளல்" எனவும்,

$ "அரியகற் றாசற்றார் கண்ணுந் தெரியுங்கா
லின்மை யரிதே வெளிறு."

எனவுங் கூறினாராகலிற், கற்றார்மாட்டுங் குற்றஞ்சில காணப் படுமாயினு மவற்றைப் புறத்தே தள்ளியவரது குணத்தையே யகத்துட் கோடலு, மதனொ டவர்பாற் கேட்பவற்று ளொன்று மறவாத வியல்புடையனாதலு, மதனொடு சொல்லிய பொருண்மை சொல்லியாங் குணர்ந்துஞ், சொல்லிய பொருளோடு சூழ்ந்துநன் குணர்ந்துந், தான்கேட்டு மனத்துட் கொண்ட பொருளை வாயிற்கொண ராது மறைத்த லின்றிப் பிறர்க்குரை யிடத்தே நூற்கலப் பாகும் என்றாராகலிற், பிறர்க்கு முரைத்தலுமெனா.

அவ்வாறு தன்மையு மொருவற்கு முன்னிகழாவாயிற் பயன் படுகோடல்வினையு நிகழாமையி னவை முதற்காரண வினையெனப் பட்டன.

இனி யன்ன மேனைய நீர்வாழ் பறவைபோல நீர்வினையாட் டைப் பொருளாகக் கொள்ளாமற் பூவேணப்படுவது பொறிவாழ் பூவே யெனவும், * பூவிற்குத் தாமரையே யெனவுந் ‡ திருவளர் தாமரை யெனவுஞ், சான்றோர் புகழுந் தாமரைப்பூவையே வேட்ட லுடைத்து. † அற்ற குளத்தி னறுநீர்ப் பறவை யென்றாராகலி, னீர் வற்றியகாலைச் சார்ந்தொழுக லின்றிப் பிறிதொரு நீர்நிலையைச் சேர்தலு முடைத்து.

கிளி தான் சார்ந்த மரன் வேனிலா னுலர்ந்து காயுங் கனியு மிலையு மின்றி வற்றியகாலைபு மம்மரனை நீங்காது சார்ந்தொழுக லுடைத்து. சார்ந்தொழுகினு முற்றுழி யுதவலு முறுபொருள் கொடுத்தலு மின்று,

நன்னீரம் விடாய்தீர்த் துற்றுழி யுதவலு நெண்முதலாய வுறு பொருள் படைத்துக் கொடுத்தலு முடைத்து. உலகிற்கு ஞாயிறு செய்யு நன்மை பலவற்று ளொன்றானுங் கருத லின்றி யதன் கூடொன்றே கருதிக் கொதித்த லுடைத்து.

---

§ திருக்குறள் ருoச. $ டை. ருoகூ.
* திருவள்ளுவமாலை. ‡ திருக்கோவை. † மூதுரை.

நெய்யரி கோதினைப் புறத்தே தள்ளித் தேன்முதலாய நற்பொருளையே யகத்துட் கோட லுடைத்து. பரன்முதலாய பருப்பொருளைத் தாங்கலன்றி மணன்முதலாய நுண்பொருளைத் தாங்காது கீழொழுகவிட லுடைத்து.

யானை கண்டன கேட்டன வுற்றன பருப்பொருளாயினு நுண்பொருளாயினு மவற்று ளொன்றாயினு மொருசிறிது மொருகாலத்து மறவாத்தன்மை யுடைத்து. இதுபற்றியே புத்திதத்துவத்தி னதிதெய்வமாகிய கணபதி யானைத்தலை யுடையானெனப் புராணங்கூறியதூஉ மென்பது. அதுதா னகத்துட் கொண்டவற்று ளொன்றேயாயினும் பிறருமுணருமாறு வாயிற் கொணர்தலின்று.

ஆனேறு தானகத்துட் கொண்டவற்றைப் பிறரு முணருமாறு வாயிற்கொணர்ந் தசைத்த லுடைத்து.

இவ்வாற்றாற் கிளிமுதலாயின குற்றங்களைதலி, னக்குணமாறு முடையான் மாணுக்கனென்பது பெறப்பட்டது.

இனிக் குரங்கு கோடுவாழ்வன பிற கூடுசெய் தினிதுவாழத் தானவ்வினை மேற்கொள்ளாம லொருகோட்டினின்று பிறிதொருகோட்டிற் பாய்தலு மிறங்கலு மேறலு முதலாய வினையாட்டிற் காலங்கழிப்பி மழையி னனைந்து குளிரான்வாடி வருந்த லுடைத்து. காய்கனி யளியாக் காலத்துந் தான்சார்ந்த மரச்சாலையை நீங்க லின்று.

எரி தான்சார்ந்த பொருளை யழித்து நீங்க லுடைத்து. பசித்தார்க் குணவாகுமாறு நிற்றலி னுற்றுழி யுதவலு மந்தண ரவிகொடுப்பி னதனை வாங்கித் தேவர்க்குக் கொடுக்குமா றங்கி யாதித்தன்கட்கொடுக்கு மென்பது வேதமுடிபாகலி னுறுபொருள் கொடுத்தலு முடைத்து.

விலங்கு சிறைப்பட்டோர் தப்பியோட முயலின் விடாது தடுத்தலி னுற்றுழி யுதவாமையு, மவரது பசிமுதலாய துன்பங்கண்டு போக்காமையி னுறுபொருள் கொடுத்தலுமின்று. சிறையாயினர் தன்னைத் தாம்போ மிடனெல்லாங் கொண்டிழுத் தலைத்து வருத்தினு மதுபற்றித் தானவரை நீங்க லின்று.

ஆபெருமை பன்னா ளிரையளித் தொருநாளன் றுறவியா விரையளியாவிடினு மஃதொன்றே கருதிக் கட்டுத்தறியினையு முறித்துத் தானின்ற நிலையைநீங்கிப் பிறிதிடஞ்செல்ல முயல லுடைத்து. முன்னைநாளி னெய்யு நொறுங்குந் தவிடு முதலாய வற்று ளொன்றளித்துப் பிற்றைஞான் றது கொடாவிடி னதனை நினைந்து பால்கறவாமையி னதுபோல்வ சில சின்னாண் மறவாமை யுடைத்து.

பாடு பக்கனின்று மேய்ப்போ னுணர்த்தினு மக்காலையே யதனை மறந்து நெறி பிழைத்தலின் யாதொன்று நினைத்த லின்று. ஆனே றுபோலவே தானு மகத்துட் கொண்டவற்றைப் பிறரு முணருமாறு மீண்டும் வாயிற்கொணர்ந் தசைத்த லுடைத்து.

தோணி பிறரேற்றிய பொருளைக் கரையின் விடுத்த லன்றிக் கடலுட் பன்முறை சென்று மீளினுந் தானதனாழத்தை யறியா மலு மங்குள்ள பொருளை முகவாமலு மிருத்த லுடைத்து. மித வா தமிழ்ந்து கடலாழத்தைக் கண்டு தானதன் பொருளை முகந் தாலு மீண்டும் வெளியிற் கொணர்த லின்று.

இவ்வாற்றா னெரிமுதலாயின குணத்தைக் களைதலி னக் குற்றமாறு முடையான் மாணாக்க னாகானென்பது பெறப் பட்டது.

இனி யிலக்கணவிளக்கநூலார் முதலாயினோர் பாலுநீரும் பாற் படப் பிரித்த லன்னத்தியல் பென்றார்; அது பொருந்தாது. என் னை? மதிநுட்பத்தோடு நூலறிவும் வாய்ந்தபின்னரே குணங்குற் றத்தையேனும் பிறவற்றையேனும் பிரித்துணரு மாற்ற லுளதா வதன்றிக் கல்விகற்பான்புக்க மாணாக்க ரியல்பாகாமையி னென் பது.

இன்னுமவர் கிளந்தவா கிளத்தல் கிளியின தியல்பே யென் றார்; அது பொருந்தாது. என்னை? சொல்லிய பொருண்மை சொல்லியாங் குணர்தலுஞ் சூழ்ந்துநன்குணர்தலு மாணாக்க ரியல் பாவதன்றிக் கிளந்தவா கிளத்தலாற் பொருளுணர்ந்தாரென்பது பெறப்படாமையானும் பொருளுணராவிடிற் பயனின்மையானு மென்பது.

அவர் நன்னிற்றெனக் கொண்டபாடமு மதன்றன்மையும் பொருந்தாமை மேற்கூறினும்.

அவர் நல்லவை யகத்திட்டு நவைபுறத் திடுவது செய்பரி யென்றார்; அது பொருந்தாது. என்னை? நல்லவை யினவை நவை யிவையென நூலறிவானன்றி யுணரல் கூடாமையானு, மவர்கூறிய வாறு பாலுநீரும் பாற்படப் பிரித்தலு நல்லவை யகத்திட்டு நவைபுறத்திடு தன்மையு ளடங்கலி னதனை வேறாக வன்னத் தியல்பெனக் கூறலாற் பயனின்மையானு, நூலறிவா னன்றி யியற் கையறிவானு மாசானது குணங்குற்றங் காணல் கூடுமாகலி னவற்றையே நல்லவை நவையெனக் கூறினாரெனி, னது பொருந் துமாயினு முன்னாகப் பின்னாக யாண்டாயினு மக்கருத்தை யுரை யாமையி னல்லவை நவையென்பன விப்பொருளுடையவெனத் துணிவின்றி மயங்கவைத்தலானு மென்பது.

இன்னுமவர் குழூஉப்படூஉப் புறந்தரல் குஞ்சரத்தியல்பென் றார்; அது பொருந்தாது. என்னை? அஃதில்வாழ்வானது தன்மை யாகிய சுற்றந்தழா லாவதன்றி மாணாக்கனது தன்மை யாகாமையி னென்பது.

அவர் பிறந்தவொலியின் பெற்றியோர்ந் துணர்த லானேற் றின் செய்தி யென்றார்; அதுவும் பொருந்தாது. என்னை? ஒலி யின் பெற்றி யுணர்தலி னானேற்றினுஞ் சிறந்த வசுணமு மானு முதலாய பிறவற்றை விடுத்துச் சிறப்பில்லாத வதனைக் கூற லாசி ரியர்கருத் தாகாமையி னென்பது.

அவர் குரங்கெறி விளங்காயெனக் கொண்டபாடமு மதன் றன்மையும் பொருந்தாமை மேற்கூறினும்.

இன்னுமவர் விலங்கி வீழ்ந்து வெண்ணீருழக்கிக் கலங்கல் செய் தருந்தல் காராமேற்றே யென்றார்; அதுபொருந்தாது. என்னை? சுனைநீர் முதலாயின விலங்கிவீழ்ந் துழக்கினுங் கலங் காமையானுங், கலங்கியநீ ரருந்தினு மதனா லெருமைக்குக் கேடொன்று மின்றி விடாய் தீர்தலானு, மாசான் றனக்குக் கேடுறினு மதுகருதானாகி மாணாக்கனது கேடின்மையே கருதுவா னென்பது சுக்கிரனுந் துரோணனுந் தமக்குக்கேடுவிளைத லறிந்

னும் விராடன்மகனுக்குந் துருபதன்மகனுக்குங் கற்பித்தமைய னு மாரப்படி மாகலானு மென்பது.

இன்னுமவ ரொன்றிடை யரா வுதினுங்குளகு சென்றுசென் றருந்தல் யாட்டின் பிரே யென்றார்; அதுவும் பொருந்தாது. என்னை? யாடு சென்றுசென் றருந்தினு மொன்றிடை யருந்து மேனைய விலங்கொப்பவே பசிதீர்தற் பயன்பெற லன்றி யதனா லதற் கொரு கேடுமின்மை காணப்படலானு, நூற்றைவர்க்கு வீடுமன் பாட்டனுங் கிருபன்றுரோணன் முதலாயினாரினு மிக்க கல்வி யுடையானு மாகவு மவன்பாற் கல்லாம லவர் கிருபன் மருங்கும் பின்னர்த் துரோணன் மருங்குங் கற்றாராகலானு, மவருள்ளு மருச்சுனன் பின்னர்க் கைலாயபதியிடத்துங் கற்றானாகலானுஞ், சுகன் றன்றந்தை நிறைந்த கல்வியுடைய னாகவு மவன்பாற் கேட்ட வற்று ளையநீங்காமையிற் சனகனிடத்துஞ் சென்று கேட்டா னாகலானும், பலர்பாற் சென்று வினாதல் வினையவை விடுத்த லென்றிவை கடனாக் கொள்வது நன்மாணாக்க ரியல்பாகலானு மென்பது.

இனி யவர் நீரிடை யன்றி நிலத்திடை யோடாச் சிறுடை யதுவே தோணி யென்றார்; அதுவும் பொருந்தாது. என்னை?

* "கடலோடா கால்வ னெடுந்தேர் கடலோடு
நாவாயு மோடா நிலத்து."

என்றாராகலி, னெல்லாத்தன்மையு முற்றவுடைய தொரு பொருள்யாண்டு மின்மையானு, மங்ஙனம் யாதானு மொருதன்மை யின்மைபற்றி மாணாக்க னாகாதானென் றொருவனைத் தள் ளல் கூடாமையானுங், கூடுமென்றாராயினுந் தோணிபோலவே கடலோடாத நெடுந்தேரும் பிறவுமிருப்பத் தோணியென் றொன் றைச் சுட்டல் சிறப்பின்மையானு மென்பது.

இனி நன்னூலார் முன்னோருரைத்த வவ்வுவமத் தியல்புணரா து தாமவரினு நுண்ணறிவுடையாரெனக் கருதி யவர்கூறிய வுவமத்திற் சிலகொண்டு சிலதள்ளிச் சிலகூட்டி யொருநெறிப்பட லின்றி,

---

* திருக்குறள், ௪௯௬.

§"அன்ன மாவே மண்ணொடு கிளியே
யில்லிக் குடமா டெருமை நெய்யரி
யன்னர் தலையிடை கடைமாணாக்கர்." என்றார்.

அதுவும் பொருந்தாது. என்னை? மேலாசிரியனு மாசிரிய னாகாதானுமென வவர்தன்மையை யிருபகுதியாகக் கூறினார்க் கீண்டு மாணாக்கனு மாகாதானுமென விருபகுதியாக்கலே முறை யாகலன்றி யவருண் மாணாக்கரைத் தலையிடைகடையென முப் பான்மைய ராக்கல் கூடாமையானு, மாணாக்கரை முப்பாலராகப் பகுத்தார்க் காசிரியரையு மங்ஙனம் பகுத்தலே முறையாகலானு, மவ்வாறின்றிக்கூறிய வவர்தாமு மாணாக்க ராகாதாரையு முப்பான் மைய ராக்காது களிமடிமானியெனப் பகுப்பின்றியே கூறலானு, மாசிரியர்க் குவமமாகக் கூறிய நிலனையே யீண்டு மண்ணென விடைமாணாக்கர்க்கு முவமமாக்கல் கூடாமையானும், பலதன்மை யுடைமையி னவ்வேறுபாட்டாற் கூறலு மமையுமெனி, னத்தன் மையைத் தெரிவருப்பெருமை முதலாக வாசிரியர்க்கு விதந்து கூறியாங்கு மாணாக்கர்க்கும் விதந்துகூறாமையி னத்தன்மையே மாணாக்கர்க்கு மொக்குமென மயங்கு மாகலானுங், கிளியை யன் னத்தினுஞ் சிறப்புடைத்தாக முன்னோர் கூறியிருப்ப, வம்முறை நோக்காது கிளந்தவா கிளத்தலென்னு மொப்புமைக்குண மாகாப் பிறிதொன்றைத் தம்மனத்துட்கொண் டன்னத்தை முதன்மாணாக் கர்க்குங் கிளியை யிடைமாணாக்கர்க்கு முவமமாக்கல் கூடாமை யானு, மில்லிக்குட மெத்துணைக்கால நீர்பெய்யினு மொழுகவிட லிற் பயனின்மையா னதனை மாணாக்க ராகாதார்க் குவமமாக்க லோராற்றாற் கூடினுங் கூடுமன்றி மாணாக்கருட் கடையாயார்க்கு முவமமாக்க லெவ்வாற்றானு மேலாமையானு, மக்குட நீர்போல் வன வன்றிப் பிறபெய்யிற் கழியா தேற்றலி னீர்பெய் யில்லிக் குட நெய்பெய் யில்லிக்குட மல்லது பிறபொருட்பெய் யில்லிக் குடமென யாதானு மோரடையின்றிக் கூறியக்குடத்தாற் கடை மாணாக்கர்க் காவதோ ரொப்புமைக்குணங்கோட லிலக்கண மாகா மையானும், யாடு மெருமையு மாணாக்க ராகாதார்க்குவம மாகு மென முன்னோர் கூறியிருப்பத் தாமவற்றைக் கடைமாணாக்கர்க்

§ பொதுப்பாயிரம், ௩௮.

குவமமாக்கன் முன்னோர் நூலின் முறையே நன்னூற் பெயரின் வருத்தன னென்றதற்கு மாறுகு மாகலானு, நெய்யரியை யன்ன முங் கிளியுமென வவற்றினுஞ் சிறப்புடைத்தாக முன்னோர் கூறி யிருப்ப, வம்முறை நோக்காது கோதினைக் கொண்டு தேன்முத லாயவற்றை யொழுகவிடலெனத் தாமாக வொன்று கருதிக் கடைமாணுக்கர்க் குவம மாக்கல் கூடாமையானு, நெய்யரியைத் தேன்முதலாய நற்பொருள் கொண்டு கோதினைத் தள்ளற்கே கருவியாகக் கோடலன்றி, யவர்கருதியவாறு கோதினைக்கொண்டு நற்பொருளிழுத்தற்குக் கருவியாகக் கோடல் யாண்டு மின்மை யானு மென்பது.

இனி வேளாண்வாழ்க்கை முதலாயவு மவற்றின் மறுதலையு மலையானுங் குடத்தானுங் கொண்டாங்குச்,சொல்லியபொருண்மை சொல்லியாங் குணர்தன்முதலாய பிறவு மவற்றின் மறுதலையுந் தனி யுவமத்தா னுய்த்துணர்ந்து கொள்ளப்படும்.

இனிக் கோடன்மர புரைக்கற் பாற்று.

கோடன்மர பென்னையெனின்;

§ “ *கொள்வோன் முறைமை கூறுங் காலைப்
பொழுதொடு சென்று வழிபடன் முனியான்
முன்னும் பின்னு மிரவினும் பகலினு
மகலாணுகி யன்பொடு புணர்ந்தாங்
காசற வுணர்ந்தோன் வாவென வந்தாங்
கிருவென விருந்து சொல்லெனச் சொல்லிப்
போவெனப் போகி நெஞ்சுகள னாகச்
செவிவா யாகக் கேட்டவை கேட்டவை
வல்லனாகிப்
போற்றிக் கோட ‡ லவனது தொழிலே.” எனவும்.

§ “ எத்திற மாசா னுவக்கு மத்திற
மறத்திற் றிரியாப் படர்ச்சிவழி பாடே.” எனவும்,

§ “ வழக்கி னிலக்கண மிழுக்கின் றறிதல்
பாடம் போற்றல் கேட்டவை நினைத்த

---

§ தொல், பாயிரம், இளம்பூரணனுரை மேற்கோள்.
* கோடன்மரபே என்பதூஉம் பாடம்.
‡ அதுவதன் பண்பே என்பதூஉம் பாடம்.

லாசாற் சார்ந்தவை யமைவரக் கேட்ட
லம்மாண் புடையோர் தம்மொடு பயிறல்
வினுதல் வினயவை விடுத்த லென்றிவை
கடனுக் கொளினே மடநனி யிகக்கும்." எனவும்,

§ "அனைய னல்லோன் கொள்குவ னயின்
வினையி னுழப்பொடு பயின்றலைப் படாஅன்."

எனவுங் கூறுமாற்று னறிக வென்பது.

இனிக் கோடன்மரபுடைய மாணுக்கன்,

§ "ஒருகுறி கேட்போ னிருகாற் கேட்பிற்
பெருக நூலிற் பிழைபா டிலனே." எனவும்,

§ "முக்காற் கேட்பின் முறையறிந் துரைக்கும்." எனவும்,

‡ "ஆசா னுரைத்தவை யமைவரக் கொளினுங்
காற்கூ றல்லது பற்றல னாகும்." எனவும்,

‡ "அவ்வினை யாளரொடு பயில்வகை யொருபால்
செவ்வி னுரைப்ப வவ்விரு பாலு
மையறு புலமை மாண்புநனி யுடைத்தே." எனவும்,

† "பிறர்க்குரை யிடத்தே நூற்கலப் பாகுந்
திறப்பட வுணருந் தெளிவி னோர்க்கே."

எனவுங் கூறினாராகலி, னவ்வாறு பயிலுமேன் முற்றவறிந் தானுகு மென்பது.

இனி யீவோன்றன்மையு மீதலியற்கையுங், கொள்வோன் றன்மையுட் கோடன்மரபு மடங்குமாகலி, னுத்திரையன் பேராசிரியன் பன்னருஞ் சிறப்பி னல்லாசிரியரெனவு, நன்மாணுக்க ரென்ப வெனவும், பொதுப்பாயிரத்தை யிருவகைத்தாக்கித் தொகுத்துக் கூறினன்.

இனி மலைமுதலாயவற்று னு மன்னமுதலாயவற்று னுங் கிளந்தவல்ல வேறுபிற தோன்றினு நன்மதி நாட்டத் துணர்ந்தனர் கொண்டு கூறிய குன்றினு முதனூல் கூட்டித் தோமின் றுணர்க. இஃதுரைப்புறனடை.

---

§ தொல், பாயிரம், இளம்பூரணருரை மேற்கோள் ‡ ஷை.
§ † ஷை நச்சினார்க்கினியருரை மேற்கோள்.

இனி நன்னூலார் தாமறிந்தவாற்றானே நூலியல்பும் பொதுப் பாயிரமாமெனக் கொண்டு,

* "நூலே நுவல்வோ னுவலுந் திறனே
கொள்வோன் கோடற் கூற்றா மைந்து
மெல்லா நூற்கு மிவைபொதுப் பாயிரம்." என்றார்.

அஃதிலக்கண மன்று. என்னை? யாதானு மொன்றன் பெருமைமுதலாயவற்றைப் பிறர்க் குணர்த்தலாகிய புறவுரையே பாயிரமென்னுஞ் சொற்குப் பொருளாம். அது பாயிரங் கூறிப் படைதொக்கா லென்செய்ப வென்னும் பழமொழிச் செய்யுளானும் விளங்கும். அப்புறவுரைதா னிருவகைத்தாய் நூல்செய்தான் கூறிற் றற்புகழ்ச்சியாக முடிதலிற் பிறராற் கூறப்படு மியல்புடைத் தாயிற்று. அதுதா னின்னின்ன விலக்கண முடைய வாசிரிய னின்னவாறு நூலைக் கூற வின்னின்ன விலக்கண முடைய மாணாக்க னின்னவாறு கேட்டல்வேண்டு மெனி, னெல்லா நூலுக்கும் பொதுவாகி முடிதலிற் பொதுப்பாயிரமெனவு, மின்னபெயருடைய வாசிரிய னின்னவெல்லையு ணடக்கு மின்ன நூலின் வழித்தாக வின்னபெயரிட் டின்னயாப்பா னின்னபொருளை யமைத் தின்னபயனுடைத்தாக நூல்செய்ய வதனை யின்னின்ன பெயருடைய வாசிரியர் கேட்டுக் குற்றமின்மை யாராய்ந்து நன்றெனக் கொண்டாரெனி, னஃதொருநூலுக்கே பெருமையாக முடிதலிற் சிறப்புப்பாயிரமெனவும் பெயர்பெறும். இவ்வாற்றா னூலியல்பு பாயிரமாகிய புறவுரையோ வன்றே லதனிலக்கணமாகிய வகவுரையோவென வாராயி னாசிரியர் செய்யுளியலிற், ‡ பாட்டுரை நூலே வாய்மொழி பிசியே யங்கத முதுசொலோ டவ்வேழ் நிலத்து மென வேழ்நிலங் கூறி யவை யெல்லாவற்றுக்கு மிலக்கணங் கூறினாராகலி, னவற்று ளொன்றாகிய நூலினியல்பு மாக்கியோ னாற் கூறப்படு மகவுரையாகிய விலக்கண மாகலன்றிப் பெருமையை யறிவித்தலாற் பிறராற் கூறப்படும் புறவுரை யாகாமையானு, மாகுமெனி னந்நூலோ டொருங்கெண்ணிய வேனைப் பாட்டுமுதலாய வாறனதிலக்கணமும் பாயிரமெனல் வேண்டுமாகலானும், பாயிர நூலது பெருமையைப் பிறர்க் கறிவித்த லொழிந்

* பொதுப்பாயிரம் ௩. ‡ தொல், பொருள், ௩௮௭.

தத னிலக்கணங் கூறுமாயி னதுபோலவே யேனையவற்றுக் கிலக்கணங்கூறும் பகுதியும் பாயிரமெனப் பெயர்பெறல் வேண்டு மாகலானு, மந்நன்னூலாரு நூலி னியல்பே நுவலி னோரிருபாயிரந் தோற்றி யென்றதனாற் பொதுப்பாயிரவகையு ளொன்றெனவவர் கூறிய வந்நூலியல் பப்பொதுப்பாயிரவகை யைந்தனையுஞ் சிறப் புப்பாயிரத்தையுந் தோற்ற லுமையாலையானு மென்பது.

இனிச் சிவஞானமுனிவர் தமதிலக்கணவிளக்கச் சூறாவளியி னூனுதல் பொருளைத் தன்னகத் தடக்கி யென்றமையானே நூ லியல்பு பாயிரத்து ளடங்காதென்றல் கருத்தன்றென மறுக்க வென்றார். ஆண்டு நூனுதல் பொருளைத் தன்னகத்தடக்கி யென் றது நூலின்னதன்மைத்தென வதனிலக்கணங் கூறும விந்நூல், தமிழை நுதலிற்று; அறத்தை நுதலிற்று; பொருளை நுதலிற்று; இன்பத்தை நுதலிற்றெனக் கூறியதனைப் பிறர்க் கறிவிப்பதா கலி னாக்கியோனாற் கூறப்படாத வியல்புடைய பாயிரவகையு ளொன்றாகலு, மின்னின்ன விலக்கணத்தது பாட்டு; இன்னின்ன விலக்கணத்த துரையென்றாற்போல, வின்னின்னவிலக்கணத்தது நூலென நூலியல்பு நூலுட் கூறப்படுந் தன்மைத்தாகலி, னஃதாக்கியோனாற் கூறப்படு மியல்பிற்றாய நூலினடங்கிப் பாயிர வகையு ளடங்காமையு முணரப்படுமென்பது.

இன்னுமவ ரவயவமாகிய பாயிரத்து ளவயவியாகிய நூல டங்காதெனக் கூறிய விலக்கணவிளக்க நூலாரை நோக்கி, மூன் றுறுப் படக்கிய பிண்டத்தானுமெனவு மோத்துப் படல மென்னு முறுப்பி னெனவு மாசிரியர் கிளந்தெடுத் தோதலி, னூலியல் பந்நூலுந் கவபவமா மென்று மதனு லது பாயிரத்து ளடங்கு மென்றுங் கூறினர். அதுவு முறையன்று. என்னை? அவர் கூறிய வாறு நூலவயவியு நூலியல் பவயவமு மாபினு மவயவியாகிய வுடம்பின்கட் கண்காதுமுதலாய வகவுறுப்பு முபாயனமெனுங் கண்ணாடிமுதலாகிய புறவுறுப்பு மடங்குமாறுபோல, நூலாகிய வவயவியின்கட் சூத்திர மோத்துப் படல நூலியல்பென்னு மக வுறுப்பு மீவோன்றலைமைமுதலிய நான்குவகைப் பாயிரமாகிய புற வுறுப்பு மடங்குமெனல் பொருந்து மன்றிக், கண்ணாடியாகிய புறவுறுப்பிற் கண்ணாதிய வகவுறுப் படங்குமெனல் பொருந்தாமை

போல, வந்நூலது புறவுறுப்பாகிய பாயிரத்து ளத னகவுறுப்பாகிய நூலியல் படங்குமெனல் பொருந்தாமையா னென்பது.

இனி முகத்திற் கண்காது முதலாயின வடங்குமாறுபோலப் பாயிரமாகிய முகவுறுப்பின்க ணூலியல்பு மேனை நான்குவகையு மடங்குமெனி னதுவும் பொருந்தாது. என்னை? கண் காது மூக்கு வாயென வவையெல்லாங் கூடியவழியே முகமெனப் படுவதன்றிக் கண்முதலாயவற்றைத் தனித்தனிக்கூறியவழி முகமெனப் படாத வாறுபோல வவர்கூறிய வைவகைப் பொதுவும் பதினொருவகைச் சிறப்புங் கூடியவழியே பாயிரமெனப் பெயர்பெறல் வேண்டு மன்றி யவை தனிநின்றவிடத்து மப்பெயர் பெறுதலிற் கூடாமையா னென்பது.

இனிச் சிறப்புப்பாயிரங் கூறலி னிலக்கண முரைக்கற்பாற்று. அவ்விலக்கண மென்னையெனின்;

‡ "பாயிரத் திலக்கணம் பகருங் காலை
நூனுதல் பொருளைத் தன்னகத் தடக்கி
யாசிரியத் தானும் வெண்பா வானு
மருவிய வகையா னுவறல் வேண்டும்."

எனவுந் தான்றற் புகழ்த றகுதி யன்றேயெனவுங் கூறினாராக லிற், றன்னாசிரியன் முதலாய மூவகையாரு ளொருவனால் வெண் பாவானாயினு மாசிரியத்தானாயினு மது கூறப்படுமென்பது.

இனி யம்மூவகையாரே யன்றி யேனைப்புலமையோர் சிறப் புப்பாயிரஞ் செய்தற் குரியராகாமையும் பொதுப்பாயிரத்துக் கவ்வரையறை யின்மையு மென்னையாவெனிற், சிறப்புப்பாயிர மென்ப தொருநூலது பெருமையே கூறவந்ததா மாகலி, னந்நூ லது பெருமை விளங்குமா றதனை யாக்கியோன் பெருமையு மத னைக் கேட்போர் பெருமையு மவர்காலத் துடனிருந்து பழகினார்க் கன்றி யேனையோர்க்குள்ளவா றறித லரிதாகலானுந், தந்தைமுத லாயினா ரறியினு மவர்புலமையோரா யிருத்த லொருதலையன் றாக லானு, முள்ளவா றறிந்துரைக்கு மியல்புடைமை யம்மூவர்க்கு மொருதலையாகலானும், பொதுப்பாயிர மொருவரைச் சுட்டாம லாசிரியரையு மாணாக்கரையும் பொதுவியல்பானே கூறுமியல்பின

‡ தொல், பாயிரம், இளம்பூரணருரை மேற்கோள்,

தாகலி, னுடனிருத்தல் வேண்டாமையானு மவ்வாறாயின வென்பது.

இனி யுரையாளன் பாயிரமுரைத்தற் குரியனல்லனோவெனின், அவ னூல்செய்தான் காலத்தோனாயி னுரியனும்; பிற்காலத்தோனாயி னாக்கியோன் பெருமைமுதலாயின முற்று முணரானாகலி னவனுரிமை சிறப்புடைத் தன்றென்பது. அற்றேல் ஆலவாயடிக ளருளிய நூலுக் குரையாளர் பாயிரமுரைத்தவா றென்னையோவெனின், அந்நூன் முனைவனூலாகலி னவற் காசிரியனு மொருங்குகற்றோனு மின்மையானும் யாவரு மவன்மாணாக்கரா மியல்புடையராகலானு மந்நூற்குப் புலமையோ ரெல்லாரு முரியராயினா ரென்பது.

சோழவந்தானூ ரரசஞ்சண்முக னுரைத்த பொதுப்பாயிரவிருத்தி முடிந்தது.



இனிப் பொதுப்பாயிர முரைத்தபின்றைச் சிறப்புப்பாயிர முரைக்கற்பாற்று. என்னை? பொதுப்பாயிர முரைத்தனகொண்டிவ னாசிரியனென்று மிவன் மாணாக்கனென்று முணரப்படுவோராகிய விருவரு ளாசிரியன் மாணாக்கற் குரைப்புழிச் சிறப்புப் பாயிர முரைத்தே நூலுரைப்பா னாகலி னென்பது.

இனி யிந்நூற்குச் சிறப்புப்பாயிரமாவது முன்னின்ற வடவேங்கடந் தென்குமரியென்னுந் தொடக்கத்துச் சூத்திரமாகலானும், மது நூலி னகத்துறுப் பாகாவிடினு மகத்துறுப்பாய சூத்திரத்தோ டொத்த விலக்கணத்த தாகிப் புறத்துறுப்பென நூற்கு முன்னிற்றலானும், நூற்சூத்திர முரைத்தாங் குரைக்கப்படும்.

அதுதா னுரைக்குமிடத்து நான்குவகையா னுரைக்கற் பாற்று; கருத்துரைத்துக் கண்ணழித்துப் பொழிப்புத்திரட்டி யகலங்கூறலென.

அவற்றுட் சிறப்புப்பாயிரத்தின்கருத் தென்னையோவெனி, னாக்கியோன்பெயர் முதலாயின கூறலா னூலது பெருமை கூறுத னுதலிற்றென்பது. அன்னதாதல் கண்ணழிப்ப விளங்கும். கண்ணழித்த லென்பது, பதப்பொருள் சொல்லுதல்.

இனிக் கண்ணழித்த லென்னையெனின்; வடவேங்கடம் தென்குமரி அவ் இடை என்பது = வடக்கின்கண் வேங்கடமலையுந் தெற்கின்கட் குமரிமலையு மாகிய வவ்விரண்டனையு மெல்லையாக வுடைய நிலத்து வழங்குகின்ற என்றவாறு: தமிழ் கூறும் நல்லுலகத்து என்பது = தமிழ்மொழியைக் கூறு நல்லாசிரியரது என்றவாறு: வழக்கும் செய்யுளும் அ இரு முதலின் என்பது = வழக்குஞ் செய்யுளுமாகிய வவ்விரண்டிடத்துள்ள என்றவாறு: எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி என்பது = எழுத்தையுஞ் சொல்லையும் பொருளையு மாராய்ந்து என்றவாறு: செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு என்பது = செந்தமிழிலக்கண முற்று நிரம்பிய தலைச்சங்கத்து வீற்றிருந்த புலவரொடு பயின்று என்றவாறு: முந்து நூல் கண்டு என்பது = அகத்தியமுதலாய முந்துநூல்களை யையமு மருட்கையுமற வவர்பாற் கற்றுணர்ந்து என்றவாறு: முறைப் பட எண்ணி என்பது = கற்றுணர்ந்தன முந்து நூலின்கண் முறையின்றி விரவிக் கிடத்தலா னவை முறை

யொடு பொருந்திநிற்குமாறு கருதி யென்றவாறு: புலம் தொகுத்தோன் என்பது = முந்துநூலின்கணுள்ள வவ்விலக்கணங்களைத் தன்னூலுள்ளே தொகுத்துக் கூறினான் என்றவாறு: (அவன் யாவனோவெனின்) போக்கு அறு பனுவல் நிலம் தரு திருவின் பாண்டியன் அவையத்து என்பது = குற்றமற்ற நூலாராய்ச்சியினை யுடைய மாற்றாரது நிலத்தைத் தன்னையடுத்தார்க்கு நல்குந் திருவினையுடைய பாண்டியன்மாகீர்த்தியென்பான தவையின் கண்ணே என்றவாறு: அறம் கரை நாவின் நான்மறை முற்றிய அதங்கோட்டு ஆசாற்கு என்பது = அறமே கூறு நாவினகத்து நான்மறையு முற்றப் பயின்ற வதங்கோடென்னு மூரி லாசிரியனுக்கு என்றவாறு: அரில் தபத் தெரிந்து மயங்கா மரபின் எழுத்து முறை காட்டி என்பது = நூற்குச் சொல்லப்பட்ட குற்றங்களற விளங்கி யொன்றனுட் பிறிதொன்று கலவாத மரபினை யுடைய தனது நூன்முறையைக் காட்டி என்றவாறு: மல்கு நீர் வரைப்பின் ஐந்திரம் நிறைந்த தன்பெயர் தொல்காப்பியன் எனத் தோற்றி என்பது = அந்நூற்பெயரானே கடல் சூழ்ந்த நிலவுலகத்தின்கணைந்திரவியாகரண நிறைய வுணர்ந்த தன்பெயரைத் தொல்காப்பியனென்று தோன்றச் செய்து என்றவாறு: பல்புகழ் நிறுத்த படிமையோன் என்பது = பல்புகழையு மாயாமை நிறுத்திய தவவொழுக்கத்தை யுடையோ னென்றவாறு: தொகுத்தோனே படிமையோனே யென்பவற் றேகார மசைநிலை யென்பது.

இனிப் பொழிப்புதிரட்ட லென்னையெனிற், கண்ணழித்துக் கூறிய வுரையினைத் திரட்டிப் பிண்டமாகக் கூறுதலே பொழிப்பாகு மாகலிற், குற்றமற விளங்கி மயங்காத மரபினையுடைய தனதியற்றமிழ்நூலிடத்துத் தான்றொகுத்த முறைமையினைப் பாண்டியனவையத் ததங்கோட்டாசாற்குக் காட்டி, யவர் குற்றமின்மையாராய்ந்து நன்றெனக் கொண்டமையானே யந்நூலின்கணைந்திர நிறைந்த தன்பெயர் தொல்காப்பியனென்று தோன்றச் செய்து பல்புகழ்நிறுத்த படிமையோ னந்நூலை யெவ்வாற்றாற் கூறினானோ வெனின், வடவேங்கடமுந் தென்குமரியுமாகிய வவற்றை யெல்லையாக வுடைய நிலத்துவழங்குந் தமிழ்மொழியைக் கூறு நல்லாசிரியரது வழக்குஞ்செய்யுளுமென்று சொல்லப்பட்ட முதலாகிய

வவ்விரண்டிடத்துள்ள வெழுத்தையுஞ் சொல்லையும் பொருளையு நாடிச் செந்தமி ழிலக்கண நிரம்பிய நிலத்தாரொடு பயின்று, முந்துநூலைக்கண், டந்நூலின்க ணவை முறையின்றிக்கிடத்தலா னவை முறையொடு பொருந்தக்கருதி, யம்முந்துநூ லிலக்கணங் களையே தொகுத்துக் கூறினனெனத் திரட்டிக்கூறுத லென்பது. அங்ஙனங் கூறினுந் தொல்காப்பியனென்னும் படிமையோ னடிச் சிவணிய நிலத்தொடு கண்டெண்ணித் தொகுத்துக்காட்டித் தன் பெயர் தோற்றிப் பல்புகழ் நிறுத்தானென்பதே கருத்தாகக் கொள்க.

இனிப் போக்கறுபனுவல், போக்கறுநிலம், போக்கறுதிரு, போக்கறுபாண்டியன், போக்கறு அவையெனவு,மல்குநீர்வரைப்பி னைந்திர, மல்குநீர்வரைப்பிற்றோற்றி நிறுத்தவெனவுங் கூட்டுக, பாயிரமுஞ் செய்யுளாகலி னவை யிங்ஙனமியைய நின்றன. இனி யறங்கரை நாவினா னென்றமையாற் போக்கற்றமையு நான்மறை முற்றிய வாசானென்றமையாற் பனுவலாராய்ச்சியும் பெறப்படு மாகலிற் போக்கறுபனுவலென்னு மடைக ளாசானோ டியையா வாயின.

இனிக் கருத்துரைத்துக் கண்ணழித்துப் பொழிப்புத்திரட் டிக் கூறிய விம்மூப்பகுதியுங் காண்டிகை யெனப்படும். என்னை?

* "பழிப்பில் சூத்திரம் பட்ட பண்பிற்
கரப்பின்றி முடிவது காண்டிகை யாகும்." என்றாராகலின்.

இனி யகலங் கூறலு மூவகைப்படும் காண்டிகைப் பொருளை விரித்துரைத்தலுங், காண்டிகைப் பொருளே யன்றி யப்பொரு ளுக் கின்றியமையா தியைபவை யெல்லா மொன்ற வுரைத்தலு, மறுதலைக் கடா மாற்ற முடைத்தாய்த் தன்னூலானு முடிந்த நூலானு மையமு மருட்கையுஞ் செவ்விதினீக்கித் தெற்றன வொருபொரு ளொற்றுமைகொளீஇத் துணிவொடுநிற்ப வுரைத் தலுமென.

இனி யீண்டுக்கூறிய வுரைவகையாறு மாசிரியர் தொல்காப் பியனார் கூறிய காண்டிகைவகை யிரண்டு முரைவகை யிரண்டு மாகிய நான்கனு ளடங்கும்.

---

* தொல், பொருள், சுஇஎ.

ரக் காண்டிகைவிரி யுரைக்கற் பாற்று. தன்பெயர் தொல்காப்பிய னெனவே, யாக்கியோனது பெயர் பெறப்பட்டது. ஐந்திர நிறைந்த பல்புகழ் நிறுத்த படிமையோனென்ற தவனது பெருமை விளக்கியவாறு.

முந்துநூல் கண்டெனவே யாசிரிய ரகத்தியனார் முதலாய தலைச்சங்கப்புலவ ரியற்றிய வகத்தியமுதலாய நூல்களே யிந் நூலுக்கு முதனூலாமென வழிபெறப்பட்டது. நாடிச் செந்தமி ழியற்கை சிவணிய நிலத்தொடு கண்டென்ற தாமுந்துநூலை யையவிபரீதமற முற்று முணர்ந்தமைக்குக் காரணம் விளக்கிய வாறு.

வடவேங்கடந் தென்குமரி யாயிடைத் தமிழெனவே நூல் வழங்குமிட மத்தமிழ் வழங்குநிலமாமென வெல்லை பெறப்பட்டது.

தொல்காப்பியனெனத் தோற்றி யெனவே நூற்பெயருந் தொல்காப்பியமா மென்பது பெறப்பட்டது. அரில் தபத் தெரிந்து மயங்கா மரபின் எழுத்து முறை யென்ற தந்நூலது பெருமை விளக்கியவாறு.

தொகுத்தோனெனவே முந்துநூலுட் பரந்துகிடந்த விலக் கணங்களைத் தொகுத்து யாத்தானென யாப்புப் பெறப்பட்டது.

எழுத்துஞ் சொல்லும் பொருளு நாடிச் சிவணிய நிலத் தொடு கண்டு தொகுத் தெழுத்து முறைகாட்டி நிறுத்தான் படிமையோ னெனவே, யிந்நூலுட் கூறிய பொரு ளெழுத்துஞ் சொல்லும் பொருளுமாகிய வவற்ற திலக்கணமாமென நுதலிய பொருள் பெறப்பட்டது. தமிழ் கூறு நல்லுலகத்து வழக்குஞ் செய்யுளு மாயிருமுதலி னென்ற தந்நுதலியபொருளுக் கிடம் விளக்கியவாறு.

பாண்டிய னவையத் ததங்கோட்டாசாற்குக் காட்டியென வே பாண்டியனு மவையோரு மதங்கோட்டாசானுங் கேட்டா ரெனக் கேட்போர் பெறப்பட்டது. போக்கறு பனுவ னிலந்தரு திருவிற் பாண்டிய னவையத் தறங்கரை நாவி னான்மறை முற்றிய வதங்கோட் டாசா னென்றது கேட்டாரது பெருமை விளக்கிய வாறு.

முந்துநூல் கண்டு தொகுத்தானெனவே யிந்நூல் கற்றோரு முந்துநூல் கற்றோரை யொப்ப நல்லுலகத்து வழக்கையுஞ் செய்யுளையு மையமு மருட்கையுமற வுணர்ந் தவ்வுணர்வானே யறம் பொருளின்பமும் வீடு மெய்துவரெனத் தானே விளங்கலிற் பயன் பெறப்பட்டது.

செந்தமிழியற்கை சிவணிய நிலத்தொடு கண்டு தொகுத்தானெனவே யிந்நூல் செய்தகாலந் தலைச்சங்கத்தாரது காலமெனக் காலம் பெறப்பட்டது. பாண்டிய னவையெனவே களம்பெறப் பட்டது. முறைப்பட வெண்ணித் தொகுத்தானெனவே முன்னூலு ளெழுத்துஞ் சொல்லும் பொருளு முறையின்றிப் பரந்துகிடந்தன வெனவு, மவை சில்வாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவினோர்க்குப் பயன்படாவெனவு, மதனா லவர்க்குப் பயன்படுமாறு முறைப்பட வவற்றைத் தொகுத்தானெனவும் போதரலிற் காரணம் பெறப்பட்டது.

இனி யொன்றவுரைக்குமுறை யுரைக்கற்பாற்று. வடக்கெஞ்ஞான்று மொருதன்மைத்தாய்த் தன்னொ டேனைத்திசையையு முணர்தற்குத் தானே காரணமாகி நிற்கு மங்கலதிசையாகலி, னிப்பாயிரமுநூலு மென்று நின்று நிலவுதல் வேண்டி முற்கூறப் பட்டது. என்னை? முதற்கண் மங்கலங் கூற லான்றோர் மரபாகலின்.

வடக்குணர்ந்தே தெற்குணர வேண்டு மாகலி னதன்பின்னர்த் தென்றிசை கூறப்பட்டது. என்னை; யெப்பொருள்கூறினுங் காரணத்தை முன்னர்க் கூறலே நூன்முறை யாகலின்.

இனித் திசையறிதற்கு ஞாயிறும் விண்மீன்முதலாயவுங் காரணமாகாவோவெனின், ஞாயிறு முதலாயின வெஞ்ஞான்று மொருதன்மையவாக வுதியாமற் காலந்தோறும் வேறுபட வுதித்தலா, னதுகொண் டொருவகையாற் கிழக்கறியப்படினுங் காலந்தோறு மாறுபடலானு, மதுவும் பகலிரவென்னுங் காலபேதத்தானு மேகத்தானு மறைந்தவழி யறியலாகாமையானு, மவை யெல்லாஞ் சிறப்புடைக் கரணமாகாமையா னெஞ்ஞான்று மோரிடத்துத் திரிபின்றி நிற்குந் துருவமீனைத் தன்னிடத் துடைமை

யானு, மக்குறிகொண் டெக்காலத்து மாறின்றி வடக்கறியப் படலானு மதுவே காரணமாத லுணரப்படுமென்பது. இதுவன்றி யிக்காலத்துளதாகிய திசையறி கருவி, யென்ஞான்றும் வடக் கையே யுணர்த்தலு மறிக.

இனி யாசிரிய ரிந்நூல் செய்தகாலத்து வேங்கடமலையின் வடக்கிருந் திமயமலைவரை யாரியமும், வேங்கடமலையின் றெற் கிருந்துகுமரிமலைவரைத் தமிழும் பரவியிருந்தபடியானு மக்கா லத்து வடதிசைக்கட் கங்கையாறு மிமயமலையும்போலத் தென்றி சைக்கட் பஃறுளியாறுங் குமரிமலையுங் கடலாற் கொள்ளப்படாம லெல்லாரானு மறியப்பட்டுக் கிடந்தமையானும், வடக்குந் தெற் கும் பிறவெல்லையு முளவாக வவற்றைக் கூறுமெல்லாரு முணர் தற்பொருட்டு மறைவின்றி நெடுந்தூரந் தோன்றற்பாலவாய மலை களைக் கூறினார்.

கிழக்கு மேற்கு மெல்லை கூறாமையிற் கடல்வரைத் தமிழ் நாடன்றிப் பிறநா டிலவென்பதூஉ மதனாற் கடலே யெல்லையா யின வென்பதூஉம் பெறப்பட்டன.

இனி வடக்கின்கண் வேங்கடத்தைக் கூறினமையானே யதன்வடபாலாரியமுந் தெற்கின்கட் குமரிமலையைக் கூறினமை யானே யதன் றெற்கின்கட் கடல்வரை யக்காலத் திலக்கணவரம் பெய்தப் பெறாத தமிழ்ச்சிதைவு மாரியச்சிதைவுமாகிய பிறமொழி களும் வழங்கினவென்பது பெறப்படும் என்னை? வேங்கடத்தின் வடபாலாரியமுந் தென்பாற் றமிழும் வழங்கிய காரணத்தா லவை வடமொழி தென்மொழியெனப் பெயர்பெற்றமையானுங், குமரி மலையின் றெற்க ணசுரரு மிராக்கதரும் வழங்கிய பிறமொழிக ளுயர்ந்தோர் வழக்குடையதாகி யிலக்கணவரம் பெய்தப் பெற்ற தாயிற் றமிழொன்றே தென்மொழியெனப் பெயர்பெறல் கூடா மையானு மென்பது.

இனி யிந்நூல் செய்தபின்னர்ப் பல்யாண்டு கழிந்த பிற்கா லத்துத் தென்கடலின் வடபாற் பிறமொழிகள் வழங்கியநாட் டையு மதன்வடபாலுள்ள குமரிமலையையு மதன்வடபால் வடிம் பலம்ப நின்ற பாண்டியனுக்கிய பஃறுளியாற்றையு மதன்வடபா லவன்முன்னோர்முதலாகத்தொன்றுதொட்டுவளம்படைத்தவெழு

நூற்றுக்காவதப் பரப்புடைய நாற்பத்தொன்பது தமிழ்நாடுகளையு மவற்றின் றலைநகரமாகிய தென்மதுரையையுங் கடல்கொண்டது. பின் கபாடபுரம் பாண்டியர்க்குத் தலைநகரமாயிற்று. பல்யாண்டு கழியப் பின்னொருழியிற் கபாடபுரத்தையுங் குமரியாற்றையு மின்றோரன்ன யாறு மலை பிறவற்றையு மக்கொடுங்கடலே கொண்டது. அக்கால மிடைச்சங்கமிருந்து தமிழாராய்ந்த காலம்போலு மெனக் களவியலுரையுங் கூறிற்று. இவ்வா றாசிரியர்காலத்தின்பின் பல்யாண்டின் முன்னர்க் காலவிகற்பத்தாற் கடலுண் மூழ்கிற்றாகலி னவர் தென்பாலெல்லையாகக் கூறிய குமரிமலை யிக்காலத்துத் தோன்றாதாயிற்று.

இனி வடவேங்கடமுந் தென்குமரியு மேழாவதன் றொகைகள். வேங்கடமுங்குமரியுஞ் செவ்வெண். அவை யாயிடையென் பதன்கணுள்ள வவ்வென்னும வகரவீற்றுச் சுட்டுப்பெயராகிய தொகுதியை யிறுதியிற் பெற்றன. அவ்வென்னும் வகரவீற்றுப் பலவறிசொ லுயிர்மயங்கியலி * னீடவருதலென்றதனான் முடியாது கிளந்தவல்ல செய்யுளுட் டிரிநவுமென்ற புறனடையான் முதனீண்டு யகரம்பெற் றிடையென்னு மேழாவதனொடு புணர்ந்தாயிடையென முடிந்தது. அவ்வெண்ப தாகுபெயரா னவ்விரண்டனையு மெல்லையாகவுடைய நிலத்தை யுணர்த்திற்று. உலகமென்பது நிலத்தையு முயிரையு முயர்ந்தோரையு முணர்த்தும் பலபொரு ளொருசொல்லாயினுந் தமிழ்கூறு முலகமென வினையடுத்து நின்றமையா னுயர்ந்தோரை யுணர்த்திற்று. உயர்ந்தோராவார் திரிபுரமெரித்த விரிசடைக்கடவுளுங் குன்றெறிந்த முருகவேளு மாசிரியரகத்தியனாரு மார்க்கண்டேயனாரு நாரதரு நிதியின்கிழவனு முதலாய தலைச்சங்கப் புலவர்.

இனி வடவேங்கடந் தென்குமரி யென்பது, கட்டுரைவகையான் வந்த சொற்சீரடி; தமிழ்கூறு நல்லுலகத்தென்பது, குறைவுசீர்த்தாய சொற்சீரடி; இங்ஙனஞ் சொற்சீரடியை முற்கூறினார்; சூத்திரயாப்பிற் கின்னோசை பிறத்தற்பொருட்டு. என்னை? பாஅவண்ணஞ் சொற்சீர்த்தாகி நூற்பாற் பயிலுமென்றலின். ஏனைய வடிகளெல்லாஞ் செந்தூக்கு.

இனி வழக்காவது சிலசொற் பிறந்த வக்காலத் திஃதறந் தையுணர்த்திற்று; இது பொருளையுணர்த்திற்று; இஃதின்பத்தை யுணர்த்திற்று; என்றறிய நிகழ்வது.

செய்யுளாவது, ஆசிரியர் செய்யுளியலிற் கூறிய பாட்டுமுத லாய வவ்வேழ்நிலங்க ளறம்பொருளின்ப மென்னுமூன்றுபொரு ளும் பயப்ப நிகழ்வது.

வழங்குமாற்றான் வழக்கெனப்படுதலிற் செய்யுளும் வழங் கென்றதன்க ணடங்குமெனின், னஃதியற்கையாகிய வழக்கினின்று மெடுத்துச் செய்யுளுறுப்பு முப்பத்துநான்கனுண் மாத்திரை முதல் வண்ணமீறாகவுள்ள விருபத்தாறுறுப்பிற் குறையாது மரபு நிலைதிரியா வேறுபாட்டானொருபுலவனாற் செப்பப்படுஞ்செயற் கைத் தாகலி, னதன்க ணடங்காது செய்யுளெனப் பெயர்பெற் றது. செய்யுளுக்குக் காரண மாகலின் வழக்கு முற்கூறப்பட் டது. இனி,

† "வழக்கெனப் படுவ துயர்ந்தோர் மேற்றே
நிகழ்ச்சி யவர்கட் டாக லான."

என்றதனான் வழக்குஞ் செய்யுளுமெனவே யுயர்ந்தோரது வழக்குஞ் செய்யுளுமென்பது போதரலி னல்லுலகத்தெனல் வேண்டாவெனின், னேனையோர் வழக்குஞ்செய்யுளுங் கொள்ளப் படாவென வறிவித்தற்பொருட் டங்ஙனங் கூறினர். என்னை?

|| "கல்லாதா னொட்பங் கழியநன் றாயினுங்
கொள்ளா ரறிவுடை யார்."

என்றாராகலிற் பல்காலு மாறுபடு மிபல்புடைய வவர்வாய்ப் படலி, னவர் வழக்குஞ் செய்யுளு நல்லாசிரியரது வழக்கையுஞ் செய்யுளையு மொரோவழி யொத்திருப்பினுங் கொள்ளப்படா மையா னென்பது.

வழக்குஞ் செய்யுளுமாகிய வவ்விரண்டையு முதலென்றார்; என்னை? யறிவுடைப்பொருளாகிய வுயி ரறிவுடைப் பொருளு மறிவில் பொருளு மாகிய காட்சிப்பொருளையுங் கருத்துப்பொரு ளையுமெய் வாய் கண் மூக்குச் செவியெனனு மைம்பொறிவாயி

† தொல், பொருள், சுசஅ. || குறள், ௪0௨.

லாற் கண்டறியாம லவ்வைந்தனுட் செவியைத் துணையாகக் கொண்டு மனமென்னும் பொறியாற் கேட்டறிதற் கவையே யிடமாக நிற்றலின்.

இடத்து நிகழ்பொருளை யிடமுணர்ந்தன்றி யறியலாகாமையி னிடன் காரணமாதல்பற்றி யவ்விடன் முதலெனப்பட்டது. என்னை?

‡ "முதலெனப் படுவது நிலம்பொழு திரண்டி
னியல்பென மொழிப வியல்புணர்ந் தோரே." என்றாராகலின்.

முதலை யுணர்ந்தன்றி யதன்சினை யித்துணையவென வறியலாகாமையான் வழக்குஞ் செய்யுளுமாகிய முதல் கூறப்பட்டபி னவற்றின் சினையாகிய வெழுத்துஞ் சொல்லுங் கூறப்பட்டன. அவற்றுள்ளுஞ் சொல்லுக் கெழுத்துக் காரணமாதலி னது முற்கூறப்பட்டது. முதலுஞ் சினையுமாகிய விடங் காரணமாக வறியப்படுதலி னவற்றின் பின்னர்ப் பொருள்கூறப்பட்டது.

இனி வைசேடிகர் கூறிய பொருள் பண்பு தொழில் சாதி விசேட மியைபென்னு மறுவகைப்பொருளையு மவற்ற தின்மையையு முதல் சினை யடையென மூன்றாகவும் பொரு ளிடங் காலஞ் சினை குணந் தொழிலென வாறாகவு மிவ்வாசிரியன் பகுக்கும். அதனை யடை சினை முதலெனவு, முதலிற் கூறுஞ் சினையெனவுஞ், சினையிற் கூறு முதலெனவும், பண்பு கொள் பெயரெனவும், பிறந்த வழிக் கூறலெனவும் பிறவும் பின்னர்க் கூறுமாற்றா னறிக.

இனி வழக்குஞ் செய்யுளு மிடமாயவாறு கூறுதும். ரியர்,

§ "வினையே செய்வது செயப்படு பொருளே
நிலனே காலங் கருவி யென்றா
வின்னதற் கிதுபய னாக வென்னு
மன்ன மரபி னிரண்டொடுந் தொகைஇ
யாயெட் டென்ப தொழின்முத னிலையே."

என்றாராகலி, னொருபொருள் பிறிதொன்றனை யைப்பொறி வாயிலாற் காட்சியி னறியுமிடத் தத்தொழிற்குக் காரணமாகிய

‡ தொல், பொருள், ச. § ஷை, சொல்லதிகாரம், கக௨.

வினையு, மப்பொருளாகிய வத்தொழிலைச் செய்வது, மப்பொருளா னறியப்படும் பிறிதொருபொருளாகிய செயப்படுபொருளு, மச் செயப்படுபொரு ணிலனீர் முதலாயவற்றுள் யாதானுமோ ரிடன் பற்றியே நிற்குமாகலி னவ்விடனு, மவ்விடத்துநிகழ் பொருளை யறித லிறப்பு நிகழ் வெதிர்வென்னு முக்காலத்து ளொன்றுபற்றி யாகலி னக்காலமு, மறிதற்கருவி யைம்பொறியு மனமு மன்றி வேறொன் றின்மையா னக்கருவியுந், தனக்காயினும் பிறர்க்காயி னும் யாதானுமொரு பயனின்றி யொருதொழிலு முளதாகாதா கலி னின்னதற் கிதுபய னென்பனவுமெனத் தொழின்முதனிலை யெட்டும் பெறப்பட்டாற்போல, வைம்பொறிவாயிலாற் காட்சியி னறியாது கேள்விவாயிலான் வழக்குஞ் செய்யுளும் பற்றி யப் பொருளை மனக்கருவியா னறியுந் தொழிற்கு மவ்வெட்டுமுதனிலை யும் வேண்டுமாகலானு, மத்தொழிற்கு நிலமொழிந்த வேனைய வேழு முற்கூறியது கொண்டு விளங்குதலா, னைம்பொறிவாயிலா னறியுஞ் செயப்படுபொருளி னிடனெனக் காட்சியிற் றோன்று நிலனீர்முதலாயவை பற்றி யறியாமன், மனக்கருவியா னறிதற்பால வாய வச்செயப்படுபொருளை வழக்குஞ் செய்யுளும் பற்றி யறித லானு மவையே யிடமாக லறிபப்படு மென்பது.

இனி வழக்குஞ் செய்யுளு மிடமாகா; கருவியேயெனி, னைம் பொறியு மனமுமாகிய வறிதற்கருவி யாறனு ளவை யொன்றாகா மையானு, மிடமின்றி யொருதொழிலு முளதாகாமையா னத் தொழிற்கு வழக்குஞ் செய்யுளுங் கருவியாகமுடியி னிடனெனப் படுவது பிறிதொன் றுங் காணப்படாமையானு மது பொருந்தாது. கருவியென்றதனைப் பல்வகைக்காரணங்கட்கும் பொதுப்பெயரா கக் கொள்ளின் வினைமுதலாய வெட்டுந் தொழிற்காரணமாகலி னக்கருத்தானே யவற்றைக் கருவியெனக் கோடலும் பொருந்து மென்பது.

இனி வழக்குஞ் செய்யுளுமாகிய நில னொலிவடிவாயிற் செவி யானும் வரிவடிவாயிற் கண்ணானு முணரப்படும். வரிவடிவு கண் ணானன்றி மெய்யறிவானு முணரப்படுந் தன்மை யுடைத்து. அது குருடாயினார்க் கவர்கைப்பற்றிப் பிறரெழுதிக்காட்டி னதனை யவ ருணருமாற்றா னறிக.

இனி யெழுத்தெனப்படுவ தியாதோவெனிற், கண்முதலாய பிறவற்றுக்குப் புலனாகாது செவிப்புலனே யாகு மொலிவடிவுஞ், செவிமுதலாய பிறவற்றுக்குப்புலனாகாது கண்ணுக்கு மெய்க்கும் புலனாகும் வரிவடிவு முடைத்தாய்த், தனித்துநின்றாயினுஞ் சார்ந்துநின்றாயினுந் தன்னை யுணர்த்தலுடன், பொருளுணர்த்துஞ் சொல்லாகலு மச்சொல்லுக் குறுப்பாகலு மாகிய விருதன்மையு மொருங்கு பெற்றாயினு, மன்றி யுறுப்பாக வியைதற்றன்மை யொன்றே பெற்றாயினு நிற்கு மொலியாம்.

தன்னையே யுணர்த்துங் கடலொலி யிடியொலி முதலாயவுந் தன்னொடு மனைவினையு மகிழ்வு முதலாய பிறபொருளையு முணர்த்துஞ் சங்கொலி நகையொலி முதலாயவுஞ், சொல்லாதற்றன்மையொடு கூடியாயினுந் தனித்தாயினு முறுப்பாதற்றன்மை யெய்தாமையி னெழுத்தெனப்படா வாயின.

இனி ஙா ஙி முதலாய பதினோருயிர்மெய்யெழுத்துந் தம்மை யுணர்த்த லன்றிப் பிறிதொரு பொருளுணர்த்துஞ் சொல்லுக் குறுப்பாகாமையி னவையு மெழுத்தெனப் படாவோவெனி,னவை யோரெழுத்தாகாம லீரெழுத்தாகவே நிற்றலா னங்ஙகரமெய்யு மதன்கணேறிய வுயிருஞ் சொல்லுக் குறுப்பாதற் றன்மை யுடைமையானு, மெழுத்துப்பல வொருங்குகூடி னவை யேற்றபெற்றி சொற்குறுப்பாத லன்றி யெல்லா முறுப்பாக வேண்டுமென விலக்கண மன்மையானு, மாசிரிய ரகரமுத லாய்தமீறாய முப்பத்து மூன்றே யெழுத்தெனக் கூறினமையா னவற்றின் கூட்டமே யுயிர் மெய்யாவ தன்றி யம்முப்பத்துமூன்றின் வேறாய பிறிதோரெழுத் தெனல் பொருந்தாமையானும், டறலள வென்னும் புள்ளியென வியைந்து நிற்பினு நான்கெழுத்தெனப் படுதலன்றி யோரெழுத் தெனவு மவை சேர்ந்து மொழிக்குறுப்பாதல் வேண்டுமெனவுங் கொள்ளப்படாமைபோல, வுயிர்மெய்யெழுத்து மீரெழுத்தெனக் கொள்ளப்படுத லன்றி யோரெழுத்தெனவு மொழிக்குறுப்பாதல் வேண்டுமெனவுங் கொள்ளப்படா வென்பது.

இனி யோரெழுத் தொருமொழியென்ப தீரெழுத்தாய கா முதலாய வுயிர்மெய்யெழுத்தையு முணர்த்துமா றென்னையெனிற், செய்யுளி லுயிரெழுத் தெண்ணுப்பெற மெய்யெழுத் தெண்ணுப்

பெருமைபற்றி யோரெழுத் தொருமொழியெனப் படினு மிரண் டொலியின் கூட்டமாதலி னொலிபற்றி யீரெழுத்தெனவே கோள் ளப்படு மென்பது.

ஈண் டொலியென்றது செவிப்புலனாற் கவரப்படும்பொருளை. என்னை? காற்றுக் கட்புலனாகா வுருவினதாயினு மெய்ப்புலனாகி யுற் றின்பதுன்ப மாக்கலானு, மியங்குதலானு, மரமுதலாயவற் றை யியக்கலானு, மிக்காற்று வலி திக்காற்று மெலிதெனக் கூறப் படலானும், பொருளென்று கோடும்; அதுபோல வொலியு முந்தி முதலாகத் தோன்றி யெண்வகை நிலத்தும் பிறந்து கட்புலனாந் தன்மை யின்றிச் செவிக்கட் சென்றுறு மூறுடைமையானு, மின் பதுன்ப மாக்கலானும், வன்மை மென்மை குறுமை நெடுமை கோடலானும், விசும்பின்க ணியங்குவதோர் தன்மை யுடைமை யானும், பேரொலிக்கண் மண்ணதிர்தல் காணப்படலானுங், காற் றுற் காரியப்படுந் தன்மையுடைத்தென வறியப்படலினென்பது.

இனி யவ்வொலியது வரிவடிவாவது, கட்புலனாகா வுரு வுடைய வொலியைச் செவிப்புலனாங் காலத்தன்றி, யேனைக்கா லத்து முணருமாறு வட்டஞ் சதுர முதலாயவடிவாக வெழுதப் படுவது. அவ்வரிவடி வொருவன் பிறனொருவனைக்கண் டவன்வடி வை யெழுதிவைப்பி னவ்வடி வவனைக் காணாவிடத்து முணர்த்து மாறுபோல வொலிவடிவை யுணர்த்து மென்பது.

இனி யாசிரியர் யாண்டு மாறுபடாமையா னொலிவடிவிற்கே யிலக்கணங்கூறிக், காலந்தோறு மாறுபடு மியல்புடைமையா னவ் வக்காலத்து வழக்குப்போல வெழுதிக் கொள்கவென்னுங் கருத் தானே வரிவடிவை யிவ்வா றெழுதுகவென்று கூறாது, நூல்விதி யானன்றி யவ்வக்காலத்து வழக்கா னெழுதப்படுமாயினு மவ்வரி வடிவுட் சிலவற்றுக் கொலிவடிவின் றன்மைபற்றி யெக்காலத்து மாறுபா டின்றி வேண்டற்பாலவாய சிலவடையாளமே கூறினார். இவ்வாற்றா னிருவடிவுங் கொண்டாராயிற்று.

இனி யவ்வடையாள மொலிபற்றிய குறியாகலிற் காலத்தான் மாறுபடு மியல்புடைத்தாய வரிவடிவு மாறினு மாறாமையு மாசிரி யர் வரிவடிவுகூறாமையு நூன்மரபுட் கூறுதும்.

இனித் தன்னையுணர்த்திப் பொருளுணர்த்துஞ் சொல்லாக வுஞ் சொற்குறுப்பாகவு நிற்கு மொலியாவது, ஆ ஈ முதலாயின வின்ன தன்மைய வோசையென வுணர்த்தலுட னொருவிலங்கு மொருபறவையுமெனப் பொருளுணர்த்துஞ் சொல்லாகியும், ஆர் ஈர் எனச் சொற்குறுப்பாகியு நின்றாற்போல்வது.

இனிச் சொற்கிசையு மொலியாவது, தன்னை யுணர்த்திப் பொருளுணர்த்துஞ் சொல்லுக் குறுப்பாகமாத்திர மிசையு மொலியாம். அஃதொகரவுயிர் சொற் குறுப்பாதற் றன்மை யொன்றே பெற்று, ஒற்றர் ஒன்று ஒண்மையென நின்றாற் போல்வது.

இனிச் சொல்லாவது, எழுத்துத் தனித்தாயினுங் கூடிநின் றாயினுந் தம்மை யுணர்த்தி யிருதிணைப் பொருட்டன்மையு மொருவ னுணர்தற்கு நிலமாகிநிற்கு மொலியாம். ஆ ஈ ஊ முதலா யின வோரெழுத்தாலாய சொற்கள். கண் கடல் கழுத்துக் கறங் கன் முதலாயின பலவெழுத்தாலாய சொற்கள்.

இனி ஆ முதலாயின தம்மை யுணர்த்து நிலைமைக்க ணெழுத் தாகவும் பெற்றமுதலாய பொருளை யுணர்த்து நிலைமைக்கட் சொல் லாகவுநின் றிருதன்மையும் பெற்றவழிச் சொல்லுக் குறுப்பா தற்றன்மை யெய்தாவெனவுந், தம்மை யுணர்த்து மொருதன்மை யுடையவாய வழியே ஆட்டம் ஈட்டம் ஊக்கம் என்றாற்போலச் சொற்குறுப்பாகுமெனவு மறிக.

இனி மீண்டுக்கூறும் பொருள் யாதோவெனிற், சொற் றொடரே நிலமாக மனக்கருவியா னுணரப்படு மறம்பொருளின் பங்களு மவற்றதுநிலையாமையு மாகிய வறுவகைப்பொருளுமாம்.

இனி வீடுகூறாரோவெனி, னது சிந்தையு மொழியுஞ் செல் லா நிலைமைத்தாகலின் வீடுபேற்றுக்கு நிமித்தங் கூறலன்றி யதன் றன்மைகூறார். அந்நிமித்த மறத்தின் பகுதியாகிய துறவு ளடங் கும். இக்கருத்தானே தெய்வப்புலமைத் திருவள்ளுவனாரு முப் பாலாகக்கூறி மெய்யுணர்தலா னிமித்தங்கூறினாரென்பது.

இனி யெழுத்துச் சொற்பொருளுக்கு வழக்குஞ் செய்யுளு முதலாக நிற்றலானு, மவை யுளவாதற்கு நல்லுக முதலாக நிற்ற

லானு, மவ்வுலக மக்காலத்து வடமொழி கூறு முலகமுந் தென்
மொழி கூறு முலகமுமென விரண்டேயாகலின் வடமொழி கூறு
முலக மன்றென விலக்கற்குத் தமி ழுடையாகல் வேண்டுமாக
லானு,மத்தமி ழின்னவிடத்து வழங் குமென வெல்லைகூறல்வேண்டு
மாகலானு, மவ்வெல்லையைத் திசைகூறி யறிவித்தலே மரபாகலா
னுந், திசைநான்காகலி னவற்றை யுணர்தற் கவற்றுள் வடக்கே
காரணமாகலா னதுவே முதற்றிசையெனப் படலானும்,
வடவேங்கடமெனத் தொடங்கி யேனையவு மம்முறையானே
கூறினரென்பது.

இனி நாடுதலென்பது, எழுத்துச்சொற்பொருளை யாராய்ந்
துள்ளவா றுணர்தல். அது சிவணியவென்னும் பெயரெச்சவினை
கொண்டது. செந்தமிழ் செம்மையை யுடையதாகிய தமிழ். செம்
மை யென்றொன்றும் விகார மின்றி யொருதன்மைத்தாகி நிற்கு
மரபு. இதனைச் * சிறப்பென்னுஞ் செம்பொருள் காண்ப தறி
வென்பதனானு மறிக. இயற்கை யத்தமிழின்க ணொருவராற்
கற்பித்துச் சொல்லப்படாம லநாதியே யியல்பானமைந்த விலக்க
ணம். சிவணியவென்னு மெச்ச நிலமென்னு மியர்பெயர்ப்
பொருளைக் கொள்ளாம லதனுறுபெயர்ப் பொருளாய புலவரைக்
கொண்டது.

நிலமென்பது தலைச்சங்கப் புலவரிருந்த நிலம். அது கட
லாற் கொள்ளப்பட்ட தென்மதுரைக்கண்ணுள்ள கல்விக்கழகம்.
தலைச்சங்க மிருந்து தமிழாராய்ந்தகாலத் திறுதியிற் பாண்டியன்
மாகீர்த்தியென்பானது காலத் தம்மதுரையின் வீற்றிருந் திவ்வா
சிரியர் நூல்செய்தாராகலி னிலத்தொடு முந்துநூல் கண்டென்றார்.
நக்கீரனா ரடியார்க்குநல்லார் நச்சினார்க்கினியா ரிவருரைகளா
னிந்நூ றலைச்சங்கத் திறுதியிற் செய்யப்பட் டிடைச்சங்கத்
தாதிக்காலந் தொட்டு வழங்கிற்றென வறியப்படும். நில மாகு
பெயராகித் தென்மதுரைக்கழகத் திருந்த வாசிரியரகத்தியனார்
முதலாய தலைச்சங்கப்புலவரை யுணர்த்திற்று.

நிலத்தொ டென்பதன்க ணொடுவுருபு, அதனொ டியைந்த
வொருவினைக் கிளவியாகிய கண்டென்னும் வினைகொண்டது.

* குறள், ௩௫அ.

ஆசிரியரகத்தியனா ரிடத்துக்கற் றேனைப்புலவரொடு பயின்று முந்துநூலை யையமுமருட்கையுமற வுணர்ந்து புலமை நிரம்பினா னென்பது விளங்க நிலத்தொடு கண்டென்றார். என்னை, முக்காற் கேட்பினனவு மமைவரக் கொளினுங் காற்கூறல்லது பற்றல னெனவு, மவ்வினையாளரொடு பயில்வகையானு முரைத்தலா னும் புலமை மாண்புடைத்தாமெனவுங் கூறினாராகலி னென் பது.

இனிச் செந்தமிழியற்கை சிவணிய நிலமென்பது, வேங்கட மலையையுங் குமரிமலையையு மெல்லையாக வுடைய தமிழ்நா டெல்லாங் குறியாது தென்மதுரையிடத்துத் தலைச்சங்கப்புலவ ரிருந்த கல்விக் கழகத்தை யுணர்த்துமா றென்னையெனி; னாட் டினுட் கற்றாருங் கல்லாருமிருத்தலி னது செந்தமிழது திரிபுஞ் சிவணுதலொருதலையாகலிற் செந்தமிழியற்கை சிவணியவென்னு மடை யந்நாட்டை யினஞ்சுட்டி விலக்கிச் செந்தமிழது திரிபு சிவ ணாமலதனியற்கையே சிவணிய. சங்கமிரீஇய நிலத்தினை யுணர்த் தல் வழக்காறு மென்பது.

முந்துநூலெனப் பொதுப்படக் கூறினமையானே, யாதிநூ லாகிய விசைநுணுக்கமு மகத்தியமு மதற்கிளைநூலாகிய தேவ விருடி நாரதன்முதலியோர் செய்த நூல்களுமென விதுதொடக் கத்த முதனூல்களு, மவற்றின் வழிநூலெனப்பட்ட மாபுராணம் பூதபுராண மிசைநூலாகிய விசைநுணுக்க முதலாய நூல்களு மென விந்நூலுக்கு முன்னுளவாகிய தலைச்சங்கத்து நூலெல் லாங் கொள்ளப்படும். மாபுராண முதலாயின தலைச்சங்கத்தே தோன்றினு மவையெல்லாந் தலையாய வறிவினோராகிய வச்சங் கத்தார்க்கு நூலாகாம லிடைச்சங்கத்தார் முதலாயினோர்க்கே நூலாயின.

இனி யெழுத்துஞ் சொல்லும் பொருளு நாடிச் சிவணிய நிலத்தொடு முந்துநூல் கண்டெண்ணிப் புலந்தொகுத்தோ னென் றமையானு, மெழுத்துமுறை காட்டி யென்றமையானு, மம்முந்து நூற்க ணுள்ள விசைத்தமிழு நாடகத்தமிழு மிந்நூற்கு முதனூ லாகாம லியற்றமிழ்மாத்திரையே முதனூலாயிற்றென்பது.

இனித் தலைச்சங்கப் புலவருட் டலைவராகிய வகத்தியனார் முதலாயினா ரிவ்வாசிரியர்க் காசிரியரு மாசிரியர்க் கிணையாயினாரு மாகலின், அவரெல்லா மிவர்க் குயர்ந்தோரென விளக்கற்பொருட் டுயர்பொருளை யுணர்த்தும் பெயர்வழித் தோன்றற் பாலதாய வொருவினையொடுச்சொல்லை யாகுபெயரா னுயர்பொருளுணர்த்து நிலமென்னும் பெயர்வழிப் புணர்த்து நிலத்தொடு கண்டென்றார்.

இனி யிவ்வாசிரியரை யொப்ப வகத்தியனாரிடத்துக் கற்ற வதங்கோட் டாசிரியரும் பிறருந் தலைச்சங்கத்துப் புலவரேயாகலின், இவர்க் கெல்லாரு முயர்ந்தோரெனப் படுமா றென்னையெனின், அதங்கோட் டாசிரியர் முதலாயினா ரெழுத்துச் சொற்பொருளைத் தாமாக நாடிச் செந்தமி ழியற்கை சிவணும லோராசிரியர்பாற் கற்றே சிவணினாராகலானு, மகத்தியனார் முதலாயினா ரோராசிரியர் பாற் கல்லாமன் முனைவ னருள்பெற் றவன்கண்ட வியற்கைமுத னூல் கொண்டு தாமாகவே யவற்றை நாடிச் செந்தமி ழியற்கை சிவணினாராகலானு, நாடிச் சிவணிய நிலமென்றது தலைச்சங்கப் புலவருட் செயற்கை முதனூ லாகிய வகத்தியமு மதற் கிணைநூல் களு மியற்றிய வாசிரிய ரகத்தியனார் முதலாயினாரையே யுணர்த் திற் றென்பது.

இனி முந்துநூலெனற் கியற்கை முதனூலுஞ் செயற்கை முதனூலுமென வுரையாம லவற்றொடு மாபுராண முதலாய வழி நூலுஞ் சேர்த்த லென்னையெனின், முதனூ லென்னாது முந்துநூ லென்றமையானு, மிவ்வாசிரியர் நூல்செயற்கு முன்னரே மா புராண முதலாயின தோன்றினமையானு மென்பது.

இனி நல்லுலக மெனற்குத் தலைச்சங்கப் புலவரு மவரனை யாரு மெனவு, நிலமெனற்குத் தென்மதுரைக் கழகத்திருந்த தலைச்சங்கப் புலவருள்ளுஞ் சிலரேயெனவு, மாயிருமுதலி னெனற் கவ்விரு முதலானுமெனக் கூறும லவ்விரண்டிடத் துள்ளவெனவு முரைத்தவா றென்னையெனின், எழுத்துஞ் சொல்லும் பொருளுந் தலைச்சங்கத்துப் புலவரது வழக்கினுஞ் செய்யுளினு மவரனையா ராகிய முக்காலத்துப் புலவரது வழக்கினுஞ் செய்யுளினு முண் மையான், நல்லுலக மென்புழி முக்காலத்துப் புலவரையு முணர்த்து மாறு தமிழ்கூறு நல்லுலகமெனக் காலப்பொதுமையுணர்த்

னுஞ் செய்யுமென்னும் வாய்ப்பாட்டுக் கூறுமென்னு மெச்சம் புணர்த்தமையானு, நிலத்தொடென்புழித் தலைச்சங்கப் புலவரு ளிவ்வாசிரியர்க்கு முற்பட்ட விறந்தகாலத்துப் புலவரையே யுணர்த்துமாறு தமிழ்கூறு மென்றாற்போல முந்துநூல் கண்டு செந்தமிழியற்கை சிவணு நிலமெனக் கூறுமன், முக்காலத்துப் புலவரது வழக்கினுஞ் செய்யுளினுங் காணப்படுவன வாகிய வெழுத்துஞ் சொல்லும் பொருளு நாடிச் செந்தமிழியற்கை சிவணிய நிலமென விறந்தகாலமே யுணர்த்துஞ் சிவணிய வென்னு மெச்சம் புணர்த்தமையானும், வழக்குஞ் செய்யுளு மாயிரு முதலி னெழுத்துஞ் சொல்லும் பொருளு நாடி யென்பது † செய்யுண் மொழியாற் சீர்புனைந் தெனவு, ‡ விழுமென் மொழியான் விழுமியது நுவலினு மெனவு, $ மோங்கிய மொழியா னோங்கன மொழுகி யெனவு நின்றாற்போல, வாயிரு முதலா னுடியென மூன்றுவ தேலாமற் § செய்யுண் மருங்கின் மெய்பெறநாடி யெனவுஞ், ¶ சொல்லிய மரபி னிளமை யெனவு, *மயங்கா மரபி னெழுத் தெனவு நின்றாற்போல, வின்சாரியை பெற்று முதலினென நின்றமையாற், பிறரது வழக்குஞ் செய்யுளு மரபுநிலை திரித லியல்பாகலின் மரபுநிலை திரியாது தலைச்சங்கப் புலவரு மவரனையாரு மாகிய முக்காலத்துப் புலவரது வழக்கினுஞ் செய்யுளினு மொப்ப நிகழ்வன வாகிய வெழுத்துஞ் சொல்லும் பொருளு மெனவே பொருளுணர்த்து மாகலானு மவ்வாறுரைத்தல் பொருந்திற்றென்பது.

இனி யாயிடை வழங்குந் தமிழைக் கூறு முலக மெனினுங் கூறுமென்னும் வினையடை நிலத்தை யினஞ்சுட்டி விலக்கி யுயர்ந்தோரை யுணர்த்துமாகலாற், கூறு நல்லுலக மென்ற தென்கருதி யோவெனின், னங்ஙனங் கூறி னுலக மென்ப துயிரையு முணர்த்து மாகலானு, முணர்த்தினு மேனைய வுயிர் தமிழைக் கூறு வாகலிற் கல்லாது வைத்துந் தமிழைக் கூறு மிழிந்த மாக்களை யுணர்த்தல் கூடுமாகலானு, மக்கல்லாத மாக்க ளல்லுலக மன்மையானு, மவரையு மினஞ்சுட்டி விலக்கி யுயர்ந்தோரையே யுணர்த்தற் பொருட் டங்ஙனங் கூறினா ரென்பது.

---

† தொல், பொருள், ௫௪௧ ‡ டை ௫௫௧. $ டை ௫௫௫. § டை ௫௫௬. ¶ டை ௫அ௨. * டை பாயிரம்.

இனி நல்லுலக மெனலே யமையும்; கூறு நல்லுலக மென லென்கருத்தி யெனி, னங்ஙனங் கூறி னல்லோரது நிலமு நல்லுலக மெனப்படு மாகலானு, நிலந் தமிழ்கூறு தாகலானு, மதனை யினஞ்சுட்டி விலக்கற்பொருட்டுத் தமிழ்கூறுமெனல் வேண்டு மென்பது.

இனி வேங்கடமென்பது மலையே யாகலானு, மலையு மங்கலங் குறிக்கு மாகலானும், வேங்கடங் குமரி யெனினும் வடக்குள் ளது வேங்கடமுந் தெற்குள்ளது குமரியலையு மாகலாற் றிசை யுய்த்துணரப்படு மாகலானும் வடவேங்கடந் தென்குமரி யென் றது மிகையாமெனின், வேங்கடங் குமரியெனச் சிகண்டியா சிரியர் கூறியாங்குச் சொல்லின்வழியே யுய்த்துணர்வு வேண்டு மாகலானும், வேங்கடங் குமரியை யறிந்தார்க் கன்றி யேனை யோர்க் கவ்வுய்த்துணர்வு கூடாமையா னவ ரவை யாண்டுளவென் றையுறுவ ராகலானு, மறிந்தாரே யன்றி யறியாதாரு முணரு மாறு வடவேங்கடந் தென்குமரியெனத் திசை விளங்கக் கூறன் மிகையாகா தென்பது.

முறைப்பட வென்றமையான் முந்துநூலு ளியலிசைநாடக மென்னு முத்தமிழு மொன்றனுட் பிறிதொன்று விரவப்பெற்று, மியற்றமிழுள்ளு மெழுத்துச்சொற்பொருண் மூன்று மொன்ற னுட் பிறிதொன்று விரவப்பெற்று, மவற்றிடையே சோதிடங்காந் தருவங் கூத்து வரிமுதலாயின விரவப் பெற்றுந், தனித்தனி நிற்கு முறை யின்றிக் கலந்த முறையாற் பரந்துபடக் கிடந்தமை பெறப்பட்டது.

எண்ணியெனவே முதனூலும் வழிநூலு மாகிய முந்துநூ லிருக்கத் தாமும் வழிநூல் செய்யப் புக்கது தலையாய வறிவினோ ரையன்றி, யேனோரை நோக்கி யின்றியமையாமை யாகு மென்ப தூஉ, மதுவுந் தவவொழுக்கம் போல்வதோர் பேரறச் செய் கையா மென்பதூஉ, நூல்செய்யுங்காற் சில்வாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவினோர்க் கெத்துணை யெளிதி னுணர்த்தல்கூடுவதோ வத் துணை யெளிதின் விளங்குமா றம்முதனூற்க ணுள்ள வெழுத்துச் சொற் பொருண் மூன்றுங் குறைவுபடக் கூறுது தொகுத்துக்

கூறலே தக்கதென்பதூஉ, மவ்வியற்றமிழோ டதனெழிபாக வேண்டப்படு மேனையிலக்கணமுங் கூறல் வேண்டு மென்பதூஉம், பிறவும் பலரா லாராய்ந்தமை பெறப்பட்டது.

புலந்தொகுத்தற்குக் காரண முறைப்பட வெண்ணினமையு, மெண்ணற்குக் காரண முந்துநூல் கண்டமையுங், கண்டதற்குக் காரண நாடிச சிவணிய நிலமுமாகலி, னம்முறைபானே நாடிச சிவணிய நிலத்தொடு கண் டெண்ணித் தொகுத்தோ னென்றார்.

போக்கறு பனுவலென்றது, நூற்காகா வென்ற பத்துக் குற்றமு மின்றி முப்பத்திருவகை யுத்தியொடு புணாநத நூலை. போக்கறு நிலபென்றது, நாட்டிற் காகா வென்ற வளமின்மை முதலாய குற்றங்க ளற்றநிலத்தை. போக்கறு திருவென்றது அற நிலை யறதசான் வந்த திருவு, மறநிலை யறத்தான் வந்த திருவும், பனுவ லாராய்ச்சியான் வாநத கல்வித்திருவு, ஞானத்திருவு, நிலந் தருகினற கொடைத்திருவு, மவை யெல்லாவற்றானு மெய்திய புகழ்த்திருவுமெனக் குற்றமற்ற பல்வகைத்திருவையும். போக் கறு பாண்டியனெனவே யவன் பேரறிவுடையனுகலின், மனத் தான் வருங் குற்றமும் வாக்கான் வருங் குற்றமுங் காயத்தான் வருங் குற்றமு மறற செங்கோலரச னென்பது பெறப்பட்டது. போக்கறு மவையென்றது, அவ்வவையோரு மவனை யொப்பா ராய்க் குற்றமற்ற பேரறிவினராமென விளக்கின்றது.

பனுவற் பாண்டிய னெனவே தலைச்சங்க மிரீஇய பாண்டிய ரெண்பத்தொன்பதின்மரு ளவன் கவியரங்கேறிய பாண்டிய னென்பது பெறப்பட்டது. அவன் கவியரங் கேறிய பாண்டிய ரெழுவரு ளொருவனென்பதூஉ, மவனே யிந்நூலைச் செய்வித் தோனு மாவா னெனபதூஉ, மவ்வாறு தலைச்சங்கத் திறுதியிற் செய்யப்படினு மத்தலைச்சங்கததுப் புலவரிநநூல்கொண் டொன் றறிதல் வேண்டுமென்னுந் தன்மையரல்ல ராகலா னிந்நூலை வழங்காது முந்துநூலே வழங்கினரென்பதூஉ, மிடைச்சங்கப் புலவரெல்லா மிவ்வாசிரியர்க்குப் பிற்காலததாராகலி னம்முந்து நூலொடு மிந்நூலையும் பயின்று வந்தா ரென்பதூஉங், களவியலுரை யானுஞ் சிலப்பதிகாரவுரையானும் விளங்கும்.

இனிச் சங்கமிரீஇய பாண்டியர் வரலாற்றினைக் களவிய லுரைப் பாயிரத்துட் கொண் டாங்குரைத்தவாறு கூறுதும்.

" தலைச்சங்க மிடைச்சங்கங் கடைச்சங்கமென மூன்றுசங்க மிரீஇயினர் பாண்டியர்கள். அவருட் டலைச்சங்க மிருந்தா ரகத்தியனாருந், திரிபுர மெரித்த விரிசடைக் கடவுளுங், குன்றெறிந்த முருகவேளு, முரஞ்சியூர் முடிநாகராயரு, நிதியின் கிழவனுமென வித்தொடக்கத்தா ரைஞ்ஞூற்று நாற்பத்தொன்பதின்ம ரென் பது. அவருள்ளிட்டு நாலாயிரத்து நானூற்று நாற்பத்தொன் பதின்மர் பாடினரென்பது. அவர்களாற் பாடப்பட்டன வெத் துணையோ பரிபாடலு, முதுநாரையு, முதுகுருகும், களரியா விரையுமென வித்தொடக்கத்தன. அவர் நாலாயிரத்து நானூற்று நாற்பதிற்றியாண்டு சங்கமிருந்தா ரென்பது. அவர்களைச் சங்க மிரீஇயினர் காய்சினவழுதி முதலாகக் கடுங்கோனீறாக வெண் பத்தொன்பதின்ம ரென்ப. அவருட் கவியரங் கேறினா ரெழுவர் பாண்டிய ரென்ப அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது கடல் கொள்ளப்பட்ட மதுரையென்ப. அவர்க்கு நூல் அகத்திய மென்ப." எனத் தலைச்சங்க வரலாறு காணப்படலின், ஒருதலை முறைக் கேறக் குறைய வைம்பதிற்றியாண் டென்னுங் கணக்கி னெண்பத்தொன்பது தலைமுறைகழிந்தன வென்பதூஉ, முதன் முதற் சங்கமிரீஇய காய்சினவழுதி காலமுத லொருதலைமுறைக் குப் புலவ ரறுவராகப் பாண்டியர்க்குப் பக்கத் துணையென வோ ராசிரிய ரென்று மிருந்து வந்தமையானுஞ், சிலதலைமுறையி னறுவர்க்கு மேலும் பக்கத்துணை யாயினமையானு, மெண்பத் தொன்பது தலைமுறையினுஞ் சங்கமிருந்தா ரைஞ்ஞூற்று நாற் பத்தொன்பதின்ம ராயினரெனபதூஉம்,பக்கத்துணையாகவென்று மிருந்து தமிழாராயும் புலவரே யன்றி யோர்யாண்டிற் கொரு வர் பிறர் கவியரங்கேறித் தலைவராகி வந்தமையானும், விரிசடைக் கடவுளு முருகவேளுந் தமிழுக் காதிமுதல்வ ராகலிற் றெய்வ சாட்சியாகக் கொள்ளப்பட்டமையானுங், கவியரங்கேறிய வெழு வர்பாண்டியருந் தலைவராக விருந்து சஙக நடாத்தற்குக் குறித்த யாண்டின்கட் டாமரசராகலிற் றமக்காகப் பிறரொருவரைத் தெரிந்து வைத்தமையானு, மவ்வொன்பதின்மரொடு யாண்டிற்

கொருவராக வெண்ணப் பாடினோர் நாலாயிரத்து நானூற்று நாற்பத்தொன்பதின்ம ராயினரென்பதூஉ முணரப்படும். அங்ஙனங் கொள்ளி னதங்கோட்டாசிரியர் தலைவராய யாண்டி னிந்நூ லரங்கேற்றப்பட்ட தென்பதூஉம் விளங்கும். இவ்வாறு கொள்ளாக்கா லாசிரிய ரகத்தியனாரிருப்பப் பாண்டிய னதங்கோட்டாசிரியரைத் தலைவராக விருத்தி யிந்நூலைக் கேட்பியானென்பது.

"இனி யிடைச்சங்க மிருந்தா ரகத்தியனாருந், தொல்காப்பியனாரு, மிருந்தையூர்க் கருங்கோழிமோசியும், வெள்ளூர்க் காப்பியனுஞ், சிறுபாண்டரங்கனுந், திரையன்மாறனுந், துவரைக் கோமானுங், கீரந்தையுமென வித் தொடக்கத்தா ரைம்பத்தொன்பதின்மரென்ப. அவருள்ளிட்டு மூவாயிரத் தெழுநூற்றுவர் பாடினரென்ப. அவர்களாற் பாடப்பட்டன கலியுங் குருகும் வெண்டாளியும் வியாழமாலையகவலுமென வித்தொடக்கத்தன வென்ப. அவர்க்குநூ லகத்தியமுந் தொல்காப்பியமு மாபுராணமு மிசைநுணுக்கமும் பூதபுராணமு மென்விவை. அவர் மூவாயிரத் தெழுநூற்றியாண்டு சங்கமிருந்தாரென்ப. அவரைச் சங்க மிரீஇயினார் வெண்டேர்ச் செழியன் முதலாக முடத்திருமாற னீறாக வைம்பத்தொன்பதின்ம ரென்ப. அவருட் கவியரங்கேறினா ரைவர்பாண்டிய ரென்ப. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது கபாடபுரத் தென்பது. அக்காலத்துப்போலும் பாண்டியனாட்டைக் கடல்கொண்டது." எனவிடைச்சங்க வரலாறு காணப்படலின், ஒருதலைமுறைக் கேறக்குறைய வறுபத்து மூன் றியாண்டாக வெண்ண வச்சங்க மூவாயிரத் தெழுநூற்றியாண்டு நிலைபெற்ற தென்பதூஉ, மொருதலைமுறைக் கொருவரே பாண்டியர்க்குப் பக்கத்துணையாக வென்றுமிருந்தமையிற் சங்கமிருந்தா ரைம்பத்தொன்பதின்ம ராயின ரென்பதூஉ, மோர்யாண்டிற் கொருவராகக்கவியரங்கேறித் தலைவரானமையாற் பாடினோர் மூவாயிரத் தெழுநூற்றுவ ராயின ரென்பதூஉ, மிடைச் சங்கத்துக் கவியரங்கேறிய வைவர்பாண்டியரு முதற்சங்கத்துட் கவியரங்கேறிய பாண்டியர்போலத் தமக்காகப் பிறரொருவரைத் தெரிந்துவையாது தாமே யிருந்து நடாத்தினரென்பதூஉம் விளங்கும்.

"இனிக் கடைச்சங்க மிருந்து தமிழாராய்ந்தார் சிறுமேதாவி யாருஞ், பெருங்குன்றூர்க்கிழாரு, மிளந்திருமாறனு, மதுரையாசிரியர் நல்லந்துவனாரு, மருதனிளநாகனாருங், கணக்காயனார் மகனார் நக்கீரனாருமென வித்தொடக்கத்தார் நாற்பத்தொன்பதின்மரென்ப. அவருள்ளிட்டு நானூற்று நாற்பத்தொன்பதின்மர் பாடினாரென்ப. அவர்களாற் பாடப்பட்டன நெடுந்தொகை நானூறுங், குறுந்தொகை நானூறு, நற்றிணைநானூறு, மைங்குறுநூறும், பதிற்றுப்பத்து, நூற்றைம்பதுகலியு, மெழுபதுபரிபாடலுங், கூத்தும், வரியும், பேரிசையுஞ், சிற்றிசையுமென் றித்தொடக்கத்தன. அவர்க்கு நூ லகத்தியமுந் தொல்காப்பியமுமென்ப. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்த தாயிரத் தெண்ணூற்றைம்பதிற்றியாண்டென்ப. அவர்களைச் சங்கமிரீஇயினார் கடல்கொள்ளப்பட்டுப் போந்திருந்த முடத்திருமாறன் முதலாக வுக்கிரப்பெருவழுதி யீறாக நாற்பத்தொன்பதின்ம ரென்ப. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது உத்தரமதுரையென்ப. அவருட் கவியரங்கேறினார் மூவர் பாண்டிய ரென்ப." வெனக் கடைச்சங்க வரலாறு காணப்படலின், ஒருதலைமுறைக்குச் சிறிதேறக்குறைய முப்பத்தெட்டியாண்டாகப் பாண்டியர் நாற்பத்தொன்பதின்மர் காலம் வரை யாயிரத் தெண்ணூற் றைம்பதிற்றியாண் டச்சங்க நிலைபெற்றதென்பதூஉந், தலைமுறைக் கொருவராகப் பாண்டியர்க்குப் பக்கத்துணையாக விருந்து சங்கநடாத்தின்மையாற் சங்கமிருந்தார் நாற்பத்தொன்பதின்ம ராயின ரென்பதூஉ, மேனைச்சங்கத்துப்புலவரினு மிகவருகிக்காணப்பட்டாராகலி னச்சங்கம்போல யாண்டிற் கொருவர் கவியரங்கேறித் தலைவராகாமற் சிலகால மைந்தியாண்டிற் கொருவரும் பின்னர் நான்கியாண்டிற் கொருவருமாகத் தலைமை பெற்றமையாற் பாடினோர் நானூற்றுநாற்பத்தொன்பதின்ம ராயின ரெனபதூஉம் விளங்கும்.

இனிப் பனுவலவையென்பது, பாண்டியனரசிய னடாத்துமவையினை யினஞ்சுட்டி விலக்கிக் கல்விக்கழகத்தை யுணர்த்திற்று.

பாண்டியன்மாகீர்த்தி வரையாது கொடுக்கும் வள்ளலாயினுந் தொன்றுதொட்டுவரு மரபுடைமையாற் றன்மரபின ரெல்

லார்க்கு முரிமையாகிய தன்னிலத்தைப் பிறர்க் களித்தன் முறை யன்மையா னஃதொழிந்த வேனைய தருதலே முறையாகலானு, முறைதப்பிய வரசரது நிலத்தை வென்றுகோட லரசர்க்கு நீதி யாகலானு, நிலமெனப் பொதுப்படக் கூறினு மாற்றாரது நிலமெனப் பொருளுரைக்கப்பட்டது.

அதனைத் தருவோனெனவே யடையலரை வெல்லும் பேராற்றலுடையா னென்பதூஉ, மடுத்தார் வறியராயினு மவரைத் தன்னொப்ப நிலவுரிமையுடைய வரசராக்கும் பெருவள்ளலென்ப தூஉம், பெருவளமுடையானென்பதூஉம் பெறப்பட்டன. நில வுரிமை தருவோனெனவே யேனைய பொருண்முதலாயின தரல் கூறாமையே யமைந்தது.

அவ னறிவுமிக் குடையானுய்ப் பல்லாற்றானும் புகழ்பட வாழ்ந்தானுகலின், னிலந்தரு திருவிற் பாண்டியனெனவுஞ், சய மாகீர்த்தியெனவு, மாகீர்த்தியெனவும், காரணப்பெயர் பெற்று விளங்கினமைபாற் போக்கறு பனுவ னிலந்தரு திருவினெனக் காரணம்விளக்கி யிபற்பெயர் கூறாது பாண்டியனெனக் குடிப் பெயரே கூறினர்.

பாண்டியனுக்கு மவையோர்க்கு மாசா னுயர்ந்தோ னென் பது தோன்ற வவர்க்குக் கூறிய போக்கறுபனுவ லென்னு மடை கூறாம லறங்கரை நாவி னான்மறை முற்றிய வாசானென வடை யினை வேறு கூறினர்.

அறங்கரை நாவின னென்றமையானே யாசானதுநா வறமல் லன வழுக்கிபு முரையாமை பெறப்பட்டது.

பாண்டிய னவையத்துத் தலைமைவாய்ந்தமையானே தமிழ்ப் புலமை கூறாமையே பெறப்படலின், வடமொழிப் புலமையு மறையு நிரம்பிய வந்தணனு மென்பது விளங்க நான்மறை முற் றிய வாசா னென்றார்.

நான்குகூறுமாய் மறைந்த பொருளு முடைமையா னான்மறை யென்றார். அவை தைத்திரியமும், பௌடிகமுந், தலவகார முஞ், சாமவேதமுமாம்.

இனி யிருக்கும் யசுவுஞ் சாமமு மதர்வணமு மாகாவோ வெனி, அவை யதங்கோட்டாசிரியர்க்குந் தொல்காப்பியனார்க்கும் பிற்காலத்தினராகிய வியாசமுனிவராற் சில்வாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவினோர்க்குப் பயன்படுமாறு முன்னுள்ள மறையுட் சிலவற்றை நான்குகூறாகச் செய்யப்பட்டமையா னாகாவென்பது.

இனித் தசரதன்மக னிராகவன் காலத்திற்கு முன்னுளதாகிய கபாடபுரந்தோன்றுதற்குமுன்னுந்தென்மதுரையைக் கடல்கொள்ளுதற்கு முன்னு மிந்நூல் செய்யப்பட்டமையானுங், கபாடபுரமுங் கடல்கொண்ட பின்ன ருத்தர மதுரை தோன்றியகாலத்துச் சந்தனுவின் மனைவியாகிய பரிமளகந்தியிடத்து வியாசமுனிவர் தோன்றினமையானு, மவர்பாரதத்துட் சமதக்கினி முனிவரையும் பரசுராமரையும் பற்றிக்கூறுதலாற் சமதக்கினி முனிவர்க்கு மகனாரும் பரசுராமர்க் குடன்பிறந்தாரு மாகிய திரணதூமாக்கினி முனிவரென வியற்பெயரை யுடைய வாசிரியர் தொல்காப்பியனார்க்கு மவருடன் கற்ற வதங்கோட்டாசிரியர்க்கும் வியாசர்காலமு மவர் பகுத்த நான்மறைக்கால மும் பிற்பட்டமை யுணரப்படும்.

புலமை நிரம்பாதாரு நூல்செய்துமெனப் புகுவராகலானும், புலமை நிரம்பினாரு மூழ்வயத்தான் மயங்கலுங்கூடு மாகலானும், புலமைநிரம்பினார் தவமுடையாராயி னூழ்வயத்தான் மயங்காராயினும் யாதானுமோர் கோட்பாடு பற்றி யிந்திரன்பொருட்டுப் பிருகற்பதிபகவான்கூறிய வின்பநூல்போல முனைவ னூலொடுமுரணுமாறு நூல்செய்தலுங் கூடுமாகலானு, மவற்றையெல்லா மெய்ந்நூலெனக்கொண் டுலக மயங்காமைப்பொருட் டாசிரிய ரகத்தியனா ரிமயநின்று தென்றிசைப் போந்தபின்னர்ப் பண்டைக்காலத்தே பாண்டியரைக்கொண்டு பேரறிவினாரைத் தொகுத்துச் சங்கமிரீஇ யவர் நன்றெனக் கூறினன்றி யெத்துணைப் பெரியார் செய்த நூலாயினு மது கொள்ளற்பாற் றன்றென வாணைசெலுத்துமாறு பணித்தாராகலி, னம்முறைபற்றி யிந்நூலுங் காட்டினமை தோன்றப் பாண்டிய னவையத்துக் காட்டியென்றார்.

அவையென்பது நல்லிசைப்புலவரது கூட்டமாகலானு, மவருட் டலைவராயினா ரொருவர்க்குக் காட்டி னேனையோருங் கேட்

டல் பெறப்படலானும், வேறு வேறு கூறும லவையத் தாசாற்குக் காட்டியென்றார்.

இந்நூ லியல்பானே குற்றமின்மை யுடைத்தாயினும் பெரியோர் கேட்டு நன்றென்னுவிடிற் பயன்படாமையி னறங்கரை நாவி னான்மறை முற்றிய வாசானு, மவனு மொருவனுப் கூறிற் பயன்படாமையா னவையு, மவையும் பாண்டியனை யன்றிக் கூடாமையிற் பாண்டியனும், பாண்டியனுந் திருவின்றி யவையைப் பேண லமையாமையாற் றிருவு, மத்திருவு மீகையொடு கூடாவிடிற் பயனின்மையாற் றருகையு, மத்தருகையு மாற்ற லில்வழி மாற்றாரா னழியுமாகலி னிலந்தரு மாற்றலு, மவ்வனைத்து மெய்தினு நூலறிவினாறேற் பயன்படாவாகலிற் பனுவலும், பனுவலுங் குற்றமுளதாயிற் கொள்ளப்படாமையாற் குற்றமின்மையு மொன்றற் கொன்று தொடர்பாக முடிதலி, னம்முறையே போக்கறு பனுவ னிலந்தரு திருவிற் பாண்டிய னவையத் தறங்கரை நாவி னான்மறை முற்றிய வதங்கோட் டாசாற்குக் காட்டியென்றார்.

தெரிந்தென்பது விளங்குதல். இப்பொருட்டாதலை * வசையறத் தெரிந்து பாவமைந் தொழுகும் பண்பிற்றாகி யெனவும், † பரந்த பொருளெல்லாம் பாரறிய வேறு தெரிந்து திறந்தோறுஞ் சேர வெனவுங் கூறுமாற்ற னறிக. அது மயங்காவென்னு மெச்சத்தி னெதிர் மறை கொண்டது.

மரபென்பது தொன்றுதொட்டு வந்த வழக்கு. எழுத்தென்றது நூலை. இப்பொருட்டாதலை யெழுத்தறியத் தீரு மிழிதகைமை யெனவு, ‡ மெண்ணு மெழுத்துங் கண்ணெனத் தகுமெனவு, $ மெண்ணென்ப வேனை யெழுத்தென்ப வெனவுஞ் சான்றோர் கூறுமாற்றானு மறிக. எழுதப்படுதலி னாலு மெழுத்தென் றாயிற்று. எழுதென்னு முதனிலை திரிந்துநின்ற வெழுத்தென்னுந் தொழிற்பெயர் செயப்படுபொருளை யுணர்த்தலி னாகுபெயர். முறையென்ப தாகுபெயரா னூலின்கண் முறைப்படச் சொல்லிய பொருளை யுணர்த்திற்று. இதனை ¶ நூன்முறையை நன்னெஞ்சஞ் சிந்திக்க கேட்க

* களவியலுரை மேற்கோள். † திருவள்ளுவமாலை.
‡ ஔவையார் முதுமொழி. $ குறள், ூகூ உ. ¶ திருவள்ளுவமாலை.

செவியெனவு, § நூலதின் முறையே வாலிதின் விரிப்பி னென வுங் கூறுமாற்றா னறிக.

ஐந்திரமென்பது வடமொழிக் கிலக்கணங் கூறு நூல். முன் னர்த் தமிழுக்கு வடவேங்கடந் தென்குமரியென வெல்லை கூறி னமையானும், || வடசொற் கிளவி வடவெழுத் தோரீஇ, யென நூலுட் கூறுதலானு, மவ்வேங்கடத்தின் வடக்கு மிமயத்தின் றெற்கு மதற்கெல்லையாத லுணரப்படும். இக்காரணம்பற்றியே யாரியம் வடமொழியெனவுந் தமிழ் தென்மொழியெனவும் பெயர்பெற் றன. இனி யாரியம் வடதிசை மொழியே யெனினு மாசிரிய ரகத் தியனார் போந்த பின்னர்த் தென்றிசையினும் வழங்கிற்றாகலின் மல்குநீர் வரைப்பி னைந்திரமென்றார். இனி யாரியத்துக்கு வடபா லெல்லை யிமயமலையா மென்பது** ஆரியர் துவன்றிய பேரிசை யிமயந் தென்னங் குமரியோ டாயிடை யென்பதனான் விளங்கும்.

இனிச் செந்தமிழியற்கை சிவணிய நிலத்தொடு முந்துநூல் கண் டென்றதனானே தமிழ் நிறைந்தானென்பது பெறப்படலா, னீண்டத்தமிழே யன்றி வடமொழியு நிறைந்தானென்பது விளங்க வைந்திர நிறைந்தோனென்றார். இன்னுமிதனானே யாசிரியரகத் தியனார்,

> " ஏழியன் முறைய தெதிர்முக வேற்றுமை
> வேறெ விளம்பான் பெயர‌து விகாரமென்
> றோதிய புலவனு முளனொரு வகையா
> னிந்திர னெட்டாம் வேற்றுமை யென்றனன்."

எனப் பிருகற்பதி கொள்கையை மேற்கொள்ளாம லிந்தி ரன் கொள்கையே மேற்கொண்டா ராகலானு மவ்வாறே யிவ்வா சிரியனும் * வேற்றுமை தாமே யேழென மொழிபவெனப் பிறன் கோட் கூறி † விளிகோள் வதன்கண் விளியோ டெட்டே யென் றிந் திரன்கோளைத் தன்கோளாக்கினமையானு, மிவ்வாசிரியனுக் கைந் திரமளித்த வாசிரியனு மகத்தியனா மென்பது பெறப்பட்டது.

இனித் தொல்காப்பியனென்பது ரகுமாரி னவதாரஞ் செய்த நெடியோற்கு ராகவனெனப் பெயரெய்தியாங் கிவ்வாசிரி

---

§ காக்கைபாடினியம். || தொல், சொல், ௪0௧. ** பதிற்றுப்பத்து, ௧௧. * தொல், சொல் ௬௩. † ஷை ௬௪.

யர்க்கு மரபுபற்றிவந்த பெயர். என்னை? இவ்வாசிரியர் கவியின் மரபி னுதித்த சமதக்கினி யிருடியின் மகனாராகலானு, மம்மரபின் வந்த விருடிகளெல்லாருள்ளுஞ் சிறந்தோராகலானு, மாரிய மொழிக்கட் காவியனெனவு மப்பெயரே தற்பவமாகித் தமிழிற் காப்பியனெனவும் வழங்கல் பொருந்துமாகலானு, மாரிய மொழியுட் கவியென்பது பிரமனையு மவன்வழிவந்த முனிவர் சில ரையும் பிறரையு முணர்த்துமாகலி னவருட் பிரமனை யுணர்த்து மாறு தொன்மையென்னு மடைபுணர்த்துத் தொல்காப்பியனென வழங்கினமையானுமென்பது.

பல்புகழாவன வியற்கையாகிய நுண்ணறிவானுஞ் செயற் கையாகிய கல்வியறிவானும் வந்தபுகழு, மவ்வறிவானே நூலி யற்றி நமக்கும் பயன்பட வளித்த புகழுந், தவவொழுக்கத்தான் வந்த புகழு, மவ்வொழுக்கத்தா †னொன்னார்த் தெறலு முவந் தாரை யாக்கலுங் ‡கூற்றங் குதித்தலு முதலாயினவு ஞானமு மமைதலான் வந்த புகழுமாம்.

இனி யிந்நூலை யதங்கோட்டாசிரியற்குக் காட்டிய காலம் வரையறையா னித்துணைத்தென் றறியப்படாவிடினும் பாண்டிய னாட்டைக் கடல்கொள்ளுமுன்னர்த் தென்மதுரையி லரங்கேற்றப் பட்டமையானு, மந்நாட்டைக் கடல்கொண்டபின்னர்க் கபாட புரத்துச் சங்கமிருந்தகாலத்தே யிராம னிலங்கைசென்றமையானு, மவன்காலத்திற்கு முன்னென்பது தேற்றமாகலி, னாசாற்குக்காட் டியபி னன்றுதொட் டின்றுந் தொல்காப்பியனென்னும் பெயர் மறையாதுதோன்றலு, மத்தோற்றத்தா லவனது பல்புகழ் நிலை யலு முணரப்படலி, னம்முறையானே காட்டித் தோற்றி நிறுத்த வெனக் கூறினார்.

ஒருவன் முற்றவுணர்ந்தானாயினு மக்கல்வியறி வொன்றே கொண்டு நூல்செய்யத் தொடங்கின்,

> § "நுண்ணிய நூல்பல கற்பினு மற்றுந்த
> னுண்மை யறிவே மிகும்." எனவும்,

> ‡ "காதன் மிக்குழிக் கற்றவுங் கைகொடா
> வாதல் கண்ணகத் தஞ்சனம் போலுமால்."

---

† குறள், ௨௬௪. ‡ ஷை ௨௬௯. § ஷை ௩௭௩.
‡ சிந்தாமணி, கனகமாலையாரிலம்பகம் ௭௬.

எனவுஞ் சான்றோர் கூறினாராகலி னூழ்வயத்தான் மயங்க லியற்கையாகலானு, மவ்வியற்கை மறுவில்செய்தி மூவகைக்கா லமு நெறியினாற்றிய வறிவர்க்குக் கெடுமாகலானு, மிந்நூலகத் தூழ்வயத்தா னெய்தற்பாலவாய குற்றமு மில்லாமைக்குக் கார ணந் தவமாமெனபது விளங்க நிறுத்த படிமை யென்றார்.

இவ்வாற்றா னிவ்வாசிரியன் றவத்தான் மறுவில் செய்தி மூ வகைக்காலமு நெறியி னாற்றிய வறிவனாகலிற் § கற்றோரறியா வறி வுங் கற்றோர்க்குத் தான் வரம்பாகிய தலைமையுங் காமமொடு கடுஞ் சினங் கடிந்த காட்சியு மிம்மை யாவது மறியா வியல்புமுடைய துனி யில் காட்சி முனிவனு மென்பது பெறப்பட்டது.

இங்ஙனம் பல்புகழ்நிறுத்தற்குக் காரணம் படிமையேயாகலி னிறுத்தவென்னு மெச்சம் படிமையோனென்பதன்கட் படிமை யென்னுங் காரணப்பெயர் கொண்டது.

இனி யாக்கியோன் பெயர் கூற லென்கருதியோவெனி னூல் கேட்பான்புக்க மாணாக்க னிந்நூ லுயர்ந்தோன் செய்ததோ வன்றோவென வையுற் றிடர்ப்படுமாகலி, னதனையொழித் தவனைக் கற்றற்க ணூக்கற்பொருட் டென்பது.

அதுகருத்தாயிற் கண்டெண்ணித் தொகுத்தான் பல்புகழ் நிறுத்த படிமையோ னென்றமையானே யவனுயர்ந்தோனென்பது பெறப்படலி னைந்திர நிறைந்தமை கூறல்வேண்டா வென்பது கடா. அங்ஙனங் கூறுவழித் தமிழ்மரபொடு மாறுபடாமையின விளிகொள்வதன்கண் விளியொடெட்டே யென்றாற்போல்வ சில விந்திரன்கோளு மிந்நூலுட் கூறலானு, முந்துநூல்கண்டெனப் பொதுப்படக் கூறலானு, மிந்நூலுக் கைந்திரமு முதனூலாமோ வென்னு மையங்கழுமாகலா னதனை யொழித்து வடமொழியா யஞ்சில தமிழின்வரினு, மவை தமிழிற்கு முரிய மரபாகனிற் பிற னுடம்பட்டது தானுடம்படுத லென்னு முத்திவகையாற் கொள் ளப்பட்டன வன்றிப், பெரும்பான்மை தமிழ்மரபின் வேறுபட்ட மரபினையுடைய வந்நூலை முதனூலாமெனக் கருதி யவை கொள் ளப்பட்டன வல்ல வென்ப தறிவித்தற்பொருட்டுந், தமிழின்க

§ திருமுருகாற்றுப்படை ககூ, கங.

னுள்ள முந்துநூலே யிந்நூற்கு முதனூலா மெம்ப துணர்த்தற் பொருட்டு, மைந்திர நிறைந்த தொல்காப்பியனென வதனைப் பெயர்க்கு விசேடணமாக்கியு முந்துநூல் கண்டென வற்றை முதனூலெனக் கோடற்குச் செயப்படுபொருளாக்கியுங் கூறினு ரென்பதுவிடை.

இனி வழிகூற லென்கருதியோவெனி, னக்கியோ னுயர்ந்தோ னாயினும் பிறிதோர் கோட்பாடுபற்றி முனைவனூலொடு முரணு மாறு தானே படைத்து நூல்செய்தானோவெனவு மையுறுமா கலி, னதனை யொழித்தற்பொருட்டு முனைவனூலின் முரணாத வின்னநூலின் வழித்தாகச் செய்தானென வழிகூறல் வேண்டு மென்பது.

இனி யகத்திய முதலாய முதனூல்கள் பிறிதொரு நூலின் வழித்தாகச் செய்யப்படாமையா னவற்றின்க ணிவ்வைய முளதாகாதோவெனி, னவை தானே தலைவனாகிய முனைவனை வழிபட் டவனருள்பெற் றவன்கண்ட வியற்கை முதனூலின் வழித்தாகச் செய்யப்பட்டன வென்பவாகலி, னது வழிகூறலோ டொத்தைய மறுக்கு மென்பது.

இனி யெல்லைகூறல் யாதுகருதியோவெனி, னிந்நூ லுயர்ந் தோனுன் முந்துநூலின் வழித்தாகச் செய்யப்படினு மூழிவிகற் பத்தாற் சிற்சிலவூழியிற் சிலமுந்துநூன் மக்களறிந்து பயன் கோட லின்றிக் கிடக்குமாகலி, னங்ஙன மக்களா னறிதற்கருமை பற்றி வழங்கப்படாதநூலோ வறிந்து பயன்கோடலின் வழங் கப்படு நூலோவெனவு மையுறுமாகலி, னதனை யொழித்தற் பொருட்டுப் பயன்படுமாற்று னின்னவெல்லையு ணடக்குமெனல் வேண்டுமென்பது.

இனி நூற்பெய ரெந்நூன்மருங்கு முதற்க ணெழுதப்படலா னறியக்கிடக்குமாகலிற் பாயிரத்துட் கூற லென்கருதியோவெனி, னந்நூல் செய்தானுற் பெயர்பெறலே யன்றிச் செய்வித்தான் முதலாய பிறகாரணத்தானும் பெயர்பெறல் கூடுமாகலி, னக்கா ரண முதற்கணெழுதிய பெயரான் விளங்காமையா னது விளங் கற்பொருட்டுப் பாயிரத்துட் கூறல்வேண்டு மென்பது.

இனிச் செய்தானு லிந்நூல் பெயர்பெற்றமையாற் பாயிரத்து ளாக்கியோன்பெயர் கூறவே முதற்கணெழுதிய நூற்பெயரது காரணம் விளங்குமாகலின் வேறுகூறன் மிகையாமெனிற், செய் வித்தான் பெயரு மதுவேயாக விருத்தலுங் கூடுமாகலிற் பாயி ரத்து ணூற்பெயரும் வேறுகூற லின்றியமையா தென்பது. இக் கருத்துத் தொல்காப்பியனென்னும் பெயர்தோற்றி யென்னாது தன்பெயர் தோற்றி யென்றமையானே யினிது விளங்கும்.

இனி வழிகூறலே யமையும்; அதன்வகையாகிய யாப்புக் கூறல் வேண்டாவெனி, னின்னதன் வழித்தாகச் செய்யப்பட்ட தென வழிகூறலான் முந்துநூற்பொருளே வழிநூலினு முள்ள தென்பது பெறப்படலி, னம்முந்துநூலிருக்க விவ்வழிநூலே யாதுகாரணத்தாற்செய்தானெனவு,மம்முந்துநூலின் வழுவுண்மை பற்றி யதுகளைதற்பொருட்டுச்செய்தானோ வெனவு மையுறுமாகலி னதனை யொழித்தற்பொருட்டு, முந்துநூலிற் கூறியபொருள்களு ணர்தற் கரியவாகத் தொக்குநின்றமையானோ விரிந்துநின்றமை யானோ தொகைவிரியாக நின்றமையானோ தான்வழங்கு மொழி யல்லாத பிறிதொரு மொழிக்க ணின்றமையானோ வப்பொரு ளேயே யுணர்தற் கெளியவாகிப் பயன்படுமாறுதொகுத்தன் முத லாய வகையினு ளிவ்வகைபாற் கூறினுனென யாப்புங் கூறல் வே ண்டு மென்பது.

இனி * வழியி னெறியே நால்வகைத் தாகுமென வாசிரியன் கூறலான் முதனூலுக்கு யாப்பின்றென்பது பெறப்படலி, னிந் நூலுக்கு யாப்புக்கூற லமையும்; களவியலாகிய முதனூலுக்குக் கூற லமையாதேயெனி,னாசிரியன் வழியி னெறியே யெனப் பிரித் தமையான் முதனூ னான்குவகையாப்பு முடைத்தன்றெனல் பெ றப்படுமன்றி யவற்று ளொருவகையு முடைத்தன்றெனல் பெ றப்படாமையானு, முனைவன் முற்றுணர்வின னாகலானு, முதனூ லுக்கு மொழிபெயர்த் ததர்ப்பட யாத்தலொன்றின்றி, யேனைமூ வகைத்தாகிய யாப்பு மேனையநூலே நோக்குமிடத் தமையு மென்பது.

இனி நூலியபொரு ணூல்கற்குமிடத்து மாணாக்காற்றுமே யறியக்கிடத்தலிற் பாயிரத்துட் கூற லென்கருதியோவெனின்,

யாதானு மொருபொருள்வேட் டதுபெற நாடி முயல்வார்க்கப் பொரு ளின்னவிடத் துள்ளதெனக் கூறி ஞண்டுச்சென் றப் பொருள் கொள்ப: அல்லாக்காற் றும்வேட்ட பொருளிருக்குமிட மாயினு மாங்குச் செல்ல விரும்பார்: அதுபோலவே மாணுக்கனு நதலியபொரு ளிதுவென முன்னர்க்கூறுவிடி ஞசிரிய னிந் நூலைக் கற்கவெனக் கூறினு மந்நூ லெப்பொருணுதலிற்றோ வதன்கண் வேட்டபொருளுளதோவென வையுற்று விருப்பத் தொடு முயலாஞகலிற் கூறல் வேண்டு மென்பது.

இனிக் கேட்போரைக் கூற லென்கருதியோவெனின், முன் ஞேர்நூலை முற்றக்கற்றுப் புலமை நிரம்பிய முதியோராயினு மூழ்வயத்தான் மயங்கலு மியற்கையாகலானு, மிந்நூலகத்து மவ்வாற்றுற் குற்றமுளவோவெனக் கருதுமாகலானு, மதனை யொழித்தற் கின்ஞர்கேட்டுக் குற்றமின்மை யாராய்ந்தாரெனல் வேண்டு மென்பது.

இனி யொருவன்கேட்ட லமையாதோ கேட்போரெனப் பன்மைகூற லென்னையெனி, னவனு மூழ்வயத்தான் மயங்கியா யினு நட்புமுதலாய பிறகாரணத்தாஞயினுங் குற்றத்தை நன் றெனக்கூறினுங் கூறுமாகலி, னறிவுடையோர் பலரிருந்து கேட்பி னூழ்முதலாய காரணத்தாற் சிலர் மயங்கினு மேனையோர் மயங் காமையிற் பலர் கேட்டல்வேண்டு மென்பது.

இனி யுரைசா லடிக ளருளா மதுரைக் கூலவாணிகன் சாத் தன் கேட்டனனெனவு, மிளங்கோவேந்த னருளிக்கேட்ப வளங் கெழு கூலவாணிகன் சாத்த னறிபவைத்தனனெனவுங் கூறலாற் சிலப்பதிகாரத்தினு மணிமேகலையினுங் கேட்போர் பலரின்றி யொருவராயவா றென்னையெனி, னீண்டுக்கூறிய பாயிரத்தியல் பெல்லாங் குறைவின்றி நூலுக்கே வேண்டப்படுவன வாகலி னச்சிலப்பதிகார முதலாய செய்யுளிடத்துச்சில குறைந்துவரினு மிழுக்கின்றென்பது.

இனிச் சிலப்பதிகார முதலாயின நூலாகாவோவெனி, னூற்கப் படுவனவெல்லா நூலேயாயினு மேனைநூலுக்கெல்லாங் கருவி யாதற் சிறப்புப்பற்றி யிலக்கணநூலையே நூலெனவு, மேனைய

வற்றைச் செய்யுளெனவும் வழங்கலே மரபாயிற்று. என்னை? எழுதப்படுவவெல்லா மெழுத்தெனப்படு மாயினும் பிறவற்றைக் கூறும லகரமுதலாயவற்றையு மிலக்கணநூலையுங் கூறுபவாக லானும், மோதப்படுவவெல்லா மோத்தெனப்படு மாயினும் பிறவற்றைக்கூறுது மறையையு மியலையுங் கூறுப வாகலானு மென்பது.

இனித் தவத்தான் மனந்தூய்மை பெறுமேதா ரெத்துணைக் கற்பினு மூழ்வயத்தான் மயங்கலானுந், தவமுடையார் மயங் காமையானுந், தவமுடையாரே நூல்செய்தற் குரியாரென விதிப் பிற் கேட்டுக் குற்றமாராய்வாரைக் கூறல் வேண்டாவெனி, னவ் வாறு விதிப்பி னகத்தே தவவொழுக்க முற்றினமையானே யூழ் வயப்படாது நின்று குற்றமிலவாக நூல்செய்த வள்ளுவனார் முத லாயினார்க்குப் புறத்தே தவவேடமின்மையா னவர்போல்வார் செய்த நூலினுங் குற்றமுளவெனப்படுமாகலானு, மகத்தே தவ வொழுக்க முற்றுமையா னூழ்வயப்பட்டுக் குற்றமுளவாக நூல் செய்த பவணந்திமுனிவர் சிவஞான முனிவர் முதலாயினார்க்குப் புறத்தே தவவேட முண்மையா னவர்போல்வார் செய்த நூலெல் லாங் குற்றமிலவெனப்படு மாகலானு, மவ்விதி பயனின்றாக முடி தலின், யாவர்செய்த நூலாயினு மறிவுடையார் பலர்கேட்டுக் குற்றமின்மை யாராய்தலே வேண்டப்பட்ட தென்பது.

இனிப் பயன்கூற லென்கருதியோவெனி, னின்னார்கேட்டுக் குற்றமின்மை யாராய்ந்தமையா னிஃதுயர்வுடைய நூலாமென வறிந்தானாயினு மிந்நூல் கற்க வின்ன பயக்குமென வறியானாயிற் கற்றலின்க ணூக்கஞ் செல்லாமையா னது கூறல் வேண்டு மென்பது.

இவ்வெட்டு மின்றியமையாது வேண்டப்படுவன வாகலி னிவை யெல்லாவாசிரியரானுங் கொள்ளப்பட்டன.

இத்துணைச் சிறப்பிலவாயினு மாக்கியோனுங் கேட்போரு மெக்காலத்தினர்; யாண்டிருந்தனர்; யாதுகாரணத்தா லிந்நூல் செய்தானென் றறியுமாறு மாணுக்கர்க்கு விருப்பஞ்செல்ல லியல் பாகலானு, நூல்செய்த காலத்தோ டல்லது பிற்காலத்தோ வரங் கேற்றப் பட்டதெனக் கடாநிகழு மாகலானு, மவைசெல்லு மரச னவைக்களனாயிற் கேட்போ ரிந்நூல் குற்றமுடைத்தெனி னந்நூல்

கொள்ளாதொழியும்; அன்றேலவர் கூறினும் பயனின்றே யென்று முந்துநூலைத் தொகுத்தன்முதலாய யாப்பி னெய்திய காரணமன் றிப் பிறகாரணமு முளவோ வென்று மையந் தோன்று மாகலானும், நூல்செய்தகாலமு மதனை யரங்கேற்றிய களனு மேனைய கார ணமுங் கூற லின்றியமையாதென வொருசாராசிரியர் வேண்டினா ரென்பது.

இனிக் களன்கூறவே காலமுமடங்காதோவெனின், நூல் செய்த காலத்தே யரங்கேற்றல் வேண்டுமென்பது நியமமாகா மையாற் பிற்காலத்துங் கூடுமாகலி னவ்விரு காலமும் வேறுதலு முண்மையான் வேறு கூறப்பட்டதென்பது.

இனி யவ்வெட்டனுளாக்கியோனு முதனூலு மதுவழங்கு மெல்லையு நூல்செய்யு முன்னரே, யந்நூலுக்குக் காரணமாக நிற்ற லின் முன்வைக்கப்பட்டன. அவை மூன்றும் வழிநூலாகிய காரிய முளதாகற் கின்றியமையாத காரணமே யாயினு மாக்கியோ னக்காரணங்களுட் சிறந்த நிமித்தகாரணனாகலி னவன்பெயர் முன்னு, முதனூன் முதற்காரண மாகலின் வழி யப்பெயர்க்குப் பின்னு, மெல்லை யம்முதனூற்பொருளின் வழக்குப்பயிற்சியினை யுணர்த்தலி னது வழியின்பின்னு முறையானே வைக்கப்பட்டன.

யாப்பு நூற்பெயரு நுதலியபொருளு நூலுடனொற்றித்துத் தோன்றலி னவை யவற்றின்பின் வைக்கப்பட்டன. அவற்றுள் யாப்புநுதலியபொருளு மிதற்கு நூலே யிடமாக நிற்றலி னூற் பெயர் முன்னு, நூலது வகையே யாகலின் யாப்பதன்பின்னு, மவ்வகையாற் சொல்லப்பட்ட நூலிடமாக வறியப்படுதலி னுத லியபொருளவற்றின் பின்னும் வைக்கப்பட்டன.

கேட்போரும் பயனு நூல்செய்யப்பட்டபின்னரே பெறப் படுதலி னவை யவற்றின்பின் வைக்கப்பட்டன. அவற்றுட் கேட் டற்குரியார் கேட்டு நன்றெனக்கொள்ளினன்றி யந்நூலை யுலகங் கொள்ளாமையி னூற்பயனை யுலகமெய்தற்குக் கேட்போரே காரணமாகலா, னவர்பெயர் முன்னும் பயன் பின்னுமாக வைக் கப்பட்டன.

இனி நூல் செய்த காலத்தின் பின்னார்க் களனும், களத்து

ளாங்கேற்றியபின்னர்க் காரணமும் புலப்படலின், னவை யம் முறையான் வைக்கப்பட்டன.

அவற்று ளாக்கியோன்பெயர் வழி யெல்லை மூன்று மிறந்த காலத்தன. நூற்பெயர் யாப்பு நுதலியபொருண் மூன்று நிகழ் காலத்தன. கேட்டோர் பய னிரண்டு மெதிர்காலத்தன.

இனி யவ்வெட்டனுள் வழியையும், யாப்பின் வகையுண் மொழிபெயர்ப்பையு முனைவன் கண்ட முதனூ லின்றாயினுற்போல வவனூலகத்துக் குற்றமுளவோ வென்னு மையமுமின்மையி னங் நூல் கேட்போரையுங் களைவு மின்றுமென்பது.

இனி யாக்கியோன்பெய ரன்றிச் செய்வித்தான் பெயரு முரைசெய்தான் பெயருங் கூறலுங், தன்னூலுக்கே யன்றி யதன் முதனூலுக்கும் வழிகூறலு, நூலுக்கே யன்றிப் படல மோத் துச் சூத்திரங்கட்கும் பெயர்கூறலும், பெயரே யன்றித் தொகை முதலாய பிறவுங்கூறலு, நூலது பிண்டத்திற்கே யன்றி யதற் குறுப்பாகிய படல மோத்துச் சூத்திரங்கட்கு மின்னது நுதலின வெனக் கூறலு, நூல்கேட்போரைக் கூறலே யன்றி யுரைகேட் போரையுங் கூறலும், பயனே யன்றிப் பயனுக்குப் பயன் கூற லும், பாயிரங் கூறினோர் பெயர் கூறலும், பாயிரத்துக்கிலக்கணங் கூறலு, மவைபோல்வன பிறவும், பாயிரத்தோடொத்த விலக் கணத்தவெனக் கொள்ளப்படும்.

இனி யிந்நூல் செய்வித்தானும் பாண்டியன் மாகீர்த்தியா மென வடியார்க்குநல்லார் கூறினார்.

இனி யிந்நூலுக் கிதன்முன்ன ருரைசெய்தார் பெயருங் கூறுதும். அவ ருரையாசிரியரெனச் சிறப்புப்பெயர் பெற்ற விளம்பூரணவடிகளும், பேராசிரியரு, நல்லிசைப்புலவரு ளொருவ ராகிய கல்லாடர் பெயர்பூண்ட பிற்காலத்தாராகிய மற்றொரு கல்லாடருஞ், சேனாவரையரு, நச்சினார்க்கினியரு மென் றைவர். அவரு ளிளம்பூரணவடிகளுரை யெழுத்துக்குஞ் சொல்லுக்கும் பொருளிற் சிலபகுதிக்கு மிக்காலத் துள்ளது. பேராசிரியருரை பொருளதிகாரத்துட் சிலபகுதிக்குளது. கல்லாடருரை சொல் லினு மெச்சவியலொழிந்த வேனைய வெட்டியற் குளது. ஏனைய

விறந்தனபோலும். சேனாவரையர் சொல்லதிகாரமொன்றற்கே யுரையெழுதினர். நச்சினார்க்கினியருரை யெழுத்துச் சொற் பொருண் மூன்றுக்கு முளது. அவருரைகளிற்பல வாசிரியர் கருத்துக்கு மாறுவனவுஞ், சூத்திரப்பொருளை முற்று முணர்த் தாதவு மாக வுள்ளன. அதுநோக்கியே யிலக்கணக்கொத்து நூலார் தமது நூலுள்,

> "நூலா சிரியர் கருத்தினை நோக்கா
> தொருசூத் திரத்துக் கொவ்வொரா சிரிய
> ரொவ்வொரு மதமா யுரையுரைக் குவரே
> யவ்வுரை யதனு ளடுத்த வாசகங்கட்
> கவர்கருத் தறியா தவரவர் கருத்தினுட்
> கொண்ட பொருள்படப் பலகூ றுவரே." எனக்கூறினர்.

அவருரைகளிற் சிலவற்றை யாசிரியர் கருத்துக் கொத்த விடத்துங் கொள்ளாது மறுத்து, மொவ்வாவிடத்து மறுதுடன் பட்டு, மிப்பாயிரத்துக்கு மெழுத்தெனப் படுபவென்னு முதற் சூத்திரத்திற்கும் விருத்தியுரையென வொன்று சிவஞானமுனிவர் செய்தனர். அவரவ்விருசூத்திரத்துக்கே யுரையெழுதினராயினு மவ்வுரையுண் மரபுநிலைதிரியப் பல கூறினர்.

இங்ஙன முரை பலதிறப்பட்டு வழங்கலினவற்றை யாசிரியர் கருத்தாகக் கொண்டு பிற்காலத்தார்செய்த நிரம்பா விலக்கணத்த வாய வீரசோழியங் காரிகை நன்னூல் சின்னூ லிலக்கணவிளக்க மிலக்கணக்கொத்துப் பிரயோகவிவேக முதலாய போக்கரு நூல்களை யிக்காலத்தார் கற்றுப் புலமைநிரம்பாராய் மரபுநிலை திரியத் தாமும் வேறுவேறிலக்கணஞ் செய்பத் தொடங்கினர்.

இவ்வாறு செந்தமிழியற்கை கற்போர்க்குப் பயன்படாது மறைதலை நோக்கி,

> * "மறுதலைக் கடாஅ மாற்ற முடைத்தாய்த்
> தன்னூ லானு முடிந்தநூ லானு
> மையமு மருட்கையுஞ் செவ்விதி னீக்கித்
> தெற்றென வொருபொரு ளொற்றுமை கொளீஇத்
> துணிவொடு நிற்ற லென்மனார் புலவர்."

* தொல், பொருள், சசுடு.

எனவாசிரியர் கூறியவா றிந்நூலிடத்துள்ள நுண்பொரு ளெல்லாம் யாவர்க்குமறையாது விளங்க விரித்துக் கூறுதலைக கருதிற் றிவ்வுரையென்பது.

இனி யிந்நூலுக்கு முதனூலாகிய வகத்தியமுதலாயின பன்னூற் றியாண்டின் முன்னரே யிறந்தமையி னந்நூல்கொண் டுரைத்தலை யின்றி யிவ்வுரை பிற வுரையிலக்கணமெல்லாம் பெறு மென்பது.

இனி முதனூலுக்கு வழிகூறுத லாவது, ஆசிரிய னகத்தியன் முதலாயினர் திரிபுர மெரித்த விரிசடைக் கடவுளிடத்துங் குன்றெறிந்த முருகவேளிடத்துங் கேட் டகத்திய முதலாயின செய்தாரெனல் போல்வது.

இனி யாயுங் குணத் தவலோகிதன் பக்க லகத்தியன் கேட்டு நூல்செய்தானெனவு, மந்நூலின் வழித்தாக விந்நூல் செய்யப் பட்டதெனவும், வீரசோழிய நூலார் கூறிய சொற்பற்றிப் பிற்கா லத்தார் கூறுவாராயினர்; அது பொருந்தாது. என்னை? வீர சோழியத்தின் முன்னர் நூல்செய்தா ரொருவரு மங்ஙனங் கூறு மையானு, மவரருந்தவ முனிவ னுக்கிய முதனூலெனவே கூற லானு, மவலோகிதன் புத்தமதகுருவாகலி, னம்மத மிந்நூல் செய்த காலத்தின்மையி னிதன் முதனூற் காலத்து மின்மை சொல்லாதே யமைதலானு, மக்காலத்து முளதென்பா ருளரா யினு மம்மதக் கொள்கையுள் யாதொன்று மின்றி †நான்மறை முற்றிய வாசா னென்று ‡ மாபிற் கோட லந்தணர் மறைத்தே யென்று § மையர் யாத்தனர் கரணமென்ப வென்றும்,

§ "நூலே கரக முக்கோன் மணையே
யாயுங் காலை யந்தணர்க் குரிய."

என்று, ¶ மாயோன் சேயோன் வேந்தன் வருணனென்று, மகத்தியத்தின் வழிவந்த விந்நூல் வேதத்தையும் வேதநெறி யொழுகு மந்தணரையும் வேதத்துட்கூறிய தேவரையுங் குறித் துக் கூறுதலானும், புத்தமதக் கொள்கை கூறுவிடினு மக்குரு

† சிறப்புப்பாயிரம். ‡ பிறப்பியல், உ௰. § கற்பியல், ச.
§ மரபியல், எ௰ ¶ அகத்திணையியல், ரு.

வின் வழிவந்த நூலாயி னந்தணர்மரபு கூறியாங்குப் பௌத்தர் மரபாயினுங்கூறல் வேண்டுமாகலானுங், கடைச்சங்கப் புலவருட் டலைவராகிய நக்கீரனார், * முரணில் பொதியின் முதற்புத்தேள் வாழி யெனக்கூறுதலா, னவ ரவலோகிதனிடத்துக் கேட்பின் முதற்புத்தேளெனல் பொருந்தாமையானும், புத்தமதத்தாரு நல்லிசைப்புலவருமாகிய கூலவாணிகன் சாத்தனு ‡ ரமர முனிவ னெனவுஞ், சைனமுனிவரு நல்லிசைப்புலவருமாகிய விளங் கோவடிகள் † தெய்வமால்வரைத் திருமுனியெனவும், பிறசான் றோருந் $ திருந்திய பொதியி லருந்திறலகத்தியனெனவும் ¶¶ வயந்த மாமலை நயந்த முனிவரனெனவும் கூறினான்றி, யங்ஙனங் கூறாமையானு மென்பது.

இனி யிந்நூன் மூன்றுறுப்படக்கிய பிண்டமென்றாற் போல் வவு, மொவ்வோ ருறுப்பு மொன்பதொன்ப தோத்துடைய வென்றாற் போல்வவு, மகத்திய மவிநய முதலாயின வியலிசை நாடக மென்னு மூன்று பிண்டத்தை யுடைய வொரு பிண்ட மென்றாற் போல்வவு, மிஃ தெழுத்ததிகார மிது சொல்லதிகார மிதுபொருளதிகார மிது நூன்மர பிது மொழிமர பென்றாற் போல்வவு, நூற்பெயர் கூறலோ டொக்கும்.

இச்சூத்திரத் திவ்விலக்கணங்களைத் தொகுத்துக் கூறுகின் றார்; இவ்வியலு ளிவற்றை விரித்துக் கூறுகின்றார்; இதனுட் டொகுத்தும் விரித்துங் கூறுகின்றா ரென்றாற் போல்வன நூல் யாப்புக் கூறலோ டொக்கும்.

இனி யிப்படல மின்னது நுதலிற்று; இவ்வோத் தின்னது நுதலிற்று; இச்சூத்திர மின்னது நுதலிற் றென்றாற் போல்வன நூனுதலிய பொருள் கூறலோ டொக்கும்.

இனி யிந்நூலுக் கிளம்பூரண வடிகள் முதலாயினார் செய்த வுரைகளைக் கேட்டார் யாவரோ வெனி, னவ்வுரை யெல்லாங் கடைச்சங்கத்தார் காலத்தின் பின்னர்ச் செய்யப்பட்டன வாக

---

* தொல், செய்யுளியல், பேராசிரியருரை மேற்கோள். ‡ மணிமேகலை.
† அரங்கேற்றுகாதை க-வது அடி. $ ஷ யுரை மேற்கோள்.
¶¶ சிலப்பதிகாரவுரை மேற்கோள்.

னிற், குற்றமின்மை யாராயுமாறு கேட்டோரையிலவாயின. அதனு னன்றே யாசிரியர் கருத்தொடு மாறுபட வேறுவேறு கூறினு ரென்பது.

இனிக் கேட்போரை யுடைமையாற் குற்ற மிலவாகிய வுரை யென்றூலுக்கு மின்றோ வெனிற், குமாரதெய்வத்தின் கூறுகிய வுருத்திரசன்மனைக் கேட்போனுக வுடைமையா, னாலவாய்ப்பெரு மானடிகளின் கூறுகிய விறையனு ரருளிய களவியனுக்கு நக்கீர னுர்கண்டவுரை குற்றமிலதா மென்பது.

இனிக் களவியனுரைப் பாயிரத்தின்க ணுப்பூரிகுடிகிழார் மகனுவா னுருத்திர சருமனுவான் செய்த திந்நூற் குரையென் பாரு முளர். அவன் செய்திலன்; மெய்புரை கேட்டானென்க வெனவு, மதுரைக் கணக்காயனுர் மகனுர் நக்கீரனுர் தம்மகனுர் கீரவிக் கொற்றனுர்க் குரைத்தாரெனவு, மவர் தேனூர்க்கிழார்க் குரைததாரெனவு, மவர்முத லிவ்வாறே முசிறியாசிரியர் நீல கண்டனுர்காறு முரைநடந்து வருகின்றதெனவும், பல தலைமுறை போக்கிப் படர்க்கை முகத்தாற் கூறுதலானும், பிற்காலத்தாரது செய்யுள் சிற்சில விடையிடைக் காணப்படலானும், களவியனுரை கண்டார் நக்கீரனுரல்லரெனச் சிலர் கூறுவர்; அதுபொருந்தாது. என்னை? யிளம்பூரணர் முதலாய வுரையாள ரெல்லாரு நக்கீரனு ருரையெனவே கூறலானும், பேராசிரிய ரினி யிவ்வுரை செய் தார் யாவரோ வென்றவழி மதுரைக் கணக்காயனுர் மகனுர் நக் கீரரென வுரைசெய்தான் பெயர்கூறுதலுஞ் சூத்திரஞ்செய்தான் பெயர் கூறுநலோ டொத்தவிலக்கணத்த தாயிற்றெனமரபியனுட் கூறுதல, னுரைசெய்தானுந் தன்பெருமையைத் தானே கூறு னுகலிற் பிற்காலத்தா ரொருவ ரவருரைககுப் பாயிர மெழுதி, யவர்செய்த வுரைப்பாயிரத்தொடு சேர்த்தாரென்பது பெறப்பட லானும், வடமொழிக் கடம்பவன புராணமுங் கீரனு ருரைசெய்த வரலாற்றை யொருதிருவிளையாடலாகக் கூறலானு, முன்னோர் செய்யுள் பல வவருரையென்றே கூறலானு, மிடையிடை யுள் ளன பிற்காலத்துச் செய்யு ளென்பது தேற்றமாயி, னதனை யெழுதுவோரான் வந்த மாறுதலெனக் கொள்ளலே முறையன்றி, முற்கூறிய பிரமாணங்களைத் தள்ளல் கூடாமையானு மென்பது,

இதுவன்றி நக்கீரனு ருரைப்பாயிரத்து ளுருத்திரசருமன் பின்னர்க் கணக்காயனுர் மகனுர் நக்கீரனு ருரைத்தவிடத்துப் பதந்தோறுங் கண்ணீர் வார்ந்து மெய்ம்மயிர் சிலிர்ப்ப விருந்தா னெனக் கூறலி, னக்கீரனுர் நூலாக வெழுதா துரையை வாய் மொழியாற் கூறினுரெனவு மவ்வாறே சிலதலைமுறை நடந்து வந்து பின்ன ரொருவரா னூலாக வெழுதப்பட்டதெனவுஞ் சிலர் கூறலு, மதுபாயிரத்துள்ளே யுரைத்தா மெனநூலுட் கூற லாற் களவியற் குரையெழுதினுர் நக்கீரரே பாயிரமே பிறரா னெழுதப்பட்டதெனச்சிலர் கூறலும் பொருந்தாமையா, னூலு ரையும் பாயிரமு நக்கீரனுரே யெழுதினு ரென்பதூஉ மப்பா யிரத்துட் பிறரொருவரா னுரைப்பாயிரமுஞ் சேர்க்கப்பட்ட தென்பதூஉ முணரப்படு மென்பது.

இனி யுருத்திரசருமன் கேட்டு நன்றெனக் கொண்ட களவியலுரைக்கண்ணும், யாப்புக் கேட்போ ரென்மனுர் முதலாய சிலசொற்களி னுரையைச் சிவஞான முனிவர் மறுத்தமையாற், கேட்போரை யுடைய நூலுரைகளினுங் குற்றமுண்மை பெறப் படுமாலோவெனி, னுரைசெய்தார் நல்லிசைப்புலவருட் சிறந்தா ரும் புலவுத்துறந்து புலம்வென்ற பொய்யா நோன்புடையாரு மாகலின் மயங்கா ராகலானு, மதனைக்கேட்டான் குமாரதெய்வ மாகலானு, மதனை மெய்யுரை பெற்றுமெனக் கொண்டாரு மேனைய நல்லிசைப் புலவரே யாகலானு, மவ்வுரை யாவரானு மறுக்கப்படாத மாண்பிற்றும். அதனைப் பின்னர்க்கூறுதும்; ஆண்டுக்காண்க.

இனிப் பயனுக்குப் பயனுவது,

"எழுத்தறியத் தீரு மிழிதகைமை தீர்ந்தான்
மொழித்திறத்தின் முட்டறுப்பா னுகு—மொழித்திறத்தின்
முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து
கட்டறுத்து வீடு பெறும்." என்றதனுனுணர்க்

இனிக் கடாவிடை யுள்ளுறுத்துக் கூறுந் துணிவுரை யுரைக் கற்பாற்று.

: இனிச் சிவஞானமுனிவர் வடவேங்கடந் தென்குமரி யென் பன வன்மொழித்தொகையா யவற்றை யெல்லையாக வுடைய

நிலத்தை யுணர்த்தின வென்றமையா னவற்றைச் செவ்வெண்ண முற்கூறியது பொருந்தாதென்பது மறுதலைக்கடா. அது கூடாது; என்னை? யாசிரிய * ரெல்லாத் தொகையு மொருசொன் னடைய வெனக் கூறினமையான் வடவேங்கடந் தென்குமரி யென்பன வன்மொழித்தொகை யாயி னவ்வன்மொழியை விரித்தவிடத்து மச்சொற்பொருள் சிதையாமை வேண்டுமாகலி, னீண் டவர் கூறிய வன்மொழிப்பொரு ளாகிய நிலத்தை விரித்து வடவேங் கடந் தென்குமரி நிலமெனக் கூறின், வடவேங்கட மென்பது தென்குமரி நிலமாமென வெழுவாய்த்தொடர்ப் பொருள் பயக்கு மன்றி, வடவேங்கடத்தையுந் தென்குமரியையு மெல்லையாக வுடையநிலமெனப் பொருள்படாமையா னச்சொல்லிரண்டு மொரு சொன்னடைய வாகாமையானும், வெள்ளாடை பொற்றொடி தகரஞாழன் முதலாய பிற வன்மொழித்தொகைகள் வெள்ளா டையான் பொற்றொடியாள் தகரஞாழலாளென வன்மொழியை விரித்தவிடத்தும் வெள்ளாடை முதலிய வச்சொற்களின் பொருள் சிதையாது நிற்றலானு, மும்மைத்தொகை நிலைக்களத்துப் பிறந்த வன்மொழித்தொகையெனக் கொள்ளி, னது நிலைமொழி யீறுதிரிந் தொருசொற்றன்மை யெய்திய தகரஞாழ லென்பது போலச் சிறுபான்மை வருதலன்றி, யொருசொற்றன்மை யெய் தல் பெரும்பான்மை யரிதாகலிற் பயின்று வாராமையானும், வருமெனி ‡ னறத்துறை விளங்கிய வறவோர்பள்ளியு மறத்துறை விளங்கிய மன்னவன் கோயிலு மென்புழி யறத்துறை மறத்துறை யென்னு மும்மைத்தொகைகள் போல வேங்கடத் தென்குமரி யென்றுவதல்லது வேங்கடந்தென்குமரியென் றாகாமையானும், வேங்கடத்தை யெல்லையாக வுடைய நிலங் குமரியை யெல்லை யாக வுடைய நிலமெனத் தனித்தனிநின் றியிடை யென்பதனைக் கொண்டு முடிந்த வன்மொழித்தொகையெனக் கொள்ளி, னதுவு மந்தரப் பெருவரை மத்தென்றாற் போல வடவேங்கடத் தென் குமரி யாயிடையென மகரங்கெட்டு வல்லொற்றுத் தோன்றி நிற்குமே யன்றி மெல்லொற்றாக நில்லாமையானு, மவ ராயிடை யென்பதற் கவ்விடமெனவுந் தமிழ்கூறு நல்லுலகத் தென்பதன்க ணுலகத்தை நிலமெனவுங் கூறினமையான் வடவேங்கடத்தையுந்

* தொல், சொல், சஉ௯. ‡ சிலப்பதிகாரம் ஊர்காண்காதை, கக-கஉ.

தென்குமரியையு மெல்லையாகவுடைய நிலமாகிய வவ்விடமாகிய தமிழ்கூறு நிலமெனவவுருரை யாகலி னவ்வுரையு மெல்லையாக வுடையதாகிய தமிழ்கூறு நிலமென்பதே பயன்பட வாயிடை யென்பது நின்று பயனின்றாக முடிதலானு, மவை யிரண் டையு மாயிடைக்கு விசேடணமாகக் கொண்டு வடவேங்கடத் தையுந் தென்குமரியையு முடைய வவ்விடமெனக் கூறி னஃதன் மொழித்தொகை யாதாமையொடு மதிமுகக் கயல்விழி மடந்தை யென்றாற்போல விகாரமு முறல்வேண்டு மாகலானு, மவரு னகர மிறுவா யென்றது னகரவிறுவாயென மகரங்கெட்டசொல்லே யே யன்மொழியென்றமையானு மென்பது.

இனி யவர் தமிழ்நாட்டிற்கு வடக்கட் பிறவெல்லையு முள வாக வேங்கடத்தை யெல்லையாகக் கூறினர்; அகத்தியனார்க்குத் தமிழைச் செவியறி வுறுத்த செந்தமிழ்ப் பரமாசாரிய னாகிய வறுமுகக்கடவுள் வரைப்பென்னு மியைபுபற்றி யென்றார். அது கருத்தாயி,னவர்தாமே யிருமொழிக்குங் கண்ணுதலார் முதற்குரவ ரெனக் காஞ்சிப்புராணத்துட் கூறலா, னறுமுகக்கடவுளுக்குத் தந்தையாகலானு மகத்தியனார்க்குக் குரவனாகலானு மக்கண்ணு தல் வரைப்பினு ளொன்றைக் கூறல்வேண்டும்: அற்றன்று; இரு வரு மபேதமாதல் கருதி யங்ஙனங் கூறினாரெனிற் றெற்கின் கண்ணு மறுமுகக்கடவுள்வரைப்பினு ளொன்றே கூறல்வேண்டும்: அங்ஙனமின்மையானு, மெல்லைகூறல் யாவர்க்கு மொப்பமுடிந்த தாதல் வேண்டுமாகலின்,

§ "வீங்குநீ ரருவி வேங்கட மென்னு
மோங்குயர் மலையத் துச்சி மீமிசை
விரிகதிர் ஞாயிறுந் திங்களும் விளங்கி
யிருமருங் கோங்கிய விடைநிலைத் தானத்து
மின்னுக்கொடி யுடுத்து விளங்குவிற் பூண்டு
நன்னிற மேக நின்றது போலப்
பகையணங் காழியும் பால்வெண் சங்கமுந்
தகைபெறு தாமரைக் கையி னேந்தி
நலங்கிள ராரம் மார்பிற் பூண்டு
பொலம்பூ வாடையிற் பொலிந்து தோன்றிய
செங்க ணெடியோ னின்ற வண்ணமும்."

§ நாடுகாண் காதை சக-டுக.

எனவிளங்கோவடிகள் கூறினமையுந், திருமுருகாற்றுப் படையுண் முருகோன்மலையெனப் பரங்குன்று முதலாய பிற கூற லன்றி வேங்கடத்தை யவன்மலையென நக்கீரனார் கூறாமையும் புராணங்களுட் பல நெடியோன்குன்றமெனவே கூறலுமாராயின் வேங்கட மறுமுகக் கடவுண்மலையா மென்ப தெல்லார்க்கு மொப்ப முடியாமை பெறப்படலானும், பிற்காலத்தார் சிலர் வேறு கூறி னது பிரமாணமாகாமையானு, முருகன் குறிஞ்சிநிலத் தெய்வ மாகலி னமையுமெனிற், கயிலாயத்தையு மேருவையுங் கண்ணு தன் மலையெனவும் பொதியிலை யகத்தியன் மலையெனவுங் கூற லன்றி யவன்மலையெனக் கூறலின்மையா, னவ்வாறே வேங்கடமு நெடியோன் மலையாகலன்றி யறுமுகக்கடவுள் வரைப்பெனல் கூடாமையானு மது பொருந்தா தென்பது.

இனி யவர் தெற்கட் குமரியாறாகலி னதுவே யெல்லையாயிற் றென்றும்,

> "வடதிசை மருங்கின் வடுகுவரம் பாகத்
> தென்றிசை யுள்ளிட் டெஞ்சிய மூன்றும்
> வரைமருள் புணரியொடு பொருது கிடந்த
> நாட்டியல் வழக்க நான்மையின் கடைக்கண்
> யாப்பின திலக்கண மறைகுவன் முறையே."

எனச் சிறுகாக்கை பாடினியார் தெற்குங் கடலெல்லை கூறி யது கடல்கொண்ட பிற்காலத்துச் செய்ததென வறிகவென்றுங் கூறினார். குமரியைக் கடல்கொள்ளாத காலத் திப்பாயிர முரைக் கப்பட்டதென வவரு முடன்பட்டாராகலி னக்காலத்துப் பாண்டி யரது நாட்டுத் தென்பாலி முகத்திற்கு வடபாலெல்லையாகிய பஃ றுளியாற்றுக்குங் குமரியாற்றுக்கு மிடையே யெழுவகைப்பட்ட வேழ்பெருந் தமிழ்நாடுக ளிருந்தனவெனச் சிலப்பதிகார முத லாய நூல்கள் கூறலா னதுவே யெல்லையாயிற்றெனல் பொருந்தா தென்பது.

இனி யிளம்பூரணரு நச்சினார்க்கினியருங் குமரியை யாறெனக் கொண்டமையா னவ்யாற்றின் றென்பாலுள்ள பஃறுளியாறு நாற்பத்தொன்பது தமிழ்நாடுகளு மவ்வெல்லையுட் படாமை நோக்கி யவற்றைப் புறவெல்லையுட் பட்டனவெனத் திரிபுடக் கருதி வேங்கடங் குமரியை யகப்பாட்டெல்லையென்றார். அதுவும் பொருந்தாது. என்னை? வடக்கின்க ணெல்லையாகவொருமலை

கூறினார்க்குத் தெற்கின்கண்ணும் நிலையுடைத்தாய வொருமலை கூறலே முறையாவதன்றி யோரிடத்தி னிற்றலின்றி நீளச்செல் லும் யாற்றினைக் கூறி னெல்லையாகாமையானும், கடல்கொண்ட பிற்காலத்து நூல்செய்த சிறுகாக்கைபாடினியார் முதலாயினார் தெற்கின்கட் பிறநாடின்றித் தமிழ்நாடே யாமாறு கடல்சூழப்பட் டமையா னிலையுடை மலையெல்லை விதந்து கூறல் வேண்டாமை யிற் கடலேகூறினமையானு, மிவ்வாசிரியரும் பிறவாசிரியரு மகப் பாட்டெல்லை புறவெல்லையென யாண்டுங் கூறுமையானு மிந்நூலிற் செய்யுளியலின்கண்,

§ "வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பி
னாற்பெய ரெல்லை யகத்தவர் வழங்கும்
யாப்பின் வழிய தென்மனார் புலவர்."

எனப் பொதுப்படக் கூறுமாற்றானுந், தலைச்சங்க மிரீஇய தென்மதுரையை யகவெல்லையுட் படுத்தாது புறவெல்லையுட்படுத் தலு, மக்காலத்துக் குமரியாற்றின் வடபாற் பாண்டியர்க்குத் தலைநகரமுஞ் சங்கமு மின்றிப், பெரும்பான்மை காடெனக் கிடந்த வந்நாட்டினை யகப்பாட் டெல்லையெனலுங் கூடாமையானு மென்பது.

இனிக் குமரிமலை யிமயமலையையும் பஃறுளியாறு கங்கை யாற்றையு மொக்குமென்னுங் கருத்தான்,

* "அடியிற் றன்னள வரசர்க் குணர்த்தி
வடிவே லெறிந்த வான்பகை பொறாது
பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள
வடதிசைக் கங்கையு மிமயமுங் கொண்டு
தென்றிசை யாண்ட தென்னவன் வாழி."

என்றிளங்கோவடிகள் கூறுமாற்றானுங், குமரிமலை பெரு மையா னிமயமலை யனைய தென்னுங் கருத்தான்,

|| "ஆரியர் துவன்றிய பேரிசை யிமயந்
தென்னங் குமரியொ டாயிடை
மன்மீக் கூறுநர் மறந்தபக் கடந்தே."

எனப் பதிற்றுப் பத்தின்கட் குமட்டூர்க் கண்ணனார் கூறு மாற்றானு, மிப்பரத கண்டத்துள்ள மலைக ளெல்லாவற்றுள்ளும்

§தொல், பொருள், ௩அ௭. * காடுகாண்காதை ௧௭-௨௨. || ௧௧.

பெரியன விமயமுங் குமரியு மைநாகமுமென மூன்றே யென்ப தூஉ, மவற்றுள்ளு மிமயத்திற்குங் குமரிக்குஞ் சிறியது மைநாக மென்பதூஉ, மம்மைநாகங் குமரியை யடுத்துக் குமரிக்கு மிம யத்திற்கு மிடையிலுள்ள தென்பதூஉம் விளங்குமாறு, புனைந் துரைவகையான் மங்கலவினைக்கண் வடபாற் கணவனுந் தென் பான் மனைவியு மவண்மடியின்கண் மகவுமிருத்தலாகிய முறை யினைநோக்கி, வடதிசை யிமயத்தை மலையரையனென்றுந் தென் றிசைக் குமரியை யம்மலையரையன் மனைவிமேனையென்று, மதனை யடுத்துநின்ற பிறிதொன்றை யவ்விருமலைகட்கு மகனென்றும் புராணங்கூறுமாற்றானு, மீண்டுக்குமரியென்பது தென்றிசை மலையா மென்பதூஉம் யாறன்றென்பதூஉ முணரப்படும்.

இனிப் பாண்டியனாட்டைக் கடல்கொள்ளுமுன் னூல்செய்த வாசிரியராகலின்,

"வேங்கடங் குமரி தீம்புனற் பௌவமென்
றிந்நான் கெல்லை தமிழது வழக்கே."

எனச்சிகண்டி யாசிரியரும்,

"வடக்குந் தெற்குங் குடக்குங் குணக்கும்
வேங்கடங் குமரி தீம்புனற் பௌவமென்
றந்நான் கெல்லை யகவயிற் கிடந்த
நூலதின் முறையே வாலிதின் விரிப்பின்."

எனக்காக்கைபாடினியாரும், வடவேங்கடந் தென்குமரியெனப் பனம்பாரனாரும், வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பென விந்நூலாசிரியருந் தெற்கின்கட் குமரிமலையினையே யெல்லையாகக் கூறினர். கடல்கொண்ட பிற்காலத் தாசிரியராகலிற் சிறுகாக்கை பாடினியார் முதலாயினர் தெற்குங் கடலெல்லைகூறினர். இம் முறை நோக்காது பின்னையோர் தங்காலத்துத் தெற்குங் கடலே யெல்லையென்ப தறிந்துவைத்து நன்னூன் முதலாய நூல்களுட் குமரியாற்றுக்குத் தெற்குஞ் சில பிறநாடுளவோவென வையுறு மாறு குணகடல்குமரி குடகம்வேங்கட மெனுநான் கெல்லை யெனத் தமக்கு வேண்டியவாறே கூறினர்.

இனிக் குமரியை மலையெனக் கொள்ளாமல் யாறெனக்கொள் ளிற் பாண்டியனாட்டைக் கடல்கொள்ளாத் காலமாயிற் குமரி

யாற்றுக்குத் தென்பாலக்காலத்துள்ளன வாகிய நாற்பத்தொன் பது தமிழ்நாடுகளுந் தலைச்சங்கமிருந்த தென்மதுரையு மவ்வெல் லையுட் படா தொழிதலே யன்றி, வேங்கடத்தின் வடபாலுள்ள நாடு போலவே பிறநா டெனப்படலுங், கடல் கொண்ட பின்ன ராயிற் குடக்குங் குணக்கும் போலத் தெற்கினுங் கடல் கூறுதலா யாறு கூறியதா லவ்யாற்றிற்குத் தெற்குஞ் சில பிறநாடுளவெனப் பொருள் பயத்தலு முணர்க.

இனிச் சிவஞான முனிவர் இஃதறியாதா ராயிடை யென் புழித் தனித்துநின்று பொருளுணர்த்த லாற்றாத அகரச்சுட்டினை யாகுபெயரென்று மவற்றுக் குள்ளென வுருபு விரித்து மிடர்ப் படுபவென, வாண்டிடர்ப்படாம லுரைத்த விளம்பூரணரையு நச்சி னார்க்கினியரையு மவருரையை முன்பினோக்கி யுணராது வாளாதே குற்றங் கூறினர். அவ்விருவரு மகரச்சுட்டினை யாகுபெய ரென்று மதற்குருபுவிரித்து முரைகூறாமையானு, மவ்வென்னும் வகரவிற்றுச் சுட்டுப்பெயரையே யவ ராகுபெயரென்று முருபு விரித்து முரைகூறினா ராகலானு, மவ்வென்பது சுட்டுப்பெயரா கலின், ஆகுபெயராதற்கு மவற்றுளென வுருபுவிரிதற்குந் தடை யின்மையானு முனிவருரை பயன்படாமை யறிக.

இனி யிளம்பூரணரு நச்சினார்க்கினியரு மகரச்சுட்டைக் கொண்டிலர்; அவ்வென்னும் வகரவீற்றுப் பெயரையே கொண் டாரென்பதனைக் கிளந்தவல்லவென்னு மதிகாரப் புறனடையு ளா யிடையென்பது அவ்வென்னும் வகரவீறு வேறுபட முடிந்த தெனவு, மாயிடையென்ப தருபாகலி னீடவருதலென்பதனான் முடியாது நீண்டு வகரவீறு வேறுபட முடிந்ததெனவு மவ்விரு வருங் கூறுமாற்றா னறிக.

இவ்வாறு குற்றமில்லாவிடத்துஞ் சிலரை யிகழ்ந்து மறுத் துங், குற்றமுள்ளவிடத்துஞ் சிலரைப் புகழ்ந்துடன்பட்டு, முன்பி னுள்ளவற்றைப் பாராம லவ்வவ்விடத்துத் தாமெண்ணியாங்கு முனிவர் பல கூறுவர்; அவை பொருந்தாமை யாண்டாண்டுக் காட்டுதும்.

இனி யவ ராயிடையென்பதன்க ணிடையென்ப தேழனுரு பன்றெனவு, மிடமென்னும் பெயரெனவு முன்னர்க்கூறிப் பின்ன

ரப்பொரு ளையி்ன்றித் தோன்றுமா றுயிடையாகிய வுலகத் தென்க வென்றார். யாண்டு மிடையென்ப தேழனுருபா தலன்றி யிலப்பொருளை யுணர்த்து மிடப்பொதுப்பெயராக வாராமையானும், மது பெயராகவும் வழங்குமெனின், முதலிடைகடை யென்பதன்க ணடுவாகிய விடையையும் வழியையு முணர்த்தி யிடத்தி னேகதேசத்துக்குப் பெயராவதன்றி, யிடப் பொதுமையை யுணர்த்தாமையானும்,முவ்வயி னிவ்வயி *னுவக்கா ணிவக்கா ணென்றாற்போலவவ்விடையென வொட்டிநின்ற விரண்டிடைச்சொல்லே † யாயிடையாரரு குற்றன் கண் ணென்புழிப்போல முதனீண்டிடப்பொருளை யுணர்த்தினவெனி, னஃதிடப்பொரு ளுணர்த்தி னேழாம் வேற்றுமைப் பொருள்பட நிற்பதன்றி, யாயிடையாகிய வுலகத்தெனப் பண்புத்தொகைப் பொருள்பட நிற்றல் பொருந்தாமையானும், மிடையு மிடமு மொருபொருட் சொற்களாயி னிடத்து நிகழ்பொரு ளேழிடங் கொண்டா ரென்ப போல்வன விடை நிகழ் பொரு ளேழிடை கொண்டாரெனக் கூறினு மப்பொருளே படல்வேண்டும்; அவ்வா றின்மையானும், ‡ மென்றாழ் நீளிடை $ அத்த நீளிடை § யாரிடை யிறந்தன ளென்பன முதலாக வைங்குறுநூற்றின்க ணிடையென்ப திடத்தி னேகதேசமாகிய வழியை யுணர்த்தலன்றி யிடப்பொதுமையை யுணர்த்தாமையானும், பதிற்றுப் பத்தினுட் ¶ தென்னங் குமரியொ டாயிடையென வுருபாகவே நிற்றலானு மென்பது.

இனி யாயிடை யென்பதன்க ணவ்வென்பது வகரவீற்றுச் சொல்லெனவு, மிடையென்ப தேழனுருபெனவுங் கொண்ட நச்சினார்க்கினிய ரவற்றை யெல்லையாக வுடைய நிலத்து வழங்குந் தமிழெனவிளம்பூரணர் கூறியவாறு பொருள் கூறும, லவ்விரண்டெல்லைக் குள்ளிருந்து தமிழைச் சொல்லு நல்லாசிரியரென்றார். அவை தமிழுக் கெல்லையாவ தன்றி யதனைக் கூறு மாசிரியர்க் கெல்லையாகாமையிற் பொருந்தாது. என்னை? அவர்தாமே பொருளதிகாரத்துள்,

* ஐங்குறுநூறு உ௦௬, உ௦௭. அகநானூறு ௪, ௧௧௩. குறுந்தொகை ௲௧௭. திருக்குறள், ௧௧௨௰. † திருக்குறள், ௧௧௭௩. ‡ ௲உ௪, ௲௩௦. $ ௲௨௰. § ௲௩௪. ¶ ௧௧.

**" கடிவரை யிலபுறத் தென்மனார் புலவர்."
(** " நடுவணைந் திணை நடுவண தொழியப்
படுதிரை வையம் பாத்திய பண்பே.")

என்னுஞ் சூத்திரத்திற் பாயிரத்து ளெல்லை கூறிய தன்றி யீண்டு மெல்லை கூறினார்; புறநாட் டிருந்து தமிழ்ச்செய்யுள் செய்வார்க்கு மிதுவே யிலக்கணமா மென்றற்கெனக் கூறலா, லாசிரியரிவ்வெல்லையுளன்றிப் புறத்திருந்துந் தமிழ்கூறுபவென்ப தவர்க்கு முடன் பாடாகலா னென்பது.

இனிச் சிவஞானமுனிவர் தமிழ்கூறு நல்லுலகத்தென விடத்தி னிகழ் பொருளின் றொழிலும் பண்பு மிடத்தின்மே னின்றன வெனவு, முலகமென்பது தமிழ்வழங்கு நிலனெனவு முரைத்தார். அவர் கருத்தின்படி யிட முலகமு மிடத்துநிகழ் பொருள் மக்களு மவரது தொழி றமிழ்கூறலு மவரது பண்பு நன்மையு மாகலிற், றமிழ்கூறலு நன்மையு மாகிய வத்தொழிலும் பண்பு முலகமாகிய விடத்தின்மே னின்றவாயி னவைபோலவே வழக்கையுஞ் செய்யுளையும் வழங்கலாகிய தொழிலு மவ்வுலகத்தின்மே னிற்றல் வேண்டு மாகலானு, மங்ஙனமாக வவ்வழங்குதற் றொழின் மாத்திர முலகத்தின்மே னில்லாது பொருண்மே னிற்றல் பொருந்தாமையானு, மவருந் தமிழ்மொழியைக் கூறு நல்லுலகத்தின்கண் வழங்கும் வழக்குஞ் செய்யுளுமென வுரைகூறலாற் றமிழ்வழங்கு நிலனை நல்லுலகமெனவடைபுணர்த்தியு, மந்நிலத்து வழங்குமுயர்ந் தோரது வழக்கையுஞ் செய்யுளையு மடைபுணர்க்காமையேயன்றி யின்னவெனச் சுட்டாமலுங் கூறல் கூடாமையானு மென்பது.

இனி யவர் * வழக்கெனப் படுவ துயர்ந்தோர் மேற்றே யென்றதனு னவ்விரண்டு முயர்ந்தோரதுவழக்குஞ்செய்யுளுமாமென்பது தானே பெறப்படுதலி, னல்லுலக மென்றற்கு நல்லாசிரியரென வுரைத்தன் மிகையாமென மறுக்க வென்றார். இனி,

§ "நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரு நாடு."

என்புழி நாடும் வளத்தன வாய நாடு காடெனப்படாமற் குற்றமுடைய நாடெனப் பொருள்படுமாறுபோல வீண்டு நல்லாசிரிய ரல்லாதாரது வழக்குஞ் செய்யுளுங் குற்றமுடையவாமென்

** தொல், பொருள், உ. * ஷை. கூசஅ. § திருக்குறள், எ௩௯.

பதே பொருளாவ தன்றி, யவை யப்பெயருடைய வாகா வென்பது பெறப்படாமையா, னதனை யிலக்கற்கு நல்லுலகத்து வழக்குஞ் செய்யுளுமென வின்றியமையாமையாகவு மதனை மிகையாமெனல் பொருந்தாது. பொருந்துமெனி னூலெனப்படுவ தென்னுஞ் சூத்திரத்தானே குற்றமில்லாததே நூலெனப்படுவது;குற்றமுடையது நூலாகாதெனவாசிரியர் கூறுமாற்றாற் பனுவலெனவே போக்கறு பனுவலெனத் தானே பெறப்படு மன்றோ? அவ்வாறாகவு மதனை மிகையெனக் கருதாது குற்ற மற்ற நூலெனத் தாமுமாண் டுரைகூறினா ராகலி, னவர்க்கு மது கருத்தன் றென்பது.

இனி யவ ராயிரு முதலி னென்பதற் காராய்ந்த பெரிய காரணத்தானேயெனப் பொருள் கூறி, யது வினைத்தொகையெனவும், வழக்குஞ் செய்யுளு மாராய்ந்தபின்ன ரிந்நூல் கேட்கற்பாற் றென்பது பெறப்பட்ட தெனவுங் கூறினார். செய்யுளையாராய்தற் கிந்நூல் கருவியாவ தல்ல திந்நூலை யாராய்தற்குச் செய்யுளாராய்ச்சி கருவியாகாமையானு, மெண்ணு மெழுத்துங் கண்ணெனவு மிவ்விரண்டுங் கண்ணென்பவெனவு மெழுத்தறியத் தீரு மிழிதகைமை தீர்ந்தான் மொழித்திறத்தின் முட்டறுப்பானெனவுங் கூறலா னது விளங்குமாகலானு, மதுவன்றி யவர் தாமே பரிபாடல் கலி யகநானூறு புறநானூறு முதலாய செய்யுளாராயப்புகுந்தா ரிப்பொருட்பாகுபா டுணராக்காற் குன்றுமுட்டிய குரீஇப்போல விடர்ப்படுவரெனக் கூறலானு, மாராய்ச்சியென்பது தெளிதற்கே பெயராமாகலி னாராயுமுன்ன ராசங்கை நிகழுமன்றி யாராய்ந்தபின்ன ரது நிகழாமையின் வழக்குஞ் செய்யுளு மாராய்ந்த பின்ன ராசங்கை நீங்கற் பொருட் டிந்நூல் கேட்கற்பாற் றென்பது பொருந்தாமையானு, மாயிருதிணையின், ஆயிருகிளவியும், ஆயிருவகைய, ஆயிரண்டென்ப, ஆயெட்டென்ப, ஆயியற்றிரியா வெனப் பலவிடத் தாசிரியர் சுட்டாயினுஞ் சுட்டுப் பெராயினு நீடுமாறு கூறினாரன்றி, வினைத்தொகைப் பொருள்பட யாண்டுங் கூறிற்றில ராகலானு, மவ்வுரையு மதுபற்றிக் கூறிய வேனையவும் பொருந்தா வென்பது.

இன்னு மவ ரிக்கருத்தறியாத நச்சினார்க்கினியார் முதலென்பதனைப் பெயரடியிற் பிறந்த முதனிலைவினைப் பெயராகக் கொண்டு

முதலுதலினுலென வுரைப்ப ரென்று, மிருமுதலென்னுந் தொகைச்சொ லங்ஙனம் பக்கிசைத்தல் பொருந்தாமை யறிகவென்றுங் கூறினர். முதலென்பது காரணமெனப்படினு முதலுதலெனப்படினும் பெயராகவேயின், றின்னென்னு மிடைச்சொல்லுடன்புணர்ந் திருமுதலினெனத் தொகைச்சொல்லாகி நிற்பவும், பெரிய காரணத்தானேயெனத் தாங்கூறியவாறு பொருள்பட நிற்பிற் பக்கிசையா தெனவு, நச்சினர்க்கினியர் கூறியவா றிரண்டு முதலுகையினுலெனப் பொருள்பட நிற்பிற் பக்கிசைக்கு மெனவும் பொருந்தாமை காண்க.

இனி நச்சினர்க்கினியர் தங்கருத்து விளங்குமா றிரண்டையு முதலாகக் கொள்ளுகையினுலே யெனச் சொற்பொரு ளுரைக்குமிடத்துக் கூறினராயினு, மிலக்கணங் கூறுமிடத் திரண்டு முதலுகையினுலெனக் கொள்ளல் வேண்டு மென்பதை விளக்கினராகலி, னது பக்கிசையாமை யுணரப்படும்.

இனி நச்சினர்க்கினியர் முதலாகக் கொள்ளுகையினுலே செந்தமி ழியற்கை பொருந்திய நாடென்க வென்றார். வழக்கையுஞ் செய்யுளையு முதலாகக் கொள்ளாக்கா லவர் கூறிய செந்தமிழ் நாட்டி னுள்ளாராயினு மவரிடத்துச் செந்தமி ழியற்கை சிவணுமையானுங், கொள்ளி னேனைநாட்டி னுள்ளாராயினு மவரிடத்துச் சிவணுதலானு, மதுவன்றி வடவேங்கடந் தென்குமரியுள் வழங்கு மாசிரியர் வழக்குஞ் செந்தமிழ் நாட்டு வழக்கும் வேறுவேறெனத் தோற்றலானும், வேறெனப்படி னாசிரியரது வழக்குக்கு வேறாயின கொள்ளப்படாமையானு, நல்லாசிரியரது வழக்கெனவே யேனையோர் வழக்குங் கொள்ளற்பாற் றன்றென்பது தானே பெறப்படுதலானு, மாசிரியர் யாண்டு நல்லாசிரியர் வழக்கெனவுஞ், செந்தமிழ் நாட்டு வழக்கெனவு மதனை யிருவகைப் படுத்துக் கூறுமையானு மது பொருந்தா தென்பது.

இனிச் சிவஞானமுனிவர் சிவணிய வென்பதற்குப் பொருந்தியுணரும் பொருட் டென்பது பொருளென்று, மது செய்யிய வென்னும் வாய்பாட்டு வினையெச்ச மென்றுங்கூறி, யதற்கு வினைமுதல் சூத்திரத் தின்மையான் வழக்குஞ் செய்யுளும் பயின்றார் செந்தமி ழியற்கை சிவணும் பொருட்டென வினைமுதலைத் தாமே

வருவித்துங் கூறினர்; அது பொருந்தாது. என்னை? நடந்தே னென்னு மிடத்து யானென்னும் வினைமுதல் பயனிலையேதுவாக வருவித்தாற் போலவு, * நீட வருத லென்புழி முன்னர்ச் சுட் டதிகாரப் பட்டமையானே யவ்வேதுவாற் சுட்டு நீடவென வினை முதல் வருவித்தாற் போலவும், யாதானு மோரேதுவா னொரு சொல் வருவித்தல் வேண்டு மன்றி, வழக்குஞ் செய்யுளும் பயின் றாரென வோரேதுவு மின்றித் தாமாக வொருவினைமுதலை வரு வித்துக் கூற லிலக்கண மாகாமையானும், வழக்குஞ் செய்யு ளும் பயின்றார் செந்தமி ழியற்கை சிவணும்பொருட் டாசிரியன் முந்துநூல் கண்டு புலந்தொகுத்தானெனிற், செந்தமிழியற்கை யை யாசிரியன் சிவணுதற்கு மம்முந்துநூல் காரணமாத லறியப் படாமையானு மென்பது.

இனி யவர் செந்தமி ழென்பதனை நிலமென்பதனொடு கூட்டுக வென்றார். அவர் கூறியவாறு பிறிதொரு வினைமுதலின் வினை யாய் நின்ற சிவணிய வென்பதன் செயப்படுபொருளாகிய வச் செந்தமி ழுவமை முதலாய வேதுக்க ளொன்றுமின்றிப் பிறி தொரு பொருளாகிய நிலமென்பதனோ டியையாதாகலானு, மா யிரு முதலிற் செந்தமி ழியற்கை சிவணியவெனக் கொண்டுகூட்டி யிடர்ப் படுபவென நச்சினார்க்கினியரைக் குற்றங் கூறிய வவர் தாமே யங்ஙனங் கொண்டு கூட்டன் மேற்கோண் மலைவா மாக லானு, மக்கூற்றுக் குற்றமுடைத் தென்பது.

இனி நிலமென்பது செந்தமிழ் நிலத்து மொழியெனவு, மஃ தாகுபெயரெனவு, முந்துநூ லென்ப தந்நிலத்து மொழியொடு முற்பட்டுத் தோன்று நூலெனவு மஃதகத்தியமா மெனவு மவ ருரைத்தார். வித்தினிடத் திலை பூக் காய் பழங் கிளைமுதலாய வெல்லா மநாதியே யடங்கிக் கிடப்பினு மவை தோன்று நெறிக் கண் முறையானே முளைத்துத் தழைத்துப் பூத்துக் காய்த்துப் பழுத்தலே யன்றி, யொருகாலத்தே யனைத்து முளவாகா. அது போல வெல்லாமொழிகளு மவற்றது வழக்கு நூலு மநாதியே யுள்ளன வாயினுந், தோன்று நெறிக்கண் முறையானே முற்பட மொழியுளவாகிப் பின் வழக்குளவாகி யதன்பின்னரே நூலுமுள

* தொல், உயிர்மயங்கியல், கூ.

வாதல் வேண்டும்; இஃதெல்லார்க்கு மொப்ப முடிந்தது; இவ்வா றன்றி மொழியு நூலு மொருங்கு தோன்றினவாக வவர் கூறல் பொருந்தாது. என்னை? வழக்குஞ் செய்யுளு மலிந்த பின்னர்த் தமிழியலை முனிவன்பா லாசிரிய னகத்தியன் கேட்டு நூல்செய்தா னென லவர்க்கு முடன்பா டாகலானு, முனிவன் கண்ட விசை நுணுக்க மகத்தியத்தினு முற்பட்ட தாகலானு, மகத்தியந் தமிழ் மொழியொடு முற்பட்டுத்தோன்றாது பிற்பட்டுத் தோன்றினமை விளங்கலினென்பது.

இனித் தொன்மைகூறுங் கருத்தாற் புனைந்துரைத் தவ்வாறு கூறினா ரெனிற், செந்தமி ழியற்கை சிவணிய மொழியொடு முந்து நூலெனினுஞ் சூத்திர மமைதலி னங்ஙனங் கூறாமையே யது பொருளன்மை காட்டுமாகலானு, நிலமென்பதனை யாகுபெயராக் கிப் புனைந்துரை வகையான் மொழியெனத் தொன்மை கூறலி னும் படைப்புக் காலத்தே நிலத்தொடு தோன்றிய முந்து நூலென வாகுபெயர்ப்பொருளின்றிக் கூறலுஞ் சிறப்புடைத்தா மாகலானு, மந்நிலத்து வாழ் மக்களொடு முந்துநூலென வாகுபெயர்ப் பொருளை வேறுபடுத்துக் கூறினு மத்தொன்மை யமைதலானும், போக்கின்மையானூற்குப் பெருமைகூற லன்றித் தொன்மையாற் பெருமைகூறல் பாயிரத்தியல் பாகாமையானு மென்பது.

இனி யவரும் பிறர்சிலருந் தொல்காப்பியத்துக் ககத்திய மொன்றே முதனூலெனக் கூறினர்; அது பொருந்தாது. என்னை? இவ்வாசிரியர் நுண்ணிதி னுணர்ந்தோர் கண்டவாறே யெனவுங், கடிநிலை யின்றே யாசிரியர்க்க வெனவு, நூலென மொழிப நுணங்கு மொழிப் புலவரெனவும், பிறாண்டு மொருவரைச் சுட்டிக் கூறாது பொதுப்படப் பலவாசிரியரைக் கூறலானு, முபசர்வுகருதி யகத்தியனாரையே பன்மையாற் கூறினரெனின்,

* "ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியு
மொன்றனைக் கூறும் பன்மைக் கிளவியும்
வழக்கி னாகிய வுயர்சொற் கிளவி
யிலக்கண மருங்கிற் சொல்லா றல்ல."

* தொல் சொல், உள.

என் றிலக்கணங் கூறிய வாசிரியர் தாமே நூலு ளங்ஙனங் கூறாராகலானு, முதனூ லாசிரிய னகத்திய னொருவனே யாயின் மூவகை யேற்றி மொழிநரு முளரே யென வாசிரியமத விகற்ப முறப் பிறநூலாசிரியர் கூறலும் பொருந்தாமையானு, மகத்திய மொன்றே யிந்நூலுக்கு முதனூலாயி, னிப்பாயிரத்துண் முந்து நூல் கண்டெனப் பொதுப்படக் கூறும லகத்தியங் கண்டென விளங்கக் கூறலே முறையா மாசலானு மென்பது.

இனி யருந்தவமுனிவ னாக்கியமுதனூல் பொருந்தக் கற்றுப் புரைதப வுணர்ந்தார் தொல்காப்பியன்முதற் பன்னிருவரு மென்று கூற லென்னையெனிற்? செயற்கைமுதனூல் பலவற்று ளகத்தியமொன்றே முற்றக்கூறிய நூலாதலிற் சிறந்தமையானு, மந்நூலை யப்பன்னிருவரு மகத்தியனார் மருங்கு கற்றுப் பிறமுத னூலையும் பயின்றமையா னவரது பெருமைகூறும்வழித் தலைமை பற்றி யருந்தவமுனிவ னாக்கியமுதனூலென வவ்வொருநூலே கூறினு மமையுமாகலானும், வழிகூறுமிடத் திந்நூலுட் பலவாசிரி யரது மதவிகற்பமுங் கூறலா னவ்வொருநூலே கூறி னையுறு மா கலி னதனொடு பிறவுங்கூற வின்றியமையாமையானு மவ்வாறு கூறினரென்பது.

இனி யிளம்பூரண வடிகள் வழக்குஞ் செய்யுளு மாகிய விரு காரணத்தானு மெழுத்துஞ் சொல்லும் பொருளு மாராய்ந் தவ்வா ராய்ச்சியிற் குறைபா டுடையவற்றிற்குச் செந்தமிழ் நிலத்து வழக் கொடு முதனூல்களிற் சொன்னவற்றினைக் கண் டவற்றைத் தொகுத்துக் கூறினா னென்றார்; அது பொருந்தாது. என்னை? அவ்வுரையா னல்லாசிரியரது வழக்குஞ் செந்தமிழ் நிலத்து வழக்கும் வேறெனவு, நல்லாசிரியரது வழக்குக் குறைபாடுடைய வெனவுஞ், செந்தமிழ் வழக்குக் குறைபா டில்லாதன வெனவு, முந்துநூ லின்றியும் பெரும்பான்மை தாமே யிலக்கணம் வகுத் தானெனவு, மக்குறைபாட்டுக்கே முந்துநூல் கண்டானெனவும் பொருள்படலான் முன்னோர் கருத்தொடு முரணுதலானும், வழக் கெனப் படுவ துயர்ந்தோர் மேற்றே யென நூல் கூறிற்றன்றிச் செந்தமிழ் நிலத்து வழக்கென வேறொன்று கூறாமையானு, மெல்லா வாசிரியரு மகத்தியனிடத் திவ்வாசிரியன் கற்றானெனக்

கூறினாரே யன்றித் தாமே யாராய்ந்தாரெனக் கூறாமையானும், மங்ஙனங் குறைபா டுடையவற்றிற்கு முந்துநூல் கண்ட வாசிரியனேயவற்றிற்கு முந்துநூல் காணிற் குறையொன்று மின்மையானும், முந்துநூலின்கட் சில வின்மையான் வழக்குஞ் செய்யுளு மாராய்ந்தானெனின், னிந்நூன் முந்துநூலிற் சிறுபான்மை கண்டு தொகுத்தலான் முதனூலு மாகாமற் பெரும்பான்மை தாமே கண்டு தொகுத்தலான் வழிநூலுமாகாமற் படைத்து மொழி நூலாக முடிதலானு மென்பது.

இனிச் செந்தமி ழியற்கை சிவணிய நிலமெனற் குரையாள ரெல்லாரு மது செந்தமிழ் நாடா மெனவு, மந்நாடு வேங்கடங் குமரியை யெல்லையாக வுடைத்தன் றெனவு, மது வையை யாற் றின் வடக்கு மருதயாற்றின் றெற்குங் கருவூரின் கிழக்கு மரு வூரின் மேற்குமாகிய விந்நான் கெல்லை யுடைத்தெனவு, மவருள் ளுஞ் சிலர் கடல்கொண்ட பின்னர்க் கடைச்சங்க மிரீஇய வுத் தர மதுரையை யுடைய பாண்டியனாடே யெனவுஞ், சோழனாடு முதலாயின கொடுந்தமிழ் நாடாமெனவுங் கூறுவா ராயினர். அங் ஙனமாயி னிது செந்தமிழ் நூலாகலி, னக்கொடுந்தமி ழெல்லையை நீக்கிச் செந்தமிழுக்கே யெல்லை கூறல்வேண்டும்; அஃதின்றேல் வேங்கடங் குமரியைச் செந்தமிழுக்குங் கொடுந்தமிழுக்கும் பொதுவெல்லையெனக் கூறிச் செந்தமிழுக்குத் தனியே சிறப்பெல் லையுங் கூறல் வேண்டும்; அவ்வாறு கூறாமையானு, மங்ஙன மன்று; உயர்ந்தாரது தமிழ் செந்தமிழெனவு மல்லாதார் தமிழ் கொடுந்தமி ழெனவுமபடு மாகலி னுயர்ந்தாரையுடைய வுத்தர மதுரையையுடைய பாண்டியனாடு செந்தமிழ் நாடாயிற்றெனி, னுயர்ந்தாராகவே யொருநாட்டி னிருத்தல் யாண்டு மின்மையாற் செந்தமிழ் நாடெனத் தமிழ்வழங்கு நாட்டினு ளொருநாட்டை மாத்திரஞ் சுட்டிக் கூறல் பொருந்தாமையானும், பொருந்து மெனிற் கடைச்சங்கத்தாரினு முயர்ந்தாராகிய விடைச்சங்கத்தா ருந் தலைச்சங்கத்தாருமிருந்தபாண்டியனாட்டினையுஞ் செந்தமிழ்நா டெனல் வேண்டும்; அவ்வா றவர்தாமுங் கூறாமையானு, நூலுள்ளு மிவ்வாசிரியர் வண்புகழ் மூவர்தண் பொழில் வரைப்பென மூவர் நாட்டையுந் தமிழ்நாடெனக் கூறினா ரன்றிப் பாண்டியனாட்டை மாத்திரஞ் செந்தமிழ் நாடென்றுஞ், சேரசோழரது நாட்டைக்

கொடுந்தமிழ் நாடென்றும் பகுத்துக் கூறுமையானும், மேனையாசிரியரும் வேங்கடங் குமரி தீம்புனற் பௌவமென் றிந்நான்கெல்லை தமிழது வழக்கே யெனவு, மந்நான் கெல்லை யகவயிற் கிடந்த நூலெனவும், வரைமருள் புணரியொடு பொருது கிடந்த நாட்டியல் வழக்கமெனவுங் கூறினாரேயன்றிச் செந்தமிழ்நாடு வேறு கொடுந்தமிழ் நாடு வேறெனக் கூறுமையானு,மிவ்வாசிரியர் நூல்செய்த காலத் துள்ள தென்மதுரை தலைச்சங்கப் புலவர்க்குரிய விடமாக விருந்தமையா னம்மதுரையு மதனையுடைய கடல் கொள்ளப்பட்ட பாண்டிய னாடுஞ் செந்தமிழ் கொடுந்தமிழெனவவர் பகுத்த நாட்டினு ளடங்காமையானு, மடங்காமையா னந்நாடு தமிழ்நா டன்றெனவே கொள்ளக் கிடத்தலானுந், தமிழையிருவகைப் படுத்தலு நிலமும் வேறு வேறு கூறலும் பொருந்தாவென்பது.

இதுவன்றி வழிநூலாகிய விந்நூலுக்கு முதனூலே காரணமாக லன்றி, மொழியாயினும் வழக்காயினுங் காரணமாகாமையி, னிலத்தொடு முந்துநூல் கண்டெனற்கு நிலத்துமொழியொடு முற்பட்டுத் தோன்று நூலெனக் கூறினு, நிலத்து வழக்கொடு முதனூலைக் கண்டெனக் கூறினு, நிலத்தொடு என்பதன் கணுள்ள வொடுச்சொ லுயர்பின் வழித்தாகாம, * லொருவினை யொடுச்சொ லுயர்பின் வழித்தே யென்னும் விதியொடு மாறுபடு மென்பது.

இனி முன்ன ராயிடைத் தமிழென வடையின்றியும் பின்னர்ச் செந்தமிழென வடையொடுங் கூறியதென்னையோவெனி, ஞண்டுத் தமிழென்றது கற்றூர் கல்லாதா ரென்னு மிருதிறத்தாருங் கூறுந் தமிழாமெனவு, மீண்டுச் செந்தமி ழென்றது கற்றூர் வழுவின்றிக் கூறுஞ் செம்மையுடைய தமிழாமெனவும், விளங்கற் பொருட் டவ்வாறு கூறினா ரென்பது.

இது நோக்கியே வடவேங்கடந் தென்குமரி யாயிடைத் தமிழதுவழக்குஞ் செய்யுளுமெனக் கூறி, னவ்வெல்லையையுடைய நிலத்து ளிழிந்தோர் வழக்கு முண்மையி னதனையுந்தழுவுமெனக் கருதி, யதனை நீக்கற்பொருட்டுத் தமிழ்கூறு நல்லுலகத்து வழக்

* தொல், சொல், கக.

கெனவுஞ், செந்தமி ழியற்கை சிவணிய நிலத் துயர்ந்தோரொடு முந்துநூல் கண்டெனி, னக்கழகத் திழிந்தோரு முளரெனப் பொருள்படுமாகலி, னவ்வாறு கூறும லச்சங்கத் திருந்தோரெல் லாரு முயர்ந்தோரேயென்ப தறிவித்தற்பொருட் டாகுபெயரா னிலத்தொடு கண்டெனவுங் கூறினு ரென்பது. இனி யாசிரியர்,

‡ "செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்துந்
தங்குறிப் பினவே திசைச்சொற் கிளவி."

என்றாராகலிற், கொடுந்தமிழ் நிலம் பன்னிரண் டௌவெனவு மத்தமிழே திசைச்சொல்லா மெனவும் பெறப்படலானே தமி ழிருவகைய வெனவு, மவை யிரண்டற்கும் பொதுவெல்லை வேங் கடங் குமரி யெனவுஞ், செந்தமி ழெல்லை வேறு கூறவு மமையு மெனி, னாசிரியர் பன்னிரு நிலமென்ற தன்றிப் பன்னிரு கொடுந் தமிழ் நிலமெனக் கூறாமையானும், பிறாண்டுங் கொடுந்தமிழெனல் காணப்படாமையானுஞ், செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நில மென்றமையா னது செந்தமிழ் வழங்கிய பன்னிரு தமிழ்நா டெனப் பொருள்படு மன்றிச், செந்தமிழ் நிலத்தைச் சேர்ந்த பன் னிரு கொடுந்தமிழ் நிலமெனப் பொருள்படாமையானுஞ், செந் தமிழினின்று சிதைந்து வழங்கு மொழியே கொடுந்தமிழெனி, னஃதிழிந்தோர் வழக்காகலிற் கொள்ளப் படாமையானு, மத் தமிழி னின்றும் பிறந்த பிறிதொரு மொழியெனி, னது துளுக் கன்னடந் தெலுங்கு மலையாள மென்றாற் போல வேறுபெயர் பெறலன்றிக் கொடுந்தமி ழெனல் கூடாமையானு, மத்துளு முதலாயினவு மாசிரியன்காலத் தின்மையானு, மாண்டுப் பன் னிருநில மென்றது செந்தமிழியற்கையுந் திரிபுஞ் சேர்ந்த பன் னிரு தமிழ்நா டாகலானு, மவ்வுரை பொருந்தா தென்பது.

இனி நச்சினார்க்கினியர் முந்து நூல் கண்டு முறைப்பட வெண்ணி யெழுத்துஞ் சொல்லும் பொருளு நாடித் தன்னூ லுள்ளே புலந்தொகுத்தானெனக் கொண்டுகூட்டினார்; அது பொருந்தாது. என்னை? முந்துநூல் கண்டெண்ணிப் புலந்தொகுத் தானென்றமையானே யெழுத்துஞ் சொல்லும் பொருளு நாடல் பெறப்படு மாகலிற் பின்னுங்கூற லமையாமையா னென்பது.

‡ தொல், சொல், ௪00.

இனி யிளம்பூரணர் நாடி யெண்ணி யரிறபத் தெரிந்து மயங் காமரபிற் காட்டிப் பெயர்தோற்றிப் பனுவலுட் புலந்தொகுத் தானெனக் கொண்டுகூட்டி யுரைத்தார். அதுவும் பொருந்தாமை மேற்கூறிய வாற்றானே விளங்கும்.

இவ்வாறு பின்னும் பலவிடத்து நச்சினார்க்கினியர் தமக்கு வேண்டியவா றெல்லாஞ் சொற்களை நெறியின்றிக் கொண்டு கூட்டியுரைத் திது மாட்டிலக்கணமெனக்கூறுவர். அவை யெல்லா மாட்டிலக்கணமும் பொருள்கோ ளிலக்கணமு மாகாமை யாண்டாண்டுக் கூறுதும்.

இனி யெல்லாரும் போக்கறு பனுவ லென்பதற் கிந் நூலையே பொருளாக்கினார். அங்ஙனங் கூறிற் பாண்டியன் கவியரங் கேறி னொருவனென்பது பெறப்படாமையானும், பாண்டிய னவையத்தென்ப தவனது கரும நடாத்து மமைச்சர தவையை விலக்கிக் கற்றார தவையை யுணர்த்தாமையானு, மெழுத்துமுறை காட்டித் தன்பெயர் தோற்றி யென்றமையானே யிந்நூல் பெறப் படுதலானும், பனுவற் பாண்டியனெனவும் பனுவலவையெனவும் பொருளுரைத்தலே பொருந்து மென்பது.

இதுவன்றிச் சிவஞானமுனிவர் போக்கறு பனுவலை யாசாற் குத் தெரிவித்தெனவு, மயங்கா மரபி னெழுத்தை யுலகிற்குக் காட்டி யெனவுங் கூறினார். அவ்வுரையாற் பனுவலு மெழுத்து மொன்றெனப்படாமல் வேறுவேறெனக் கொள்ளக் கிடத்தலி னவ்வுரை வழுவாதலை யறிக.

இனித் தெரிந்தென்பதற்கு விளங்கியெனப் பொருள்கூறி மரபின்வினை யாக்காது, கடாவறத் தெரிந்து கூறி யெனவுங், குற்றமற வாராய்ந்து கூறியெனவுந், தெரிவித்தெனவு, மாசிரியன் வினையாக்கி யம்மூவரு முரைத்தார். கடாவறத் தெரிதலுங், குற்ற மற வாராய்தலு நூல்செய்யுங்காலை வேண்டப்படலன்றி, நூலரங் கேற்றுங்காலை வேண்டப்படாமையானு, மோரேதுவு மின்றிக் கூறி யென்னுஞ் சொல் வருவித்தல் கூடாமையானுந், தெரிவித் தென்பது தெரிந்தெனநின்றதென விலக்கண மாகாமையானு மவருரை பொருந்தாவென்பது.

விகாரமு மன்றும். அவ்வாறு வருதலை யென்பனவு மப்பொருள; ஆலய மென்பது மதுவென மேற்காட்டிய வவர்கூற்றானு மறியப் படும்.

இனி யாவரென்பது யாரென்றாயினாற் போலச் செயப்படு பொருட் சொற்களே யங்ஙனஞ் செய்பொருட் சொற்களாக மரீஇயிற்றெனின் மரீஇவழங்குமாயி னச்சொல் லியற்சொற் போன்றே முடிவு கொளல் வேண்டுமென்றிப் பிறிது முடிபேற்றல் பொருந்தாமையானும், யான்கட்டின திவ்வீடென்புழிக் கட்டப் பட்டதெனக்கொள்ளி னெழுவாய்முடி பேலாமையானு மதுவும் பொருந்தாது.

இனி யாசிரியன் கட்டளையோவென வாராயி னிவ்வாசிரியர் தமிழ்வழக்கு நோக்கி, வினைமுதல்வாய்பாட்டுச்சொல்லே யெனவு, மவை தமக்குரிய வினைமுதற்பொரு ளுணர்த்தாமற் செயப்படு பொரு ளுணர்த்தன் மரபுவழுவமைதி யெனவுங்கொண்டு,

* "செயப்படு பொருளைச் செய்தது போலத்
தொழிற்படக் கிளத்தலும் வழக்கியன் மரபே."

என்றமையானே படுவிகுதி தொகுமென லாசிரியன்கருத் தன்றென்பது விளங்கும்.

இனி வடநூன் முறைபற்றி யந்தர்ப்பாவித ணிச்சாகக் கொள்ளுது மெனின், னிவ்வாசிரிய னைந்திரநிறைந்தோ னாகலி னாலுட்கூறும்; அங்ஙனங் கூறாமையானே யதுவும் பொருந்தாது.

இதுபோலவே முன்னோர்நூலொடு முரணும் உரைத்த விடத்தும் பரிமேலழகரைச் சிவஞானமுனிவர் கூறுங் குற்றங்க ளின்னும் பலவுள. அதுபற்றி யவற்றை மெய்யெனக் கொண் டவ்வுரைகளைத் திருத்தினாரு முளர். இதனறிக.

இனி யந்தர்ப்பாவிதணிச் சென்னும் வடநூன் முறையை யாசிரியன் கொள்ளாமை யென்னையோவெனிற் கூறுதும். வட நூலார் பொருட்க ளுள்ள வாண்மை பெண்மை யலியு மொருமை யிருமை பன்மையுங் கருதாம லவற்றைச் சொற்கட் பாவனையாற் கொண்டு கூறுவர். இது தாரங் களத்திர முதலாய சொற்களை யாணென்று மலியென்று மொருத்தியைக் குறித்தவிடத்தும்

* தொல், சொல், உசஅ.

பன்மையென்றுங் கூறுமாற்றான் விளங்கும். அவ ரிவ்வாறு பாவித்துக் கொள்ளற் பாலவாய விலக்கணம் பலகூறுவ ராகலின், விகுதிமுதலாயவை முதனிலையொடு கூடி வழங்காவிடத்து மச் சொல்லி லவை புணர்ந்து கெட்டனவெனப் பாவனையாற் கோட லம்மொழிக்கே யுரிய சிறப்பியல் பாயிற்று.

இனித் தமிழ்நூலார் பாவனையா லொன்றுங் கொள்ளாமற் பொருட்க ளுள்ள வியல்புபற்றியே யாண்மை பெண்மையு மொருமைபன்மையும் பிறவுங் கூறுபவாகலின், விகுதிமுதலா யவை முதனிலையொடு கூடிவழங்குமிடத்து விகாரமின்றி வழங்கு தலும், விகாரம் பெறுமிடத்து முழுதுங் கெடுதலாகிய விகாரம் பெறி னுண் டின்னது கெட்டதென் றறித லரிதாகலின் முழுதுங் கெடலின்றிச், சிறுமரங் காலத்தாற் பெரிதாகலும் பெருமரந் தச்சனாற் சிறிதாகலு மவை நெருப்பாற் கரியவாகலும் போல, யாதானும் பிறிதொரு விகாரம் பெற்று வழங்கலுந் தமிழ்மொழிக் கியல்பாயிற்று.

இவ்வா றிருமொழிக்கும் வேறுபாடு மிகவுடைமையான் வடமொழிக்கே யுரிய வந்தர்ப்பாவிதணிச்சு முதலாய விலக்க ணங்களை யாசிரியர் தமிழிற் கொள்ளாராயினர். ஆங்ஙன மாக வுந் தம்மை யவரினு நுண்ணறி வுணர்ந்தாராக மதித்துப் பிர யோகவிவேக நூலார் முதலாயினூர் மரபுநிலை திரியப் பலகூறித் தொல்காப்பியனார் கருத்துணராது தபுவென்பதை யந்தர்ப்பாவித ணிச்சென்பர் தொல்காப்பியரெனவுங்கூறினார். அவை யெல்லா மிலக்கண மாகாமை யறிக.

இன்னுந் தெரிவித்தென்பது விவ்விகுதி தொக்குத் தெரிந் தென நிற்கு மென்பது தமிழிற் கொள்ளப்படு மிலக்கண மாயிற், றபுவியென்பதூஉ மிவ்விகுதி தொக்குத் தபுவென நின்றதெனக் கொள்ளப்படு மாகலி னாசிரியர்,

* "உப்ப கார மொன்றென மொழிப
இருவயி னிலையும் பொருட்டா கும்மே."

என வத்தபு வென்னுஞ் சொற் கிலக்கணங்கூறல் பயனின்

*தொல், எழுத்து, மொழிமரபு, ௩௩.

ருக முடியும்; அல்லதூஉ மூரவர் பொற்றொடியாள் வெள்ளா டையான் முதலாய சொற்களே விகுதிகுன்றி, ஊர் பொற்றொடி வெள்ளாடை முதலியவாக நின்றனவெனக் கொள்ளப்படுமாகலி, னவற்றை யாகுபெயரெனலு மன்மொழித்தொகையெனலு மிகை யெனவும்படும்; இன்னுஞ் செயப்பாட்டு வினையுட் படுவிகுதி தொகுமாயிற் றூமறை முதல்குறைந்து மறையென நிற்பினும் வழாநிலையே யாயினாற்போலத் திண்ணை மெழுகிற் றென்பது முத லாயவும் வழாநிலை யாகவே முடிதலிற் † செயப்படு பொருளைச் செய்தது போல வென வழுவமைத்தலும் பொருந்தாவாம்; இன்னு மிவ்விலக்கணங் கொள்ளி னுண்ணப்பட்ட சோறென்பதே படு விகுதிதொக் குண்டசோறென நின்றதென்று கொள்ளப்பட்டுச் செயப்பாட்டுப் பெயரெச்சமே செயப்படுபொருளைக் கொண்ட தாக முடிதலிற், பெயரெச்சஞ் செயப்படுபொருளுங் கொள்ளு மென விதித்தலும் வேண்டாவாம்; இதுவன்றி யப்பெயரெச்ச மேனை நிலமுதலாய பெயர்கொள்ளுமிடத்து மப்பொருட் குரித் தாக யாதானுமொரு விகுதிகெட்டு நின்றதெனக் கொள்ளவும் படுமாகலான்,

> ‡ "நிலனும் பொருளுங் காலமுங் கருவியும்
> வினைமுதற் கிளவியும் வினையு முளப்பட
> வவ்வறு பொருட்குமோ ரன்ன வுரிமைய
> செய்யுஞ் செய்த வென்னுஞ் சொல்லே."

எனலுங் கூடாதாம்; ஈண்டுக்கூறியவாற்றா னெவ்வாற்றானு மவ்விலக்கணம் பொருந்தாமை யறிக.

இனித் தெரித்தென்பது செய்யுள் விகாரத்தாற் றெரிந்தென்று நின்றதெனக் கோடுமெனி, னதங்கோட் டாசாற் கிறபத் தெரித் தெனினுஞ் செய்யுளின்பங் கெடாமையான் யாதானுமொரு காரணமின்றி யவ்வாறு விகார மாகாதென்பது. இனி,

> $ "குடிமடிந்து குற்றம் பெருகு மடிமடிந்து
> மாண்ட வுஞற்றி லவர்க்கு."

என்புழிச் சிவஞானமுனிவர் கூறியவாறு விகுதிகெட்ட தெனக் கொள்ளிற், குடியை மடிவித்துக் குற்றமானது பெருகு

† தொல், சொல், வினையியல், சஅ. ‡ ஷை கூஎ. $ குறள், கூ0ச.

மென்ப தன்றே யுரையாக முடியும்; அவ்வாறு கூறிற் குற்றமே வினைமுதலாய்க் குடிமடிதற்குக் காரணமாகி விடுமாகலின், வள்ளுவனார் மடியின்மையென வதிகாரம் வகுத் தம்மடியின் றீமையை முன்னர் மூன்றுகுறளாற் கூறி, யக்குறளினு மம்மடியாற் குடியு மடிய வதனோ டிறக்குமியல்பு, மாண்பயனெய்தாமையு, மிடிபுரிந் தெள்ளுஞ்சொற் கேட்டலுந், தன்னொன்னார்க் கடிமைபுகுத்தலு மாகிய குற்றங்களும் பெருகுமெனக் கூறலா, னவ்வுரை யவர் கருத்துக்கு மாறாக முடிதலின் மடியவென்னு மெச்ச மடிந்தெ ன்று திரிந்ததென்ற பரிமேலழகருரையே பொருந்துமென்பது.

இன்னுங் § குடி பொன்றிக் குற்றமு மாங்கே தரு மென் புழியு $ மிருணீங்கி யின்பம் பயக்கு மென்புழியும் பொன்றுவித்து நீங்குவித்தெனச் சிவஞானமுனிவர் கூறிய வுரை பொருந்தாது. என்னை? கற்பித் தென்றவிடத்துக் கற்றலுங் கற்பித்தலு மாகிய விருவினை யாசிரியன் மாணாக்கனென்னு மிருவரிடத்து நிகழ்ந் தாற்போலப் பொன்றலும் பொன்றுவித்தலு மாகிய விருதொழிலு நீங்கலு நீங்குவித்தலு மாகிய விருதொழிலு மிருவேறு பொருளிடத்து நிகழாமையானு, நடுவின்றி நன்பொருள் வெஃகி னவ்வெஃகுதலாற் குடி தானே பொன்று மென்பதூஉ மருணீங்கி மாசறு காட்சியவர்க் கக்காட்சியா னிருடானே நீங்கு மென்ப தூஉங் கருத்தாகலானும், விவ்விகுதிப்பொருள் சிறவாது நிற்றலா னென்பது. இதனானே யவ்விடத்தும் பரிமேலழகருரையே யாசிரியர் கருத்துக்கு மாறுபடாத மாண்பிற்றெனக் கொள்க.

இனி யுரற்கால் யானை யொடித்துண் டெஞ்சிய யா வென் புழியுங், கோழி கூவிப் போது புலர்ந்த தென்புழியும், யானை யொடித்துண்ட பின்னர் யாமரந் தானே யெஞ்சுதலும், போது புலர்தற்குமுன் கோழி தானே கூவுதலு முடைய வாகலானும், யானை யொடித்தற் றொழிலு முண்ணுதற் றொழிலு முடைத்தாயி னாற்போல வெஞ்சுவிக்குந்தொழி லுடைத்தன் றாகலானும், போது புலர்தற்றொழி லுடைத்தாயினாற் போலக் கூவுவிக்குந் தொழி லுடைத்தன்றாகலானு, மவர்கூறிய விவ்விகுதிப்பொரு ளின்மை யான் யானை யொடித்துண்டபி னெஞ்சிய யா வெனவுங் கோழி கூவியபின் போது புலர்ந்த தெனவும் பொருள்கோடலே யமை வுடைத் தென்பது.

---

§ குறள், ௧௭௧. $ ஷை ௩௱௫௰௨

இனி யுண்டபின் கூவியபினென்னும் பின்னீற்று வினையெச்சங்களே யுண்டு கூவியெனத் திரிந்து நின்றனவெனக் கொள்க. அவற்றைப் பின்னென்னுங் காலப்பெயர் கொண்ட பெயரெச்சமெனல் பொருந்தாமை சொல்லினுட் கூறுதும்.

இனிப் பிரயோகவிவேக நூலார் கோழியைக் கூவுவித்தற்கும் யாமத்தை யெஞ்சுவித்தற்குங் காலமும் யானையுமேதுவாதலிற் சம்பாவிதமென்று கூறினாராகலின் விவ்விகுதிப் பொருளுண்மை பெறப்படுமாலெனின், காலமுணர்ந்துகூவுதல் கோழிக்கியற்கையாதலி னதனுணர்ச்சி யேதுவாதலன்றிக் காலமேதுவாகாமையானுங், காலமெல்லாத்தொழிற்கும் பொதுவகையா னேதுவாதலன்றிக் கூவுதற்கு மாத்திர மேதுவெனல் கூடாமையானும், யானையொடித்து முற்று முண்ணுமைக்குக் காரண மம்மரத்தி னியல்பன்றி, யானையி னியல்பாகாமையானும் பொருந்தாதென்பது.

இனி யரசனெடுத்த வாலயமென்பது மதுவென்றார். அங்ஙன மாயி னெடுப்பித்தற்றொழிற் கரசனே யியற்றுதற் கருத்தாவாம்; பிறவு மத்தன்மையவே யாகலி, னேவுதற் கருத்தாவெனவொன்றியாண்டுங் கொள்ளப்படா தொழிதல் காண்க.

இனி விபடு முதலாயின விருதிணை யைம்பாற் பொருளையுணர்த்தாமன் முதனிலைப் பொருளையுந் தன்வினை பிறவினை செய்வினை செயப்பாட்டுவினையென முதனிலையின் விகற்பங்களாகிய பொருளையுமுணர்த்தலிற், செம்மை சிறுமை முதலாயவற்று னிறுதிநிலை விகுதியெனக் கோடலின்றிப் பகுதிப்பொருள் விகுதியெனக் கொண்டாற்போலக் கொள்ளாமலே யிலக்கணமாகலான் விகுதியென்பதூஉம் பொருந்தாது. என்னை? விளங்கு விளக்கெனவுந், திருந்து திருத்தெனவும், பெருகு பெருக்கெனவு, மாடென்பதாட்டெனவும், போ போக்கெனவும், பாய் பாய்ச்செனவு, முருளுருட்டெனவு, நட நடத்தெனவு, மெழு வெழுப்பெனவுந், துயில் துயிற்றெனவு, மெல்லொற்று வல்லொற்றாகியு மிடையிலாயினுங் கடையிலாயினும் யாதானுமோரெழுத்துத் தோன்றியும் விகாரமுற்றுப் பிறவினை யுணர்த்துழி,விவ்விகுதி புணர்ந்து கெட்டதென்றுவது திரிந்ததென்றுவது கொள்ளாம லவரு மப்பொரு

ளுணர்த்த லப்பகுதிகளி னியல்பெனவே கோடலானும் *மாட்டேவித் தாலாரோருவ ராடாதாரே யென்புழியு, †முட்கப்படாஅ ரோளியிழப்ப ரென்புழியு மவ்விகுதிகள் பிறவினை செயப்பாட்டு வினையென்னு முதனிலைவிகற்ப மின்றி, யாட்டிறுலெனவு முட்கா ரெனவு முதனிலைப்பொருளையே யுணர்த்தலுங் காணப்படலானு மென்பது.

இன்னுஞ் சிவஞானமுனிவர் திரை நுரை யலை தளிர் பூக் காய் கனி முதலாயவும் வினைமுதற்பொரு ளுணர்த்து மிகரவிகுதி புணர்ந்து கெட்டன வென்றார். அங்ஙனமாயி னிலென்னுங் கடைக்குறைச் சொல்லே நீலமெனக் குறையாமலும் வழங்கு மாறுபோலத் திரைமுதலாயவுந் திரையி நுரையியென விகுதி புணர்ந்து கெடாமலும் வழங்கல்வேண்டும்; அவ்வாறின்மையானு, மிகரவிகுதி வில்லியெனவுங் காதலியெனவுமலரியெனவு மிருதிணை முப்பாலு முணர்த்தலி, னவ்விகுதி கெடி னிருதிணையு முணர்த் தலே முறையன்றி யஃறிணைமாத்திரையே யுணர்த்த லமையா மையானு, மமையுமெனின் வில்லிமுதலாயவும் விகுதிகெட்டு வில் காதலென நின் றவ்வப்பொருளை யுணர்த்தல் வேண்டும்; அவ்வாறின்மையானு, மீண்டு விகுதிபுணர்ந்து கெட்டனவெனக் கூறிய வவரு ‡ முயர்திணை யென்மனார் மக்கட்சுட்டே யென்பதன் கட் சுட்டென்பதற்கும் யாதானுமோர் விகுதிபுணர்ந்து கெட்டு நின்றதெனக் கூறிவிடாம லாகுபெயரெனவே மாறுகொளக் கூற லானு மது பொருந்தா தென்பது.

இனி யிகரம் வினைமுதற்பொரு ளுணர்த்தும் விகுதியு மன் றாம். என்னை? அன் ஆன் அள் ஆள் முதலாய விகுதிகள் வினைச் சொல்லின்க ணைம்பாற் பொருள்களு ளாண்பால் பெண்பான் முதலாய வொவ்வொரு பொருளையே யுணர்த்தலா னாண்பால் விகுதி பெண்பால் விகுதியெனப் பெயர்பெற லமையும்; அவ் வாறின்றி இ ஐ அம் அல் இல் உள் முதலாய விகுதிகள் வினை யாற் கொள்ளப்படு மியல்பினவாகிய வினைமுதலுங், கருவியு, நில முஞ், செயலுங், காலமுஞ் செயப்படு பொருளுமெனச் சொல் லப்பட்ட வறுவகைப்பொருளும் பிறவு முணர்த்தலி, னவற்று

* தேவாரம். † குறள், ௬௨௪. ‡ தொல், சொல். ௪.

றொன்றைமாத்திரஞ் சுட்டி. வினைமுதல் விகுதியெனப் பெயர்கூற லமையாமையானு மென்பது.

இனி யிகரமுதலாயவை யறுவகைப்பொருளு முணர்த்து மாறு கூறுதும். இகரவிகுதி நூற்றுவரைக்கொல்லி மகிடனைக் கொல்லி சேர்ந்தாரைக்கொல்லி யென்பவற்று ளாண்பால் பெண் பாலொன்றன்பா லென்னு முத்திறத்து வினைமுதலு, மண் வெட்டி முதலாயவற்றுட் கருவியுஞ், சேரியகழி யூருணி முதலாய வற்றுண் மக்கள் சேர்ந்தவிட மகழ்ந்தவிட மூரார் நீருண்ணுமிட மனப்பொருள்படலா னிலமுங், கலவி புலவி முதலாயவற்றுட் செயலும், புலரி யென்பதன்கட் காலமும், போற்றிமுதலாயவற் றுட் செயப்படுபொருளுமென வறுவகைப்பொருளு முணர்த்து மாறு காண்க. போற்றியென்பது போற்றப்படுவதெனப் பொருள் படும். விபங்கோளாயிற் போற்றுகவென்பது பொருள்.

இனி இ ஐ அம் என்னும் விகுதிகள் வினைமுதலுஞ்செயப் படுபொருளுங் கருவியுமாகிய மூன்று பொருளையே யுணர்த்து மெனவு மூருணி யென்பதனு ளிகரஞ் செயப்படுபொரு ளுணர்த்திற்றெனவும் பிறர் கூறுப. பிரயோகவிவேகநூலார் தண்ணுணி யூருணி யிவை முறையே கருத்தாவினுங் கருமத்தி னும் வந்து இகரஞ்சேர்ந்திறுங் கிருதந்தமென்றார். இகரமுதலா யவை யம்முப்பொருண் மாத்திர முணர்த்தா தறுவகைப்பொருளு முணர்த்த லீண்டுக் கூறியவாற்று னறியப்படு மாகலானு, இகரமுதலாயமூன்றேபோலப்பிறவிகுதிகளும் பலவுளவாகலானு, ஊருணியென்ப துண்ணப்படு நீரை யுணர்த்தாம லவ்வுண்ணீர் நிற்குமிடத்தையே குறித்தலிற் செயப்படுபொரு ளுணர்த்தா மையானு மவருரை பொருந்தாமை காண்க.

இனி ஐ விகுதி கண்ணறை பறவை வெள்ளை பச்சை முத லாயவற்றுள் வினைமுதலு, மொழுகுதற் கருவியாகிய சகடத்தை யுணர்த்து மொழுகை முதலாயவற்றுட் கருவியு, நடவை சேக்கை முதலாயவற்று ணிலமுங், கொலைமுதலாயவற்றுட் செயலும், வைகறை மாலை யென்பவற்றுட் காலமுந், தொடைமுதலாயவற் றுட் செயப்படுபொருளுமென வறுவகைப்பொருளு முணர்த்தல் காண்க. வெண்மை பசுமையென்னும் பண்புடனைவிகுதி புணர்ந்து

வெள்ளை பச்சையென முடிந்து வெண்மையுடைப் பொருளு பசுமையுடைப் பொருளு மாகிய பண்பியை யுணர்த்தும். வெ ணிறத்தோணாகிய பலதேவனை *மேழி வலனுயர்த்த வெள்ளையென் னிளங்கோவடிகளும். ஒழுகை சகடாதலைக் † குப்பை யுமண ருப்போ யொழுகை யெண்ணுப மாதோ வெனக் கபிலர் கூ மாற்றுனு மறிக. மாலை மயங்கற் காலமெனப் பொருள்படும்.

இனி அம் விகுதி யெச்சமுதலாயவற்றுள் வினைமுத நோக்கமுதலாயவற்றுட் கருவியுங், கூடுமிடமெனப் பொருள்ப கூடமுதலாயவற்று ணிலமும், பெருக்கமுதலாயவற்றுட் செய நந்துதற் காலமென விரவு குறித்தலி னத்தமென்பதன்கட் க மும், தேட்ட முதலாயவற்றுட் செயப்படுபொருளுமென வகைப்பொருளு முணர்த்தல் காண்க.

இனி அல்விகுதி யிளவல் வள்ள னெடுவ னெடுங்கழுத்த முதலாயவற்றுள் வினைமுதலுந், தோன்ற லண்ணல் வற்றன் லாயவற்றுள்ளு மவை தொழிற்பெய ராகாவழி வினைமுத தொழிற்பெயராயவழிச் செயலு, மிவன் பாண்டிய னிவன் சோ னிவன் சேரனென வரசரைத் தெரிதற்கு, மிவ னிரைகொள் வருகின்று னிவ னிரைமீட்க வருகின்றுனென்றுற்போல வி தெரிதற்குஞ் சிறந்த கருவியாகலின் மாலையெனப் பொருள்ப தெரியலின்கட் கருவியுந், துயிலிடத்தை யுணர்த்தும்வழிப் பா சாயல் முதலாயவற்று ணிலமும், பகுத்தற்காலங் கழிதற்க மெனப் பொருளுணர்த்தும்வழிப் பகல் வைகலென்பவற் காலமும், புழுக்கல் பிழியல் முதலாயவற்றுட் செயப்படுபொரு மென வறுவகைப் பொருளு முணர்த்தல் காண்க. பிணையய பூமாலையை யிணைப்புறு பிணையலெனத் திருமுருகாற்றுப்பபடை யுட்கூறினர் நக்கீரனரும்.

இனித் தோன்ற லண்ணல் வற்றன் முதலாய தொழி பெயரே யாகுபெயரான் வினைமுதலை யுணர்த்தினவெனக் கோ மெனி, னெடுங்கழுத்த லென்பதன்க ணல்விகுதி தொழிலையுண தாது வினைமுதற்பொருளை யுணர்த்தலானுங், காண லுண்ண முதலாயவற்றுட் பகுதிப்பொருள் விகுதியாய் நின்று தொழிலை

* "ஊர்காண்காதை, ௬. † புறம், ௧௧௪.

யுணர்த்தலானும், மவ்விகுதி தொழிற்பெயரை யன்றி யேனைப் பொருளுமுணர்த்தல் காணப்படலின், ஈண்டுந் தோன்றன் முதலாய வற்றுள் வினைமுதற் பொருளுணர்த்திற்றெனக் கோடலன்றி யாகுபெயரெனக் கோடல் வழுவா மென்பது.

இது நோக்கியே பரிமேலழகரும் § வற்றன் மரந்தளிர்த் தற்றென்புழி வற்றலை யாகுபெயரெனக்கூறாது பால்பகா வஃறிணைப் பெயரெனக் கூறினார். இவ்வாறே தொழிற்பெயர்ப் பொருளையும் பிறபொருளையு மொப்ப வுணர்த்துமவ் விகுதிக ளின்னும் பலவுள.

இனி இல்விகுதி குறினெடி லெச்சின் மிச்சில் வெய்யின் முதலாயவற்றுள் வினைமுதலுந், தொய்யி லட்டி லுச்சின் முதலாயவற்று ணிலமும், மெழின் முதலாயவற்றுட் செயலுங், கட்டின் முதலாயவற்றுட் செயப்படு பொருளுமென வினைமுதன் முதலாய பொருளுணர்த்த லறிக. கருவியுங் காலமு முணர்த்தல் வந்துழிக் காண்க. எஞ்சுவது, எச்சில். அடுமிடம், அட்டில். துஞ்சுமிடம், துச்சில். துஞ்சுதல், சின்னாட் டங்குதல். அஃதொதுக்கிடமாம். எழில், எழுதல். அதனை ¶ நுண்மா ணுழைபுல மில்லா னெழினல மென்புழிப் பரிமேலழக ருரையானு முணர்க.

இனி உள்விகுதி கடவுண் முதலாயவற்றுள் வினைமுதலு, முறையுண் முதலாயவற்றுளிடமும், விளையுண் முதலாயவற்றுட் செயலுஞ், செய்யுண் முதலாயவற்றுட் செயப்படுபொருளு மென வினைமுதன் முதலாய பொருளுணர்த்த லறிக. கருவியுங் காலமு முணர்த்தல் வந்துழிக்காண்க. விளையுளென்பது செயலேயன்றி விளைவிப்போரையு முணர்த்தும். இதனைத் || தள்ளா விளையுளு மென்னுங் குறளா னறிக. இவ்விகுதிகள் போல்வன வின்னும்பலவுள. அவையீண்டுக்கூறிய வறுவகைப்பொருளே யன்றிப் பிறபொருளுணர்த்தல் சிறுபான்மை. அவற்றைவழக்கு நோக்கிக் கண்டு கொள்க. பிறபொருள் இன்னதற் கிதுபய னென்பன. சுடலென்பதுசுடலினும்பயனாகியவடுவினையுணர்த்தும் வழிப் பயனுக் குதாரணமாக்குக. ஏனையது வந்துழிக்கொள்க.

இனி யீண்டுக் கூறியவாற்றானே திரைமுதலாய முதனிலை

---

§ திருக்குறள், ௭௮. ¶ ஷை, ௪௱௭. || ஷை, ௭௩௧.

யொடு பொருந்து மியல்பினவாகிய அன் ஆன் முதலாய விகுதி கள் பலவிருததலானு, மிகரவிகுதி திரை நுரை யென்றாற்போலு முதனிலைகளொடு புணரு மியல்பிற்றன் றாகலானு, மவற்றொடு புணருமியல் பின்றெனினும் புணர்ந்து கெடல் கூடுமெனி னதனை யறிதற்கு, மிகரவிகுதி யறுவகைப்பொருளு முணர்த்து மியல்பிற் றாகலி, னவ்விகுதி புணர்ந்துகெட்டவழி யப்பொருள்களுள் வினை முதற்பொருளை மாத்திர முணர்த்திற்றெனி னதனை யறிதற்கும், புணரு மியல்பினவாகிய அன் ஆன் முதலாயின வந்திரை முத லாயவற்றொடு புணராமற் புணருமியல் பில்லாதவைத்து மிகரமே புணர்ந்ததெனலை யறிதற்குங் கருவி யாதொன்று மின்மையானு, மவர் கூற்றுப் பயன் படாமையறிக.

இனித் திரைமுதலாய முதனிலைகள் வினைமுதற் பொருளை யுணர்த்துமா றென்னையெனின், ஒட்டு முற்றென்பன வொட்டு வது முற்றுவதெனப் பொருள்படுமிடத்து வினைமுதலும், பூட் டென்பது பூட்டற்கருவியை யுணர்த்தும்வழிக் கருவியும், பற் றென்பது பற்றுமிடத்தை யுணர்த்தும்வழி நிலமுஞ், சுட்டென் பது சுட்டப்படுபொருளையுணர்த்தும்வழிச்செயப்படு பொருளுங் கத்திவெட்டென்பு, ததனாலாய வடுவை யுணர்த்தும் வழிப் பயனு மென வினைகொண்டு முடியும் பெயருள்ளே தொழிலொழிந்த வேனைப்பொருள்களை யாகுபெயரா னுணர்த்தினாற்போல, வீண்டுந் திரைமுதலாய வவை தொழிற்பண்பாகலிற், பண்புகொள்பெயரு மாகுபெயர்க் கிளவியென வாசிரியர் கூறுமாற்றா, னத்தொழிற் பண்புகொள்ளும் பொருள்களுள் வினைமுதற் பொருளை யாகு பெயரா னுணர்த்தின வென்பது. காலமுணர்த்தல் வந்துழிக் கொள்க.

இனித் திரைமுதலாயின தல் அல் கை முதலாய பகுதிப் பொருள் விகுதிகளு ளொன்று பெற்றேனும் பெறாது நின்றேனுந் தொழிலுணர்த்தும்வழி, யது பிறிதொருபொருளாகா தியற் பெயர்ப் பொருளை யாகலி னாகுபெயரெனப்படா.

இனித் திரைமுதலாய முதனிலைக ளாகுபெயராகிப் பிற பொரு ளுணர்த்துமெனக் கொள்ளாது நடமுதலாய முதனிலைக ளோசை வேறுபாட்டான் முற்றுப்பொரு ளுணர்த்துமாறுபோல, வீண்டு மோசைவேறுபாட்டானே யியற்பெயர்ப் பொருளையும்

பிறபொருளை யுமுணர்த்துமெனக் கொண்டா லென்னையோவெனி னதுபொருந்தாது. என்னை? வனைப்பொருட்பெயர்முதலாயசொற்க ளியற்பெயர்ப் பொரு ளுணர்த்தாது பிறபொரு ளுணர்த்தும்வழி யவை யோசைவேறுபாட்டா லுணர்த்தினவெனக் கொள்ளாம லாகுபெயரெனவே யாவருங் கோடலானும், † மொழிப்படுத் திசைப் பினுந் தெரிந்துவே றிசைப்பினு மெழுத்திய றிரியாவென் றாசிரியர் கூறலானவற்றைத் தனித்துக் கூறினு மொழிப்படுத்துக்கூறினுமியல் வேறுபடாமையி னோசையும் வேறுபடாவென்பது பெறப்பட லானும், மோசை வேறுபடுமெனி னஃதுணாக்குங்காலை யன்றி வரி வடிவாகிய நூலுரைகளி லறியப்படாமையானும், நச்சினார்க்கினியரு மிலக்கணக் கொத்து நூலார் முதலாயினாரு மாசிரியர் கருத்து நோக்காமையாற் சொற்க ளோசை வேறுபட்டு வேறு வேறு பொருளுணர்த்துமெனக் கூறல் கொள்ளப்படாமையானு மென்பது.

இனிச் சிவஞானமுனிவர் நட வா முதலாய முதனிலையெல் லாம் விகுதியோ டன்றித் தனித்தியங்கா வென்று, மம்முதனிலைக ளுரிச்சொல் லாகலிற் பெயர்த்தன்மைப் பட்டுழி யல்ல தாகுபெய ராதற் கேலாவென்றுங் கூறலாற், றிரைமுதலாய முதனிலைகளும் விகுதியின்மையாற் றனித்தியங்கலு முரிச்சொல்லாகலி னாகுபெய ராகலு மேலாவெனி னது பொருந்தாது. எனனை; இருதிணை யைம்பாற் பொருளின் குணப்பண்பை யுணர்த்துஞ் சொற்களுட் சிறு பெரு முதலாயின சிறுமை பெருமையென மையென்னும் பகுதிப்பொருள் விகுதி பெற்றுங், கருவென்பது கருமையென வுங் காரெனவும் பகுதிப்பொருள் விகுதி பெற்றாயினு மதனைப் பெறாது திரிந்தாயினு நின்றும், வட்ட முதலாயின விகுதிபெறா தியல்பாக நின்றுந், துவரென்பது துவரெனவுந் துவர்ப்பெனவும் விகுதிபெறாதாயினும் பெற்றாயினு நின்றும் பெயர்த்தன்மை யெய் தல் காணப்படலானு, மவ்வாறே தொழிற்பண்புச் சொற்களுள்ளு நடவாமுதலாயின நடத்தல் வருத லெனவு, நடக்கை வருகை யெனவு, நடப்பு வரவெனவுந் தல்முதலாய பகுதிப்பொருள் விகு திகளுள் யாதானு மொன்று பெற்றும், விடு கெடு முதலாயின விடுதல் கெடுதலென விகுதிபெற்றும், வீடு கேடெனத்திரிந்துந், தொழில் வினை சண்டை கூத்து முதலாயின விகுதிபெறாம லியல்

† தொல், எழுத்து, மொழிமரபு, உ௰.

புாகவே நின்றும், வளைமுதலாயின விகுதிபெறுமலும், வளைதல் வளைவென யாதானுமொரு விகுதிபெற்றும், பெயர்த்தன்மை யெய்து மாகலானுங், கட்டு வெட்டு பற்று முதலாயின விகுதி யின்றியே பெயர்த்தன்மை யெய்த லுலகவழக்கினும் பரந்து காணப்படலானு, மவை செய்யுளின் வழங்குமிடத்து மவற்றை விகுதிகெட்ட தொழிற்பெய ரென்னுது முதனிலைத் தொழிற் பெய ரென்றே யாவருங் கூறலானுந், தல் முதலாயவை விகுதிக் குரிய பிறிதொரு பொருளை யுணர்த்தாது பகுதிக்குரிய பொரு ளையே யுணர்த்தலா, னப்பகுதி பொருள்விகுதி பெறுவிடினு முதனிலை தம் பொருளையே யுணர்த்தலிற் பெயராதல் வழுவாகா மையானும், விகுதி யின்றி நின்ற சுட்டென்னு முதனிலையை யாகுபெயரெனத் தாமுங் கூறினாராகலானுந், திரைமுதலாய முத னிலைகள் விகுதிபெற்றே யியங்கல் வேண்டுமென்னு நியமமின்றி, விகுதிபெறுவிடத்துந் தனித்தியங்கலும் பெயர்த்தன்மை யெய் தலு மாதுபெயராதலு மிலக்கணமாத லுணரப்படுமினென்பது.

இன்னு மவர் எழுது உண் தின் கொள் என்றற் போல்வன வுஞ் செயப்படுபொருண்மை யுணர்த்து மைகாரவிகுதி புணர்ந்து கெட்டுத் தகார மிரட்டித்து முதனீண்டு மெழுத்தெனவு மூணென வுந் தீனெனவுங் கோளெனவு நின்றன வென்று, நடவை சேக்கை முதலாயவற்று ளைகாரஞ் செயப்படுபொருளை யுணர்த்தலா னவ்வைகாரமே எழுது உண் முதலாய முதனிலையொடு புணர்ந்து கெட்டன வென்றுங் கூறினர்; அதுவும் பொருந்தாது. என்னை? விகுதி புணர்ந்து கெடுவது தமிழியல் பன்றென முன்னரே கூறினு மாகலானும், விகாரமெனி னெழுதை யுண்ணையென விகார மின்றியும் வழங்கல்வேண்டு மாகலானு மென்பது. இதுவன்றி நடவென்பது செயப்படுபொருள் குன்றிய முதனிலை யாகலி, னது செயப்படுபொருள் விகுதியொடு கூடி நடவையெனவாராமையு மறிக. இங்ஙனமாக வவர் நடவையென்பதன்க ணைகாரஞ் செயப் படுபொருளை யுணர்த்திற்றெனக் கூறினர். இதனானு மவர் பருப் பொருட்டு மாராயா தெழுதிச் சென்றமை புலப்படும்.

இனிக் கற்றற்குச் செயப்படுபொருளாகிய நூலினையுணர்த் தாமற் கற்கப்படுவோ னென்பதன்கட் படுவென்ப தாசிரியனை

யுணர்த்துமா றென்னையெனின், ஞண்டுச் செயப்படுபொருண்மை யின் வாராமற் பிறவினைப் பொருண்மைபற்றி வந்தமையா னமையு மென்பது.

இனி ஊண் முதலாயவை செயப்படுபொரு ளுணர்த்துமா றென்னையோவெனின், விளங்கு பெருகு மடங்கு முதலாய முத னிலைகள் விளக்கு பெருக்கு மடக்கெனத் திரிந்து விளங்குவது பெருகுவது மடங்குவதெனப் பொருள்படுமிடத்து வினை முத லுக், கெடுவென்பது கேடெனத் திரிந்தொருவன் கெடுதற்குக் காரணமாய தீவினையை யுணர்த்தும்வழிக் கருவியு, நீந்து முடங்கு இடுகு என்பன நீத்து முடக்கு இடுக்கெனத் திரிந்து நீந்து மிடத்தையு முடங்கு மிடத்தையு மிடுகு மிடத்தையு முணர்த்தும் வழி நிலமும், பாடு சூடு கருது முதலாயின பாட்டு சூட்டு கருத் தெனத்திரிந்து பாடப்படுவது சூடப்படுவது கருதப்படுவதெனப் பொருள்படும்வழிச் செயப்படுபொருளுஞ், சுடுவென்பது சூ டெனத்திரிந்துசுடுதலானாகியவடு வினை யுணர்த்துமிடத்துப் பயனு மென வினைகொள்வவற்றுள்ளே தொழிலொழிந்த வேனைப் பொருள்களை யாகுபெயரா னுணர்த்துமாறுபோல, எழுது உண் முத லாய முதனிலைகளும் எழுத்து ஊண் முதலியவாகத் திரிந்து தொழிற்பெயர்ப்பொருளையு மாகுபெயராகிச்செயப்படுபொருளையு முணர்த்துமென்பது முதனிலை திரிந் தாகுபெயராகிக் காலத்தை யுணர்த்தல் வந்துழிக் கொள்க

இனித் தோன்ற லண்ணல் வற்றன் முதலாயவை வினைமுதற் பொருளை யுணர்த்துமிடத்துத் தொழிற்பெயராகுபெயராகி யப் பொருளை யுணர்த்திற்றெனக்கொள்ளாமல்லல்விகுதியே வினைமுதற் பொருளை யுணர்த்திற்றெனக் கொண்டாற்போல, எழுத்து ஊண் முதலாயவையுந் தொழிலொழிந்த பிறபொரு ளுணர்த்தும் வழி, யாகுபெயரெனக் கொள்ளாம லெழுது முதலாய முதனிலைகளின் விகாரமே தொழிலொடு பிறபொருளையு மொருங்குணர்த்து மாற்ற லுடைத்தெனக் கொண்டா லென்னையோ வெனின், அல் விகுதி நெடுங்கழுத்த ளிளவன் முதலாயவற்று ளெம்முதனிலையின் வேறாக நின்று, கழுத்து மிளமையு முதலாய வம்முதனிலைப்பொரு ளுணர்த்தாமற் பிறபொரு ளுணர்த்தல் காண்டலி, னதுபோலவே

தோன்றன் முதலாயவற்றுட் பிறபொரு ளுணர்த்திற்றென லமையு மாகலானு, மவ்விகார முதனிலைக்கு வேறுகாமையானு, முதனிலையின்வேறாய பொருளை யிறுதிநிலை யுணர்த்தலன்றி யம் முதனிலையே யுணர்த்தல் கூடாமையானும், வேறாய பொருளை முத னிலையு முணர்த்துமாயி னாகுபெய ரெனப்படு மன்றி யியற்பெய ரெனல் கூடாமையானு மங்ஙனங் கோட லமையாது. இவ்வாற் றான் முதனிலை விகாரந் தொழிலாகிய தன்பொருளையே யுணர்த்து மென்பதூஉ, மத்தொழி லாகுபெயராகிப் பிறபொருளுமுணர்த்து மென்பது மமையு மென்பது.

இனி யுற்றான் பெற்றான் தொட்டான் முதலாயவற்று ளுறு பெறு தொடு முதலாய முதனிலை விகாரமே யிடைநிலையா னுணரு மிறந்தகாலப் பொருளை யுணர்த்தலி, னவ்வாறே பெழுந்து முத லாயவற்று ளெழுந்து முதலாய முதனிலையின் விகாரமே விகுதிப் பொரு ளுணர்த்திற்றெனக் கொள்ளுது மெனி னதுவும் பொருந் காது ; என்னை? ஆண்டுக் காலமென்பது காலத்து நிகழும் வினை யின் புடைபெயர்ச்சியே யாகலானு, மப்புடைபெயர்ச்சிவினை முதனிலையின் பொருளை யன்றிப் பிறிதொருபொரு ளாகாமை யானு, மக்காலப்பொருளு ளெதிர்காலத்தை யிடைநிலையே யன்றி விகாரமும் விகுதியும் பெறாத நடமுதலாய முன்னிலை யேவல் வினைகளு, மிடைநிலையும் விகாரமு மின்றி இகர முதலாய விகுதிபெற்ற வாழ்தி முதலாய வினைகளு முணர்த்தலானு, மிறந்தகாலத்தை யிடைநிலை யின்றி விகாரமும் விகுதியும் பெற்ற முற்கூறிய வுற்றான் பெற்றான் முதலாயவினைக ளுணர்த்த லானு, மிறந்தகாலத்தையு மெதிர்காலத்தையு மிடைநிலையின்றி மன் ஆர் இசின் முதலாய விடைச்சொல்லேனும் பது று டு முத லாய விகுதியேனும் பெற்று, விகாரமுற்றாயினு மின்றியாயினு நின்று, என்மனார் கேட்டிசின் என்ப வந்தும் வருதும் சென் றும் சேறும் காண்டும் கண்டுமென்பன முதலாய வினைக ளுணர்த்த லானு, முதனிலைப்பொரு ளுணர்த்தாது முதனிலையின்வேறாகிய விருதிணை யைம்பாற் பொருளை யுணர்த்து மியல்புடையது விகு தியே யாகலி னப்பொருளை முதனிலை யுணர்த்துமெனல் கூடாமை யானுங், கூடுமெனின் முதனிலைவினையே யன்றி யேனைய மலைமுத

லாய பிற பெயர்முதனிலைகளும் விகாரமுற்று மலையன் முதலாய விகுதிப்பொருளுணர்த்தலும் வேண்டுமாகலானு மென்பது.

இனி என்மனார் என்றிசின் முதலாயின மன் இசின் முதலாய விடை நிலையாற் கால முணர்த்துமெனவும், வந்தும்வருது முத லாயின விகுதியாற் கால முணர்த்துமெனவு, மன் இசின் முத லாயன காலவிடைநிலை யெனவுஞ், சேனாவரையருஞ் சிவஞான முனிவரு நன்னூலாரு முதலாயினர் கூறுப. அவை பொருந் தாமை பின்னர்க்கூறுதும்.

சொற்களுள் யாதாயினுமொன்று நின்றாங்குநின் றாகுபெய ராகு மன்றித் திரிந்துநின் றாகுபெய ராகாதெனச் சிவஞானமுனி வருஞ் சேனாவரையருங்கூறினமையா னெழுதுமுதலாயமுதனிலை யெழுத்தென்றாற்போலத் திரிந் தாகுபெய ராத லேலாதெனிற், கருமையென்பது காரெனத் திரிந்து தன்னியற்பெயர்ப் பொரு ளையு மாகுபெயராகி மேகத்தையு முணர்த்தலானு, மியற்பெயர்ப் பொரு ளுணர்த்தல் கருமையின் திரிபாகிய காரென்பது முத னிலையாகி யிகரவிகுதியொடு புணர்ந்து காரியென நின்று கரியபொரு ளுணர்த்தலுங் காராவென்றாற்போல வடையாகி நிற் றலு முடைமையா னுணரப்படு மாகலானு, மாகுபெயராதல் கார் மேகத்தைக் காரெனவுங் கூறலா னுணரப்படு மாகலானுந், திரிந் தாகுபெய ராகா தென்பாருங் கருமை திரிந்த காரினை யாகுபெய ரென்றே கூறினாராகலானு, முதனிலைகள் விகுதிபுணர்ந்து கெட் டாயினும் விகாரமுற்றாயினும் விகுதிப்பொரு ளுணர்த்தாமை மேற்கூறின மாகலானு மது பொருந்தாதென்பது.

இன்னும் அடுவென்பது முதலாய முதனிலை பல ஆடு முத லாயவாகத் திரிந்து வென்றி முதலாயவற்றை யாகுபெயரா னுணர்த்தலல்லது திரியாதுநின்றே யாகுபெயராக வாராமை யானு, மூரென்பது முதலாய பலசொற்க டிரியாதுநின்றே யியற் பெயர்ப்பொருளையு மாகுபெயராகிப் பிறபொருளையு முணர்த்த லானுந், தொல்காப்பியனென்றாற்போலு முயர்திணைப் பெயர்சில திரியாது நிற்பி னாகுபெயராகா தியற்பெயர்ப் பொருளையுந் தொல் காப்பியமென்றாற்போலத் திரிந்துநிற்பி னியற்பெயர்ப் பொருளை

புணர்த்தாம லாகுபெயராகி நாலையு முணர்த்தலானுஞ், சொற்கள் பெரும்பான்மை நின்றாங்குநின்றே யியற்பெயர்ப் பொருளு மாகுபெயர்ப் பொருளு முணர்த்தலுஞ், சிறுபான்மை நின்றாங்கு நின்றவிடத் தாகுபெயராகா தியற்பெயர்ப் பொருளையே யுணர்த்தித் திரிந்தவிடத் திருவகைப் பொருளையு முணர்த்தலுஞ், சிறுபான்மை திரிந்துநின்றவழி யியற்பெயர்ப்பொரு ளுணர்த்தாதாகுபெயராகிப் பிறிதுபொருளையே யுணர்த்தலு மறியப்படுமாகலின், எழுது உண் தின் கொள் முதலாயவும் எழுத்து ஊண் தீன் கோள் எனத்திரிந் தியற்பெயர்ப்பொருளாகிய வெழுதுதன் முதலாய தொழிலையு, மாகுபெயராகி யெழுத்துக்கள் சோறு முதலாய பிறபொருளையு முணர்த்த லமைவுடைத் தென்பது.

இனி வள்ளுவரென்னு முயர்திணைப்பெயர் திரியாதுநின்று மாகுபெயராமாறென்னையெனின், னங்ஙன மாகாமை சொல்லுட் கூறுதும்.

இனித் தமிழியல்பு நோக்காது சேனாவரையர் கூறிய சொற்பற்றிச் சிவஞானமுனிவ ரகத்தியந் தொல்காப்பியங் கபிலமென்பன வாகுபெயராகாவெனவும், ஆன் விகுதி கெட்டுச் செயப்படுபொரு ளுணர்த்தும் அம் விகுதியோடு புணர்ந்தனவெனவு முரைத்தார் ; அஃ திலக்கணமன்று. என்னை ? அம்விகுதி எச்சந் தேட்ட நாட்ட முதலாயவற்றுள் எஞ்சு தேடு நாடு முதலாய வினைமுதனிலையொடு கூடியே வினைமுதற் பொருண் முதலாய வறுவகையு ளொருபொருளை யுணர்த்த லன்றிப், பெயர் முதனிலையொடு கூடி விகுதிப்பொரு ளுணர்த்தல் யாண்டு மின்மையானும், பெயர்முதனிலையொடு கூடிற் பகுதிப்பொருளையே யுணர்த்தல் குன்று சங்கு முதலாய பெயரொடு கூடிக் குன்றமெனவுஞ் சங்கமெனவு நின்றுழி விகுதிப்பொருள்களு ளொன்று முணர்த்தாமையா னறியப்படு மாகலானு, மவ்விகுதி பிறபெயரொடு கூடி விகுதிப்பொரு ளுணர்த்தாவிடினு மகத்தியன் றொல்காப்பியன் முதலாய வுயர்திணைப் பெயரொடு கூடியவழி யுணர்த்துமெனிற், றேடப்படுவன வெல்லாந் தேட்ட மாயினாற்போல வகத்தியன் முதலாய வவராற் செய்யப்படுவன வெல்லா மகத்தியமெனவுந் தொல்காப்பியமெனவுங் கபிலமெனவும் பெயர்பெறல்வேண்டும்;

அவ்வா றவர்செய்த தவமுதலாய பிறவற்றுக்கெல்லாம் பெயரா காம லவர்செய்த நூல்களையே யுணர்த்தலா னதுவும பொருந்தா மையானுஞ், செய்யென்ப தெல்லாத்தொழிற்கும் பொதுவாக லன்றி நூல்செய்தற்கு மாத்திரம் பெயராகாமையானு மென்பது.

இனி யவ்விருவரு நடவாய் வாரா யுண்ணுயென்றற் றொடக் கத்து முன்னிலை யேவ லொருமை யெதிர்கால வினைமுற்றுச் சொற்க ளாயென்னும் விகுதி குன்றி, நட வா வுண்ணென்றற் றொடக்கத்தனவாய் நின்றனவென்றார். அதுவும் பொருந்தாமை சொல்லுட் கூறுதும்; ஆண்டுக் காண்க.

இத்துணையுந் தெரிவித்தெதன்பது விவ்விகுதிகெட்டுத் தெரிந் தென நின்றதெனவு மதுபற்றி யவர்கூறிய பிறவு மறுக்கப் பட்டன.

இனிச் சிவஞானமுனிவர் முறைகாட்டி யென்பதற் கியற் றமிழை வேறுபிரித்து முறையானே யுலகிற் கறிவித் தென்றாரா லெனினென்பது மறுதலைக் கடா. அது பொருந்தாது, என்னை? முறைகாட்டியென விரண்டாவதாயி னவ்வேற்றுமை திரிபுடைமை யான் விகாரமின்றி யியல்பாதல் பொருந்துமன்றி முறையானே காட்டியென மூன்றாவதாகக் கொள்ளின்,

* "ஐகார விறுதிப் பெயர் நிலை முன்னர்
வேற்றுமை யாயின் வல்லெழுத்து மிகுமே"

என்னும் விதியான் முறைக்காட்டியென மிகுதலன்றி யியல்பாகாமையானு, மது முறைப்பட வெண்ணியென முன்னர்க் கூறியதனானு மறியக் கிடத்தலானும், பாயிரத்து ளவையரங் கேறலைக் கூறநிலை முறையன்றி யுலகிற் கறிவித்தலைக் கூற விலக் கணமன்மையானு மென்பது மாற்றம். இதனானே யவர் புணர் நிலை நோக்காமையு மறிக.

இனி யிளம்பூரணரு நச்சினார்க்கினியரு மயங்காத முறைமை யானே யெழுத்திலக்கணத்தினை முன்னர்க் காட்டியென வுரைத் தார். எழுத்துமுதன் மூன்றையுங் காட்டுமிடத்துக் காரணகா

* தொல் எழுத்து, உயிர்மயங்கியல், எஅ.

ரிய முறையான் முன்னர்க் காட்டப்படுவ தெழுத்தேயன்றிப் பிறிதொன் றின்மையானு, மதுமுறைப்பட வெண்ணி யென் றமை யானே பெறப்பட்டமையானும், விளங்கற்பொருட் டெழுத்து முறை காட்டியென வதனைப் பிரித்துக் கூறினரெனி, னவ்வாறே யெழுத்துக் காட்டிய பின்னர்ச் சொல்லு மதன்பின்னர்ப் பொரு ளுங் காட்டினரெனல் வேண்டு மாகலானு மவருரை பொருந்தா தென்பது.

இனிப் பிரயோக விவேக நூலார் வடமொழி தென்மொழி களின வேறுபாடு, முதனூல் வழிநூல்களி னிலக்கணமு, மைந் திர நிறைந்த தொல்காப்பியன் முந்துநூல் கண்டு தொகுத்தா னெனப் பாயிரத்துண் முதனூலை வேறுகூறி யிருத்தலு, மைந் திரம் பெயரை விசேடித்து நிற்றலு நோக்காது, தமக்குள்ள வட நூலபிமானமொன்றே தலைக்கொண்டைந்திர நிறைந்த தொல்காப் பிய னென்றமையா னைந்திரமே தொல்காப்பியத்துக்கு முதனூ லாமெனவு, மெதிர்முக வேற்றுமை பெயரது விகாரமென் றோ திய புலவனு முளனென்றமையா னகத்தியத்துக்குப் பாணி னீயமுதனூலாமெனவு,மிருமொழிக்கும் வேறுபாடுபெரிதாகவுஞ் சிறுபான்மையே யுளதெனவுந் தங்கருத்துச் சென்றுழிச்சென் றுரைத்தார். அவர் கூறியவாறு சிறிதுவேறுபா டிருப்பினு முத னூலுக்குச் சிறிதும் வேறுபாடின்றிக் கூறலே வழிநூ லிலக்கண மாகலி, னைந்திரமுதனூலுந் தொல்காப்பியம் வழிநூலு மாதற் கேலாமையானு, மைந்திரத்தின் வழித்தாகத் தொல்காப்பியஞ் செய்யப்படி னைந்திரத்துள்ளன முழுதுங் கூறுவிடினு மதற்கு மாறின்றியேனு மிருத்தல்வேண்டும்; அவ்வாறின்றென்ப தெழுத் ததிகாரத்துள் வடமொழி யெழுத்துப் பலவின்றி யவ்வடவெ ழுத்து ளில்லாதனவாகிய ற ன ழ எ ஒ என்பனவுஞ் சார்பெ ழுத்து மூன்றுமென வெட்டெழுத்தொடு முப்பத்துமூன்றே யெழுத்தென்பதுங் குறினெடின் முதலாகப்பல காரணக்குறியும் பிறவுங் கூறுமாற்றானறியப்படலானு, மவ்வாறே சொல்லினும் பொருளினும் பலவிருத்தலானும், வேற்றுமை முதலாய சில வொத்திருத்தலி னதுவு முதனூலாமெனி, னங்ஙனம் பல விவ் விருமொழிக்கே யன்றி யேனைய மொழிக்கு மொத்தலி, னவை

பொதுவியல் பாதலேயன்றி முதலெனப் படாமையானு, முந்து நூ னிறைந்த தொல்காப்பிய னைந்திரங் கண்டு முறைப்பட வெண்ணிப் புலந்தொகுத்தோனெனக் கூறும, லைந்திரநிறைந்த தொல்காப்பியன் முந்துநூல் கண்டு தொகுத்தோ னென்றமை யானே, யைந்திர முதனூலாகாதெனை விளங்குதலானு, மகத்தி யத்தை யருந்தவமுனிவ னுக்கிய முதனூலென முன்னோர் கூறினு ரன்றி வழிநூ லென்னுமையானு, மகத்திய னிறைவ னருள் பெற் றந்நூல் செய்தா னென்றுரன்றிப் பாணினீயங்கண்டு செய் தானெனக் கூறுமையானு, மகத்தியந் தலைச்சங்க மிரீஇய முத னூழி நூலாதலிற் கடைச்சங்கந் தோன்றிய பிற்காலத்துக் கலி யுகத் தொடக்கத்துச் செய்யப்பட்ட பாணினீயத்தின் வழிவந்த தெனல் காலமலை வாகலானும், பெயரது விகாரமென் றோதிய புலவனு முளனென வகத்தியத்துட் கூறியது பிருகற்பதிமுத லாய வானுலகத்துப் புலவரை யன்றி யகத்தியந் தொல்காப்பிய முதலாயின தோன்றியகாலத்திற்கு நெடுங்காலத்தின் பின்ன ரவதரித்த நிலவுலகத்துப் புலவராகிய பாணினி முனிவரைக் குறி யாமைபானு மவர் கூற்றுப் பொருந்தா தென்பது.

இனித் தொல்காப்பிய முந்துநூலையு மைந்திரத்தையு முத னூலாக வுடைமையி, னைந்திரத்திற் சிறிது வேறுபடலு மமையு மெனச் சிலர் கூறுப. அங்ஙன மாயி னைந்திரமு முந்து நூலுங் கண்டு தொகுத்தானெனக் கூறல் வேண்டும்; அங்ஙனங் கூறுமை யானு, முந்துநூலெனவே யைந்திரமு மடங்குமெனிற் பின்ன ரைந்திர நிறைந்த தொல்காப்பியனென வேறுகூற லமையாமை யானு மதுவும் பொருந்தா தென்பது.

இனித் தொல்காப்பிய னென்பதற்குப் பிறரெல்லாம் பழைய காப்பியக்குடியு ளுள்ளானென வுரைகூறினர்; காப்பியக்குடி சோழனாட்டின் கண்ணதோரூரெனவுஞ்சிலர்கூறுப; அது பொருந் தாது. என்னை? காப்பிய மென்ப தோரூரின் பெயராயி னக் காரணம் வெள்ளூரி லிருந்தமையான் வெள்ளூர்க் காப்பியனு ரென்னும் பெயருடையாருந் தொல்காப்பியனார் காலத்தவரு மா கிய விடைச்சங்கப் புலவரது பெயர்க் கேலாமையா னென்பது.

இனிக் கவிமரபின் 'வந்தவராகலிற் காப்பியரெனப் பெயர்

பெற்றாரெனல், வடமொழிப்பெயராகலானு மக்காலத்துத்தமிழின்கண் வடசொல் வாராமையானும் பொருந்தாதெனின், னிடைச்சங்கத்து நூல்களை முற்றக்கற்றுச் செய்த பெருங்கதையுள்ளும் பிறவிடத்தும் காப்பியமென்னும் வடசொல் வந்ததென வடியார்க்குநல்லார் கூறலானு, மாசிரியரகத்தியனாருந் தொல்காப்பியனாரு மேனையவாசிரியரு மிலக்கண முதாரணஞ்சூத்திரங் கரும மேது குஞ்சர மம்போதரங்க முதலாய பலவடசொற்களை நூலுட் கூறினாராகலானு, மாசிரியர் நாரதனார் செய்த தலைச்சங்கத்து நூலாகிய விசைநூல் பஞ்சபாரதீயமென வடசொற்பெயர் பெற்றமையானும் பொருந்து மென்பது.

இனிச் சிவஞானமுனிவர் கடைச்சங்கத்தாருட் களவியற் பொருள் கண்ட கணக்காயனார் மகனார் நக்கீர ரிடைச்சங்கத்தார்க்குங் கடைச்சங்கத்தார்க்கு நூலாயிற்றுத் தொல்காப்பியமென் றுரைசெய்தா ராகலி னென்று தாமு முரைத்தா ராகலி, னவருங் குமாரதெய்வங் கேட்டுக் குற்றமின்மை யாராய்ந்த வவ்வுரையை நக்கீரனா ருரையெனவே கொண்டாரென்பது போதரும். போதர வாலவாய்ப் பெருமானடிகளை நெற்றிக்கண் காட்டினுங் குற்றங் குற்றமேயெனக் கூறி வாதுசெய்த கல்விவீரராகிய நக்கீரனார் பெருமையு, மவ ருரையினைக் கேட்டுக் குற்றமின்மை யாராய்ந்த குமாரதெய்வத்தின் கூறுகிய தோலாச்செவியா ருருத்திரசன்மனார் பெருமையு, முரைகேட்டற் குரியா னுருத்திரசருமனுமெனக் கூறிய வசரீரியின் பெருமையு நோக்காமற், களவியலுரைக்கு மாறாகக் கேட்போராவா ரிவையாய்ந்தோ ரிதுகேட்டற் குரியா ரென்ப தென்றுங், கேட்டல் பாடங்கேட்ட லென்றும், யாப்பாவ திவை யாய்ந்த பின்ன ரிது கேட்கற்பாற் றென்ப தென்றுந், தம் மாதீனத்துச் சுவாமிநாததேசிகர்க்கு மாணாக்கராகலின் வழீஇக் கூறுரென நினைந்து, சங்கரநமச்சிவாயப்புலவ ரறியாது கூறிய வுரையினை மெய்யெனக்கொண்டு, தாமு மவ்வாறே கேட்போர்க்கும் யாப்புக்கும் வேறுபொருள் கூறி, நக்கீரனா ருரைத்தாங் குரைத்த விளம்பூரணர் முதலாயினாரை மறுத் திக்கருத் தறியாத வுரையாசிரியரை யுள்ளிட்டோரெல்லாரு நூலரங்கேறு மவைக் களத்துக் கேட்டாரைக் கேட்போரென்றுந், தொகுத்தன் முத

